# "யோகாசன பேராசிரியர்"

## வி. என். குமாரசாமி அவர்களின் வாழ்க்கை வரலாறு

எழுதியவர் :

**சீதாலட்சுமி குமாரசாமி**



வெளியிட்டோர் :—

குமார நிலையம்
216, T. H. ரோடு, சென்னை—21.

—()—

(உரிமை பதிவு) முதல் பதிப்பு 1955 விலை 2-0-0

lanshi Press, Madras-21.

# ஏட்டைப் புரட்டு முன்!

வீரனின் விளையாட்டு மேடை - விழுமியோர் பலர் குழுமியுள்ளனர் - ஊடே உடற்பயிற்சி வல்லுனன் - உடற்கூற்றின் பெருமையைக் காட்ட அங்கே அவனுக்கொரு நல் வாய்ப்பு - அநேக அற்புதங்களை நிகழ்த்துகிறான்- அவனுடைய அபார சாதனை கூடியுள்ளோரின் ஆரவாரத்தைக் கிளப்பியது.

நீண்ட கரகோஷம் - பயிற்சியாளருக்கு மீண்டும் மிக ஆர்வம் — தன் உடலையும் உள்ளத்தையும் ஒருங்கே அடக்கியாளும் ஒப்பற்ற சாதனை - அவன் முகத்திலே தேயாத இளமை; தீராத புன்முறுவல்! இந்த அற்புதக் காட்சி - அபார சாதனை - வியத்தகு விநோதம் - அதிசயத் தோற்றம்!

ஆம்! மனிதர்களின் மத்தியில் அவனை உயர்த்திக் காட்டியது; கூடியுள்ள கூர்மதியாளரின் பெரு மதிப்புக்குள்ளானான் — சிந்தையை அடக்கியே சும்மா இருக்கின்ற திறமிருந்தது, அவனுக்கு — சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வம் அவன்மீது தேசோமயானந்தத்தைப் பொழிந்தது. விருப்பப்படி அவனை விட்டிருந்தால் எண்ணற்ற விசித்திரங்களைக் காட்டி இருப்பான் - ஆனால்................

அந்தோ! புயலுக்குப் பின் ஏற்பட்ட நிலை! திடீரென்று விளக்குகள் அணைந்தன; திரை வீழ்ந்தது! ஆரவாரங்கள் இல்லை - அமைதி நிலவிற்று - மௌனம் குடி கொண்டது? இருண்ட மேடையிலே அந்த உடற்பயிற்சி வல்லுனன் இல்லை - மறைந்தான்!

இது கற்பனை அல்ல; காலக் கழுகால் கணப்பொழுதில் கொத்திச் செல்லப்பட்ட

நமது ஆசன ஆசானின் அற்புத வாழ்க்கைக்கு ஒப்பான பீடிகை!

"என்பும் உரியர் பிறர்க்கு" என வாழ்ந்த திரு வி. என். குமாரசாமி அவர்களின் நினைவு நாள், என் குடும்பத்திற்கு மட்டும் உரியதல்ல; ஆரோக்கியமும், ஆத்மீகமும் இரண்டறக்கலந்து சேவாதீட்சண்யத்தோடு நெடிது வாழ விழையும் தமிழர் அனைவருக்கும் உரியதேயாகும்.

பிறப்பும் இறப்பும் மனித வாழ்க்கையில் சாதாரணம் எனினும், மனிதப்பண்போடு வாழு கின்ற - வாழ்ந்து நின்ற சீரியர்களின் வாழ்க்கை மறைவதில்லை - அவர்களின் அபிலாஷைகள் தோற்றுவிடுவதும் இல்லை. மண்ணிய நூ எண்ணி யாங்கு எய்துவது இறவாத வாழ்வின் இலக் கணம். புறஉடல் நீத்துப் புகழும்பெய்தி அமர வாழ்வெய்தும் திரு வி. என். குமாரசாமி அவர் களின் முதலாவது நினைவு நாள் இன்று!

இப்புனித நாளை எங்ஙனம் சேவித்தால் நனி சிறக்கும்? அன்னாரின் ஆத்மாவிற்கும் சாந்தி பிறக்கும்?

இதுபற்றி நானும் எனது தமையனும் ஆலோசித்தோம்; "பிறர்க்குக்குரியரான அந் நல்லாரை குடும்பச் சிமிழில் அடைத்து, சிரார்த்த தினம் கொண்டாடி அவர் பெயரால் புரோகி தருக்குப் பிண்டமிட்டு உற்றோர், உறவினரோடு உண்டுகளிப்பது நலமல்ல; எனவே அவரின் இறுதி மூச்சை நிறைவேற்றி, அன்னாரின் இதய ஆசையை ஈடேற்றி வைத்தலே சாலப் பொருந் தும் சிலமிக்க செயல்" என்ற முடிவுக்கு வந்தோம்.

இந்த எண்ணத்தின் மருங்கில் எழுந்தது ஒரு சிந்தனை; அன்னாரின் வாழ்க்கை வர லாற்றை எழுதி வெளியிட விரும்பினோம்.

இதோ, விருப்பத்தை நிறைவேற்றி இருக்கிறேன்! இந்நூல் வெளியிட உதவிய அனைவருக்கும் நன்றியளித்து, தமிழ்ப் பெருங்குடி மக்களின் சன்னதிக்கு காணிக்கையாகப் பணிக்கிறேன்; ஏற்பார்களாக!

பெண்மைக்கு அவர் தந்த பெருமதிப்பையும், தேசபக்திக்கு அவர் தந்த நன்மதிப்பையும் ஆசனப் பயிற்சியின் வாயிலாக அவரை அறிமுகங்கொண்ட அனைவரும் - ஏன்? - இதர தமிழர்களும் புரிந்துகொள்ள உதவியாக இருக்கும்பொருட்டு இதனைப் பதிப்பிப்பதில் பெருமை கொள்ளுகிறேன். போதிய அவகாச மின்மையால் கட்டுக்கடங்காது, நீண்டுவிட்டது, இந்த வரலாற்றுச் சுவடி. குடும்ப நடப்புகளும், எனது வாழ்வின் ஒருபகுதியும் இடம்பெற்றிருந்தலினால் பக்கங்கள் பெருகினும் பயனுள்ளதாகவே அமைந்திருக்கின்றது.

அன்னாரின் நினைவாக இதை வெளியிடப் போகும் இதே சமயத்தில் அவரின் இதய ஆசையையும் நிறைவேற்ற வேண்டுமல்லவா?

ஆகவேதான் "தென்னிந்திய யோகாசன மத்திய ஸ்தாபனம்" நிர்மாணிக்கப் படுகின்றது. இதன் மூலம் ஆசனக் கலையை விருத்திசெய்ய நினைக்கிறேன்.

நினைவு நாளையும், யோகாசன மத்திய ஸ்தாபனத் துவக்க விழாவையும் சிறப்பித்துக் கொடுத்த சகல அறிஞர்களுக்கும், பெரியோர்களுக்கும், அன்பர்களுக்கும் எனது இதய பூர்வமான வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

தமிழர்களின் வாழ்க்கை நோயற்ற செல்வமாகக் குறைவற்றிருக்க வேண்டும் என்பது அன்னாரின் பேரவா! அதற்காகவே இயாகம்

செய்தார், தன் வாழ்வை. என் மிகுந்த வாழ்வை யும் அன்னாரின் லட்சியத்திற்கே அர்ப்பணித்து, தமிழ்ப் பெருமக்களுக்குமுன் சமர்ப்பிக்கிறேன்! நல்லாசி தந்து நலம் விளைய எல்லா உதவியை யும் செய்வார்களாக.

— வணக்கம் —

ஆரோக்கிய யோகாஸ்ரமம்
சென்னை-21.
20-9-55.

உங்கள் சகோதரி,
சீதாலக்ஷ்மி குமாரஸ்வாமி

# முன்னுரை.

திக்கெலாம் புகழும் தென் மதுரையில் தோன்றி, இளமையிலேயே தந்தையை இழந்து, வறுமையின் கொடுமைகளுக்காளாகி, பச்சிளம் பருவமான ஆறு வயதிலே பதினொரு வயது சென்ற தமக்கையுடனும், வயது முதிர்ந்த தாயாருடனும் கால்நடையாகப் புறப்பட்டுச் சத்திரங்களில் தங்கி, சாவடிகளில் இளைப்பாறித் தருமக் கட்டளை வாங்கிச் சமைத்துண்டு பசியாறி, நாள்தோறும் காததூரம் நடந்து சென்னை நகரத்தை நண்ணி, சொல்லுதற்கரிய தொல்லைகளுக்கிடையில் வாழ்ந்திருந்து, தமது ஊக்கத்தாலும் உழைப்பாலும் உண்மையாலும் ஆக்கம் பெற்று, சென்னை நகரத்துச் சிறந்த மக்களில் ஒருவராய், வடசென்னையின் மணிவிளக்காய்த் திகழ்ந்து, சென்ற ஆண்டு இந்நாளில் நம்மை விட்டுப் பிரிந்த அன்பர் வை. நா. குமாரசாமியின் சரித்திரத்திற்கு இந்த முகவுரையை எழுதத் தொடங்குகையில் எனது உள்ளத்தில் துன்பமும், இன்பமும் தொடர்ந்து வருகின்றன. என்னிலும் இளைஞராய், என்னிலும் இனியராய், என்னிலும் சிறந்தவராய், உயர்ந்தவராய் விளங்கிய குமாரசாமி எனக்கு முன்னே மறைந்துவிட, அவரைப்பற்றி இன்று நான் எழுத நேர்ந்ததே யென்ற சிந்தனையில் துன்பம். ஊக்கத்தால் ஆக்கம்பெற்று, உழைப்பால் சிறந்து, உண்மையால் உயர்ந்து, அன்பராய், அறிஞராய், அறப்பெருஞ் செல்வராய், தேசபக்தராய், தெய்வபக்தராய், மாசற்ற மணியாய் விளங்கிய குமாரசாமியைப் பற்றிச் சில நல்லுரைகள் கூறும் வாய்ப்பு கிடைத்தமை பற்றி இன்பம்.

இந்தச் சிறு நூலுக்கு முன்னுரை எழுதவேண்டிய பெரியார், எனது பழைமையான நண்பர் 'கல்கி' கிருஷ்ணமூர்த்தியாவார். அன்பர் குமாரசாமியுடன் என்னைவிட அதிகமாக நெருங்கிப் பழகும் வாய்ப்புப்பெற்ற நண்பர் கிருஷ்ணமூர்த்தி, 'குமாரசாமியார் நம்மை விட்டுப் பிரிந்த சில மாதங்களிலேயே—அவரைத் தேடிச் செல்பவரைப் போல நம்மை விட்டுப் பிரிந்து விட்டார். குமாரசாமியின் இந்த சரித்திரத்தை அவர் வாழ்க்கைத் துணையாய், வழித்

துணையாய், அவருடன் அல்லும் பகலும் நல்வாழ்க்கை வாழ்ந்திருந்த அவரது மனைவியார் சீதாலட்சுமி அம்மையாரே எழுத முற்பட்டது சாலவும் பொருத்த முடையதாகும். குமாரசாமி இளமையிலே வறுமையின் கொடுமையால் அடைந்த துன்பங்களையும் துயரங்களையும் விவரித்து, அவற்றால் மனம் தடுமாறுமல், உறுதியாக நின்று வாழ்க்கையில் வெற்றி வீரராக விளங்கிய வரலாற்றை அம்மையார் கண்ணாடிபோலப் படம் பிடித்துக் காட்டியிருக்கிறார். வறுமையில் வாழ்வு தொடங்கிய ஒருவர் செல்வராய் விட்டால் அது மட்டுமே வாழ்க்கையில் பெரிய வெற்றியென்று உலகம் கருதுகிறது. தேடிய செல்வத்தைத் தனக்குப் பயன்படுத்துவதோடு அமையாது, அதனை எல்லோருக்கும் பயன்படுமாறு செய்து நல்லவராக வாழ்வதே, செல்வம் பெற்றதனாலாய பயனாகும். செல்வர் குமாரசாமியின் சிறந்த வாழ்க்கையைச் சிந்திக்கும் பொழுது

அழல் மண்டு போழ்தில் அடைந்தவர்கட் கெல்லாம்
நிழல் மரம்போல் நேரொப்பத் தாங்கிப்—பழுமரம்போல்
பல்லார் பயன்துய்ப்பத் தான் வருந்தி வாழ்தலே
நல்லாண் மகற்கு கடன்.

ஊருணி நீர் நிறைந்தற்றே உலகவாம்
பேரறி வாளன் திரு.

என்ற நாலடியும், திருக்குறளும் எனது நினைவுக்கு வருகின்றன. நண்பர் குமாரசாமியின் செல்வத்தால் பயன்படாத பொதுஸ்தாபனம் தமிழ் நாட்டில் அதிகமாய் இல்லை என்று சொல்லிவிடலாம். ஏழை மக்கட்கு அவர் வாழவைக்கும் தந்தையாக, நண்பர்கட்கு அவர் உபகாரியாக விளங்கினார். நண்பர் குமாரசாமியின் அறப்பெரும் செயல்களை அவர் மனைவியார் அடக்கங் காரணமாக மிகச் சுருக்கமாகவே விளக்கி யிருக்கிறார்.

அன்பர் குமாரசாமியார் தேசத்தின்மீதும், தேசத் தந்தையாக விளங்கிய மகாத்மா காந்தி மீதும் கொண்டிருந்த பக்தி அளப் பரியது. தேசபக்தர்கட்கு அவர் நாயகமாக விளங்கினார்.

யோகாசனப் பயிற்சிக்காக அன்பர் குமாரசாமியார் செய்த சேவை தமிழ்நாட்டிற்கு ஒரு வகையில் புத்துயிர் அளித்து வருகிறதென்று சொல்லவேண்டும். யோகாசனப் பயிற்சி மக்கட்கு உடல் வலி மட்டுமின்றி, மன வலிமையையும் ஆத்ம பலத்தையும் அளிக்க வல்லது. தமிழ்நாட்டின் எதிர்கால மன்னர்களான இளைஞர்கள் புத்துயிரும் புது வாழ்வும் பெற்று வாழ்வதற்கு யோகாசனப் பயிற்சி சிறந்த துணை புரிவதாகும். இதனை அறிந்து தேசத் தலைவர்களும் அரசினரும் நாடெங்கும் ஊர்தோறும் யோகாசனப் பள்ளிகள் தோன்றுமாறு துணைபுரிவது அவர்கள் கடமையாகும். அன்பர் குமாரசாமியார் செய்துவந்த பல நல்ல பணிகளுடன் யோகாசனத் திருப்பணியை அவர் மனைவி மக்கள் தொடர்ந்து செய்து வருவது போற்றுதற்குரியது. பல நல்லறங்களுக்கு நிலைக்களமாக விளங்கும் குமாரசாமியாரின் திருமாளிகை, இன்று முதல் தென்னாட்டு யோகாசன நடு நிலையமாக விளங்கப்போவது மகிழ்ச்சிக்குரிய செய்தியாகும். இந்தப் பெரு நிலையம் வாழ்க என்று வாழ்த்துக் கூறுகின்றேன்.

கணவனைப் பற்றி மனைவியார் எழுதிய இந்தச் சரித்திரத்தால் மனைவியாரின் சரித்திரத்தையும் ஒருவாறு நாம் அறிகின்றோம். கொங்கு நாட்டில் தோன்றித் தொண்டைநாட்டுச் சென்னையில் வந்து குடியேறிய இந்த அம்மையார், நாட்டுப் பற்று மிகுந்த ஒரு வீர மங்கையாவார். பர்த்தாவுக்கு ஏற்ற பதிவிரதை. காந்தியடிகளின் அறப்போரில் இருமுறை சிறை புகுந்தவர். கணவருடன் மேற்கொண்ட திருப்பணிகள் அனைத்திலும் அவருடன் ஒன்றுபட்டு உழைத்தவர். அவர் இறந்தபின்னரும் அவர் செய்த திருப்பணிகளைத் தொடர்ந்து நடத்துகின்றவர். தமிழ் நாட்டின் எடுத்துக் காட்டாகக் காட்டக்கூடிய ஒரு திருமகள். அவர் தம் மக்களுடன் எல்லா நலன்களும் பெற்றுப் பல்லாண்டு வாழ்க என்று வாழ்த்துகின்றேன்.

ஒரு குமாரசாமி நம்மைவிட்டுப் பிரிந்துவிட்டார். ஆயினும் அவர் நம்மை தனியாக விட்டுவிடவில்லை. அவர் ஐந்து குமாரசாமிகளை நமக்கு விட்டுச் சென்றிருக்கிறார்.

குமாரசாமியின் மைந்தர்களான ஐந்து செல்வர்களும் தமது தந்தையார் வழியில் சென்று, ஐந்து குமாரசாமிகளாக விளங்க வேண்டுமென்பது எனது விருப்பம். அவரது ஒரே புதல்வி, தனது தந்தையார் காட்டிச் சென்ற நெறியி லும், தனது தாயார் காட்டி நிற்கும் வழியிலும் சென்று மற்றொரு சீதாலட்சுமியாக விளங்குவாராக.

இந்தச் சரித்திரம் தமிழ்நாட்டு இளைஞர்களுக்கும், முதியவர்களுக்கும் ஒரு சிறந்த வழிகாட்டியாக ஒளி காட்டும் என்பதில் ஐயமில்லை, அன்பர் குமாரசாமியின் திருப்பெயர் வாழ்க! அவர்மேற் கொண்ட நல்லறங்கள் வாழ்க! ஆண்டவன் எல்லோருக்கும் அருள்புரிவாராக என்று வாழ்த்தி இந்த முகவுரையை முடிக்கின்றேன்.

நல்ல குமார சாமி நமைப் பிரிந்தார்
சொல்லற் கரிய துயருற்றேம்—எல்லாம்
வல்ல சிவன் அருளால் வாழ்க அவர் குடும்பம்
எல்லோரும் போற்ற இனிது.

குரோம்பேட்டை,
சென்னை,
20—9—1955.

பாலி. சு. நெல்லையப்பன்.

## ஸ்ரீ வி. என். கே. அவர்களின் குடும்பம்

கீழே உட்கார்ந்திருப்பது:

1. *கடைசி மகன் ரவிசந்திரன்*
2. *பேத்தி ரமீலா*

மேலே உட்கார்ந்திருப்பது:

1. *மகள் ஜான்ஸிராணி*
2. *பேத்தி பிரமீலா*
3. *மூத்ததாரத்தின் மகள் துளசி*
4. *சீதாலக்ஷ்மி குமாரஸ்வாமி*
5. *வி. என். குமாரஸ்வாமி*
6. *மாப்பிள்ளை A. R. ராஜகோபால்*
7. *மூத்தகுமாரர் ஸ்ரீதரன்*

நிற்பது:

1. *மூன்றாவது குமாரர் கருணாகரன்*
2. *இரண்டாவது குமாரர் பிரபாகரன்*
3. *நான்காவது குமாரர் வித்யாதரன்*

# யோகாசன பேராசிரியர்

## (வாழ்க்கை வரலாறு)

## தோற்றம்

24-9-1955-ஆம் !

பல்லாயிரக்கணக்கான ஆசனப் பிரியர்களின் அபிமான ஆசான் உயர் திரு. V. N. குமாரசாமி அவர்கள் புகழுடம்பெய்தி இன்றுடன் முதலாம் ஆண்டு முற்றுப் பெறுகிறது. எளிமையும் தகைமையும் தனிசிறந்த அன்னாரின் பொன்னான வாழ்க்கை, ஆன்மீகபலத்திலும் தியாக சீலத்திலுமே இயங்கி வந்திருக்கின்றது.

விடுதலை வேள்வியிலும், தேசிய இயக்கப் போராட்டங்களிலும், அண்ணல் காந்தியடிகளின் ஒப்பற்றதலைமையிலே, சேவா தீட்சண்யம்பெற்ற திரு. குமாரசாமி அவர்களின் ஈடு இணையற்ற சேவை, யோகாசனப் பயிற்சியின்மூலம் தமிழகத்தின் புராதனப் பெருமைக்கு உச்சி கூட்டி இருக்கிறது என்பதுமட்டுமல்ல; தமிழ் சமுதாயத்தின் சுபிட்ச வாழ்க்கைக்கு உத்திரவாதமான பாதையையும் கோடிட்டுக்காட்டியுள்ளது! எண்ணற்ற தமிழர்களின் இதயத்தில் உறைந்து காலவேகத்திலே மறைந்த, யோகாசனப் பேராசிரியர் குமாரசாமி அவர்களின் நினைவு நாளில் அன்னாரின் வாழ்க்கை வரலாற்றை எழுதபெருமைப் படுகிறேன்.

வையை என்னும் பொய்யாக் குலக்கொடியின் வளஞ் செறிந்த திருநகராம் மதுரைப்பதியில், “செய்யுந் தொழில் அனைத்தும் சீர்தூக்கிப் பார்க்குங்கால் நெய்யுந்தொழிலுக்கு

திகரில்லை" என்றோதிப் பணியாற்றிடும் சௌராஷ்ட்ர மரபில் 1901 செப்டம்பர் 6-ஆம் நாள் வைத்தியம் நாகய்யர் என்பாருக்கும், ருக்மணி அம்மை என்ற புனிதவதிக்கும் திருமகனுய் அவதரித்த குமாரசாமி அவர்கட்கு, மூத்தாண்டு மூத்த சொர்ணம்மாள் என்ற தமக்கையாரும் சுந்தர ராஜன் என்ற அண்ணனும் உண்டு. உடன்பிறந்த பாசம் ஊழ்வலியிலும் பெரிதல்லவா ? திரு. குமாரஸ்வாமி துள்ளித் திரிகின்ற பருவத்திலே, வறுமையின் கருமை அவர்கள் குடும்பத்திலே படிந்திருந்தது. குழந்தைப் பருவத்திலே தந்தை மறைந்தார்-பெரிய மூத்தகுமாரன் சுந்தரராஜனுக்கு கலியாணம் முடித்து, மாமனர் வீட்டில் சேர்ந்து விட்டார். இவர்களை கவனிப்பதே கிடையாது. குழந்தைகளைப் பராமரிக்கும் பொறுப்பு தாயார் தமக்கு ஏற்பட்டது !

## தாய்மை

புட்டாப் புடவைக்குப் புகழ் பெறு மதுரை, பல ஆயிரக் கணக்கான சௌராஷ்டரக் குடும்பங்களைக் காத்து வந்தது; அவைகளில் கனத்த செல்வமுடையவர்களும் இல்லாமல் இல்லை; கஞ்சியின்றித் தவிப்பவர்களும் கணக்கற்றிருக்கத்தான் செய்தனர். அந்த அணியிலே பற்ருத வருவாயான ஆறு, எட்டு அணுக்களுக்குத் தனது உயிரைத் தேய்த்துப் பராமரித்துவந்தார், தன் குழந்தைகளை, திருவாட்டி ருக்மணி அம்மை. சுவையான உணவோ, சோபிதமான உடையோ அவர்களின் கண்களுக்குக்கூடக் கிட்டவில்லை; வறுமைப் பிசாசின் வஞ்சகக்கரங்களின் அரவணைப்பிலே அவர்களின் பால்யம் அடைக்கலமாயிற்று.

புட்டாப் புடவைக்குப் புள்ளிகட்டுவதே சுயஜாதித் தொழில்; இரு குழந்தைகளைக் காக்கும் பொறுப்போ டும் திறத்தோடும் பணியாற்றி வந்த அந்தத் தொழிலைக்கூட நீண்டநாட்கள் செய்து ஜீவிக்க முடியாத அபாக்கியத்தைத் தோற்றுவித்தது, இயற்கை! திரு. குமாரசாமி அவர்களின் தாயார், உற்று நோக்கி ஒழுங்காகப் புள்ளிகட்டி உழைத்து வந்தது, வயோதிகக் கண்களுக்கு வறட்சியை அளித்தது; கண்ணொளி மங்கி பார்வையின் கூர்மை தேய்ந்து, நீர்மல்கிய விழிகளுக்கும் கோளாறை உண்டாக்கிற்று. பார்வை குறைந்தநிலையில் இருபச்சைப்பசலைகளின் கவலைக் குரியகாட்சி, பெற்ற வயிற்றைப்பிசைந்துகொண்டிருந்தது.

"சென்னைக்குச் சென்று கண்களுக்குச் சிகிச்சை செய்து கொள்ளவேண்டும்."

இப்படிப்பலர் யோசனைகூறினார்கள். பயணச் சீட்டுக் குப்பணம்? கையில் காசில்லை; கருணைகூர்ந்து உதவு பவரோ, மனமுவந்து கடன் தருபவர்களோ யாரும் இல்லை; இக்காலத்தைப் போலக் 'கள்ள ரயில்' ஏறும் கொல்லைப்புற யோசனை, கூறுவாருமில்லை-கூறிடினும் ஏற்கும் இழிபண்புடையருமல்லர்; எனவே திக்கற்றவர் கள் தினம் தினம் பழிபோடும் தெய்வத்தின் மீது, தங்களின் எதிர்காலத்தை ஏற்றிவைத்துவிட்டு, நாள் ஒன்றுக்கு (10 மைல்) காதவழி கால்கடுக்க நடந்து சென்று, சென்னை சேர்வ தென்ற திண்ணமுடன் பயணத்தைத் துவக்கினார், அன்னையும் அருமைக்குழந்தைகளும்.

சத்திரங்களில் தங்கி, சாவடிகளில் இளைப்பாறி, தருமக் கட்டளைவாங்கிச் சமைத்துப் பசியாறி நாள்தோறும் காத

வழி நடை மெலிந்த தாய் சேய்கள் தங்கநேர்ந்த இடங்களில் கால் வலியால் வருந்துவார்கள் அல்லவா? குழந்தைகளின் கால்களுக்கு வெந்நீர் காய்ச்சி ஒத்தடமும், வலி நீங்கக் நீராட்டுவித்தலும், பார்வை மங்கிய நிலையிலும் அந்த மூதாட்டி குழந்தைகளுக்குச் செய்துவந்தாள். ஆம்! தாயுள்ளத்தின் தகைமைக்குப் போதிய சான்றல்லவா இது? அப்போது சொர்ணம்மாளுக்கு வயது 11. குமாரசாமிக்கு வயது ஆறு இருக்கும்!

அன்னை ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டாள்; ஆபரேஷனும் நடந்தது. ஆனால்.....! நோய் முற்றிலும் குணமாக வில்லை.

## பால்யம்

"பிள்ளைக்குப் பிடித்திருக்கும் கிரகதோஷம் பெற்றவளையும் ஆட்டுவிக்கிறது; பிள்ளையைப் பிறருக்குத் 'தத்து' கொடுத்துவிட்டால் பிராணசுகம் உண்டு!"

சோதிடர் கூறினர் இப்படி. குழம்பிய மனம் இன்னும் குழப்பமடைந்தது. சோதிடன் கூறியது ஒரு புறமிருப்பினும், சோர்வுற்ற தன் உள்ளத்திற்கும் அது சரி என்றே பட்டது. தன்னல் பராமரிக்க முடியாத குழந்தை பிறரிடமாவது சுகமுறட்டும் என்று எண்ணினள், தாய்.

தாங்கொணவறுமையும், சகிக்கொணக் கண்ணேயும் தீங்குசெய்தன. எனவே அருமை மகனை மக்கட் பேறற்ற மற்ெருருவருக்கு 'சுவீகார' மாகத் தந்தாள். வறக்குறைய 10 தறிகளுக்கு அதிபதியான அவர், அந்தக்காலத்தில் ஒரு

பணக்காரரைப் போலத்தான். தன்னிலும் பெரிதென தத்துபுத்திரனைப் பொன்னிலும் மேலாகக் காப்பாற்றினர். குமாரசாமியின் வளர்ப்புத்தாயின் உறவினர் ஒருவருக்கு சொர்ணம்மாளைத் திருமணம் செய்தனர்.

கவராடல், கள்ளுண்டல் போன்ற தீய நடவடிக்கைகளின்மூலம் வளர்ப்புத் தந்தையின் செல்வம் அதிவேகமாகக் குறையத் துவங்கியது. வறுமையின் அறிகுறி தெரியலாயிற்று; பல ஊர்களுக்குக் குடியேறினர்கள். திருப்பதியில் சிலகாலம் வாழ்ந்தார்கள். அங்குள்ள தெலுங்கு, திண்ணைப்பள்ளியில் சேர்ந்து பெத்தபாலசிட்சா, அமரம், பால ராமாயணம், சதகம் ஆகியவைகளைப் படித்து முடித்தார். பின் குறிஞ்சிப்பாடி, காரைக்கால், பண்ருட்டி ஆகியஊர்களில் குடியேறினர்கள். இப்போது குமாரசாமியின் வயது 12 இருக்கும். இந்த சமயத்தில் சுயமாகவே தமிழ் கற்றுக்கொண்டார். அக்காலத்தில் டிராமா நோட்டீஸ் பெரிது பெரிதாகப் போடுவார்கள். அதைப் பார்த்துப் படித்துத் தமிழ் கற்றுக்கொண்டார். "எனது பாடபுத்தகங்கள் நாடக விளம்பர நோட்டீஸ்களே" என்பார் அடிக்கடி.

"உண்ணும் பொருளை யாராவது வீணாக்குவதைக் கண்டால், மிகவும் வருந்துவார்; இந்த உணவு கிடைக்காது ஏங்கி எலும்புக்கூடுகளாய்த் திரிகின்றவர் எத்தனை எத்தனையோ! அளவாக, அருந்தக்கூடியதாக, மனத்திற்குப் பிடித்தால் மட்டும் உணவைப் போட்டுக்கொள்ள வேண்டும்; இயலாவிட்டால் வைத்துவிடவேண்டும்; வீணாக நாசமாக்குவதில் யாருக்கு லாபம்?"

இப்படிக் கூறுவதோடு நிற்கமாட்டார், அதற்கொரு உபகதையும் சொல்லுவார். தன் வாழ்வில் நிகழ்ந்த சம்பவமாகவே அது இருக்கும். இதோ! அவைகளில் ஒன்று.

"இரங்கூன் நொய்-பர்மா அரிசிக் குருணை பற்றிச் சொல்வதுண்டு. நாற்பதாண்டுகளுக்குமுன் விலை மிக மிக மலிவு. அதைவாங்கிக்கொண்டுவந்து கஞ்சியாகக் காய்ச்சிக் குடிக்கும்போது கண்ணை மூடிக்கொள்ளவேண்டும். அந்த நொய் ஒவ்வொன்றாகப் பறக்கும். எகிறிக்குதிக்கும்; புடைக்காமலே எழும்புகிறதன்மை ரங்கூன் நொய்க்குத் தான் உண்டு போலும்; ஆம்! நீங்கள் ஆச்சரியப்படுவீர்கள், நொய் பறக்கிறதென்பதை நினைக்கும்போது. நொய்க்கும் இறக்கைகள் உண்டா என்றுகூடக் கேட்கத் தோன்றும். உண்மைதான்! நொய்யுடன் கலந்த நொய்போன்ற வண்டுகள் பாதிக்குமேல் பள்ளிகொண்டிருக்கும். புடைத்தால் பறந்துவிடும், அத்தனையும். அதனைக் கஞ்சியாகக் காய்ச்சினால், கடவுள் 'ஏன் இந்தமூக்கைப்படைக்க வேண்டும்?' என்று தோன்றும்! மக்கிப்போன நாற்றம் அடிக்கும்; பிடிக்கவில்லை கவ்வும் குடலுக்கு..? மூக்கைப் பிடித்துக்கொண்டு மட மட என்று வயிற்றை நிரப்புவேன்"

இப்படியாகக் குமாரசாமி அவர்கள் தனது அனுபவங்களை சந்தர்ப்பங்களுக் கேற்றபடி கூறுவதுண்டு.

குமாரசாமியின் வளர்ப்புத் தாய் தந்தையர் சுவீகாரமாக ஒரு பெண்ணையும் எடுத்துக்கொண்டனர். சுவீகார புத்திரன் பெரியவனுகிவிட்டான்; இனிவேலையில் போட

வேண்டியதுதான் என்ற முடிவுப்படி தறிக் குழியில் இறக்கிவிட்டனர். தந்தைக்கு எப்போதுமே வேலைசெய்து கொண்டிருக்கவேண்டும்; தனக்குமுன் குமாரசாமி சும்மா இருக்கக்கூடாது. "சிறிய பையன்தானே-விளையாட்டுப் புத்திஇருக்காதா? பால்யர்களோடு ஆடிப்பாட ஆசை இருக்காதா?" இந்தசிந்தனை, பெற்றவளுக்குத்தானே வரும்?

## விளையாட்டுப் பிள்ளை

கட்டுப்பாடு என்ற ஒன்று இருக்கும்போது அத்துமீறுதில் போன்ற நடைமுறையும் வருகிறதல்லவா? சட்டம் என்ற ஒன்று அமலாக்கப்படும்போது சட்டத்தை மீறுதல் என்ற நிலை ஏற்படத்தானே செய்கிறது. இதேதான் குமாரசாமியின் பிள்ளைத்தனத்தைக் கட்டுப்படுத்தி இருந்த வளர்ப்புத் தந்தைக்கும் ஏற்பட்டது.

அவர் ஏமாந்தால் போதும்; பாலன் குமாரசாமி பக்கத்துவீட்டுப் பிள்ளைகளின் கும்பலில் அங்கம்வகிக்கச் சென்று விடுவார். கொல்லைப்புரத்தில் கோலி விளையாடுவார், கோலி விளையாட்டில் குறிவைத்து அடிப்பதில் நிபுணர். கால் பந்து விளையாடுவதில் நேர் நிகரற்ற ஆட்டக்காரர். பந்தாடும் போது பந்துக்கு உயிர்மட்டுமல்ல, மூளையும் இருக்கிறதோ என நினைக்கத் தோன்றும். அவ்வாறு இவருடைய கோலிகளும் பந்துகளும் நன்றாகப் பயிற்றுவிக்கப்பட்ட சர்க்கஸ் மிருகங்களைப் போல இவருடைய எண்ணத்துக்கு ஓடும் ஆடும்.

சிறுவயதிலேயே தன்னம்பிக்கை மிக்கவர். புண்ணியம் செய்து புனிதனாக வேண்டும் என்ற ஆசை. ஆனால் வயதோ

மிகமிகப் பிஞ்சுப் பருவந்தானே! சொல்வதை அப்படியே நம்புவது குழந்தை உள்ளத்தின் இயல்பு அல்லவா?

யாரோ ஒரு புத்திசாலி சொன்னாராம், "எவ்வளவு ஓணான்களைச் சாகடிக்கிறோமோ அவ்வளவு புண்ணியம் நமக்கு உண்டு" என்று. இதைக்கேட்டவுடன் நிறையப் புண்ணியம் சம்பாதிக்கவேண்டும் என்ற ஆசை வந்த பாலகன் குமாரசாமி, பல நூறு ஓணான்களை குறி தவறாது உண்டி வில்லால் அடித்து, செத்த ஓணான்களை ஒரு பானையில் போட்டு நிரப்பிக் கொண்டே வந்தார். பானையும் வேகமாக நிரம்பிவிட்டது. புண்ணியமும் நிரம்பிவிட்டதென்ற எண்ணமும் அவருக்கு. ஆனால் கொல்லைப்புற நாற்றம் தாங்க முடியவில்லை. வீட்டி லுள்ளோர் நாற்றத்தின் மர்மம் புரியாது திகைத்தார்கள். அகோர நாற்றத்தின் பிறப்பிடம் கண்டு பிடிக்கப்பட்டது. பானையைத் திறந்தார்கள்; அப்பா! சகிக்க முடியவில்லை; அவ்வளவுதான்; அங்கு குமாரசாமி இருந்தால்தானே! பின்னர் இந்தப் பைத்தியக்கார நிகழ்ச்சியை-பாதகம் நிறைந்த கொடுஞ்செயலை நினைத்து நினைத்துவருந்துவது உண்டு.

நாடகம், சங்கீதம் இவைகளில் திரு. குமாரசாமிக்கு மிகச் சிறந்த பாண்டித்தியமும் உண்டு. கேட்ட பாட்டு களை ஓசை நயம், பொருள் சேரம் இன்றி அப்படியே . பாடுவார். எனவே அவ்வூரில் நடந்த தெருக்கூத்து-ஆம்- "நல்லதங்காள்" நாடகத்தில் இவருக்கும் ஒரு வேஷம் தரப்பட்டது.

ஆழாக்குருண்ட பஞ்சத்தில் ஆளைத் தோற்று, மரக் கால் உருண்ட பஞ்சத்தில் மன்னனைத்தோற்று, பன்னிரண்டு

ஆண்டுகள் பாரமழை பெய்யாது, ஆளன் சொற்கேளாது, அண்ணி வீடு சென்று, அண்ணியின் கொடுமை தாங்காது, மனமுடைந்து, தான் பெற்ற ஏழு பிள்ளைகளுடன் தானும் இறக்கப்போகும் அந்தக் கட்டத்தில் ஏழாவது பிள்ளையாக நடித்தார்.

"அம்மா! அருமைத் தாயே!! அறுவரை, உன் அருமைப் புத்திரரைக் கொன்ருய்! என்னையும் கொல்ல நினைக்கிருய்; தப்பிப் பிழைத்துத் தாய் பெயர் சொல்லி, ஓடிப் பிழைத்து உன் பேரு சொல்லி, நாடிப் பிழைத்து நம் நாட்டின் பெருமை காத்து, தந்தையின் பெயர் காக்க ஒரு தனயன் வேண்டாமா? என்னைக் கொல்லாதே—நான் எங்காவது போய் வாழ்கிறேன், உன் புகழ்கூறி"

இப்படிக் கெஞ்சுகிற கட்டத்தில் உருக்கமான பாத்திரத்தை ஏற்று நடித்த குமாரசாமியின் பாகம், கனகச்சிதமாக அமைந்தது. கூத்தினைப் பார்த்தோர் அனைவரும் மெய் மறந்தே போயினர். மற்ற நாடகங்களுக்கு குமாரசாமியை பலரும் அழைக்க ஆரம்பித்தனர். "நாடகக்காரனுக நான் வாழ விரும்பவில்லை—அந்தப் பெயர் எடுக்கவும் ஆசைப்படவில்லை" என மறுத்துவிட்டார். நான் நாடகங்களிலே தொடர்ந்து நடிக்க ஆரம்பித்திருந்தாலும் இப்போது ஒரு பெரிய நடிகனுகி இருப்பேன்" என்றுகூட அடிக்கடி கூறுவார், நமது ஆசன ஆசான்.

## சுவீகாரத் தகராறு

சுவீகாரப் பெற்றோர்கள் இதற்கிடையில் இடம் பெயரலாயினர். குமாரசாமி நெய்தொழிலில் இறங்கிய பின் குடும்

பத்தின் பாசம் பெண்பிள்ளைமீது தாவிற்று. வளர்ப்புப் பிள்ளையாக வந்த குமாரசாமி வேலைக்காரப் பையனாக மதிக்கப்பட்டார். இதனிடையில் தந்தையின் குடிப்பழக்கம், சீட்டாட்டம் உச்சகட்டத்தை அடைந்துவிட்டது. குடித்து விட்டு வீட்டுக்குள் நுழையும்போது கொவ்வைப் பழம் எனச் சிவந்த அவரின் விழிகளுக்குத் தென்பட்டவர்களை எல்லாம், பெண்டு பிள்ளை எனப் பாராது கண்டபடி அடிக்க ஆரம்பித்துவிட்டார்.

அப்போது குமாரசாமிக்கு வயது 14. இறைமையாக வேலைசெய்யும் தன்மையும் இருந்தது. சுயமாகச் சிந்திக்கும் பருவமும் தொடங்கியது. இனி நமக்கு இங்கு பொருந்தப் படாது என்பதைத் தெரிந்து, நல்லப் பிள்ளைக்கு அடையாளமாகசொல்லாமல் கொள்ளாமல் கம்பிநீட்டிவிட்டார், மதுரைக்கு, தன் சொந்த அன்னை ருக்மணியம்மையிடம். "அதிர்ஷ்டம் தபாலில் வருகிறதென்றால் தரித்திரம் தந்தியில் வந்துவிடும்" என்பதுபோல் குமாரசாமிக்குமுன் தேடிச் சென்றுவிட்டனர் வளர்ப்புப் பெற்றோர்கள். "நாங்கள் வளர்த்த பிள்ளையை எங்களிடம் அனுப்பு; வளர்த்து வாலிப மாக்கிய, உரிமையாக்கப்பட்ட எங்கள் பையனை இன்றே அனுப்பு; இல்லையேல் சுவீகாரச் செலவு கொடு; துணி மணிகளைக் கொடுத்துவிடு!" என்று துன்புறுத்த ஆரம்பித்து விட்டனர். உறவு முறையார்களிடமும் இந்த விவகாரம் சென்றது.

இறுதியில் சிறுதொகையும் சில துணிமணிகளையும் பெற்றுச் சென்றனர். பல ஆண்டுகளாகத் தாயையும் சேயையும் பிரித்துவைத்திருந்த வறுமை வலியிழந்து விட்

டதுபோலும்! ஒன்றுமினர், பெற்றுளும் பிள்ளையும். மீண்டும் வேலைக்கமர்த்த அன்னையின் நெஞ்சம் உடன்படவில்லை. பள்ளிக்கு அனுப்பினுள், படித்து தேர்ந்தவனுய்த் தன் மகன் வரவேண்டும் என்ற மனமகிழ்ச்சி கொண்டு. சேவல் பாட்டு, அல்லி அரசாணி மாலை, ஏணி ஏற்றப் பாட்டு இவைகளைப் படிப்பதிலே அவருக்கொரு ஆசை. இவைகளை வாசலிலுள்ள தாய்மார்கள் மிகவும் ரசிப்பார்கள். இவைகளில் பழக்கப்பட்ட பின் தமிழை சரளமாக எழுதப்படிக்கக் கற்றுக்கொண்டார். இருப்பினும் சுதந்திரமாகத் தொழிலில் ஈடுபட்டுக்கொண்டிருந்த குமாரசாமிக்கு, பள்ளிக்கூடம் அலிபுரம் சிறையாகவே தோன்றியது. தான் படித்த தமிழுக்கும், பள்ளியில் நிலவிவரும் தமிழுக்கும் நிறைய வித்தியாசம் இருந்ததைக் கண்டார். எத்தனைதான் படித்தாலும் பாடங்கள் மூளைக்கு ஏற மறுத்தன. தாயின் வற்புறுத்தலுக்காகப் பள்ளி சென்று வந்த தனையனுக்கு, முற்றிலும் பள்ளி வாழ்க்கையில் முரண் ஏற்பட்டது. திறந்தே சொல்லிவிட்டார் " அம்மா! பள்ளிப் படிப்பு புள்ளிக்குதவாது; அதுவும் எனக்கு அறவே ஆகாது; நான் திறமைசாலியாக வரவேண்டும் என்ருல் வேலைக்கமர்ந்து விடுகிறேன்" என்று. உடன்பட்டார் அன்னை.

## விபரம் தெரிந்தபின்

பருத்தமு விதைக் கடை யொன்றில் கௌரவ உத்தியோகம் (சம்பளமில்லாத வேலை) தாயாரின் சிபாரிசில் கிடைத்தது. காலை எழு மணிக்குக் கடை திறந்து இரவு பத்து மணிவரை இருந்து கடையைமூடிவிட்டுப் படுக்கவேண்டும். பகலில் ½-மணி நேரம் சாப்பாட்டிற்குப் போக. தினம்

ஒன்றுக்கு சம்பளம் இன்றி, பதினெட்டு மணி நேரம் உழைக்க வேண்டும். இப்படி ஓராண்டு கழிந்தது. அதற்குப் பின் ஒரு ரூபாய் சம்பளம் கிடைத்தது. அதை வெகு பெருமையுடன் அன்னையிடம் கொடுப்பாராம், மாதம் ரூ. 100 சம்பாதித்துத் தருவதாக நினைத்துக்கொண்டு. "இந்தத் தொகையை வாங்கி என் தாய் எனக்கு சாதத்தில் கட்டித் தயிர் வாங்கி ஊற்றுவாள்" என்று மிகப்பெருமையுடன் குமாரசாமி அவர்களே அடிக்கடி கூறுவார்கள்.

கனஜோராக குமாரசாமி வியாபாரத்தைக் கவனிக்கவே இரண்டு ஆண்டுகளில் சம்பளம் ரூ. 5 ஆக உயர்ந்து விட்டது; இதோ! வியாபாரம் செய்த விதத்தை அவரே கூறுகிறார்.

"நான் வியாபாரம் நன்கு செய்தேன் என்றால் என்ன தெரியுமா? ஏமாற்று வித்தையில் கைதேர்ந்துவிட்டேன். பருத்தி விதையை வாங்க வருபவர்கள் சாக்கின் தரத்தைப் பார்க்கவும், நல்ல விதைதானா என்று பரிசோதிக்கவும் விதைகளை வாயில்போட்டு மென்று துப்புவார்கள். உமிழ்ந்த பால் மஞ்சளாக இருந்தால் உயர்ந்த விதை என்று அர்த்தம். இதற்காக ஏற்கனவே மஞ்சள் துண்டுகளை தயார் செய்து வைத்திருப்பார் கடைமுதலாளி. கொள்முதல் செய்ய வருபவர்கள் முன், நான் மஞ்சள் துண்டுகளுடன் பருத்தி விதையையும் சேர்த்து மென்று காகிதத்தில் உமிழ்ந்து காண்பிப்பேன். இதைக்கண்டு பலர் ஏமாந்து விடுவார்கள். எனவே பலர் வரிசை வரிசையாக எங்கள் கடையையே நாடி வருவார்கள். என் சம்பளம் ரூ. 5 ஆக உயர்ந்தது. நாளாக நாளாக இந்தப் பித்தலாட்டங்களில் என்னால்

ஒத்துழைக்க முடியாமல் போயிற்று. பலரை ஏமாற்றி நானும் சலிப்படைந்து விட்டேன். எனவே பழக்கடையில் சேர்ந்தேன்."

பழக்கடையும் சலித்த பின் மதுரை தெற்கு ஆவணி மூல வீதியில் உள்ள சோதிடக் கடையில் எடுபிடிப் பையனாகச் சேர்ந்தார் குமாரசாமி. அந்தக் கடையின் அதிபரும் சோதிடருமான பெரியார் கண் பார்வை இழந்தவர். வீட்டிலிருந்து அவரை அழைத்துக்கொண்டு வரவேண்டும். ஓட்டலுக்கு 'டிபன்' சாப்பிட அழைத்துக்கொண்டுபோய் விட வேண்டும்; எப்பொழுது பார்த்தாலும் அவர் மிதியடியின்றி இருக்கமாட்டார்; ஓட்டலுக்குள் அவரைக் கொண்டுபோய் உட்கார வைத்துவிட்டு குமாரசாமி வெளியே வந்து நின்று கொண்டே இருப்பாராம்.

அந்த சோதிடர் ஹோட்டலில் உள்ள பட்சணங்களை 'காண்ராக்ட்' எடுத்ததைப்போல் சாப்பிடுவாராம். இதைக் கண்டு "நாம் எப்போது இப்படிப் பலகாரங்கள் சாப்பிடுவது? இப்படி மிதியடிகளைப் போடுவது எப்போது?" என்று ஏங்குவாராம். இப்படி ஐந்து ஆண்டுகள் அந்தக் கடையில் இருந்தார். தமிழறிவு பெருகிற்று. ஏட்டுச் சுவடிகளில் எழுதவும், படிக்கவும் கற்றுக்கொண்டார். பல தமிழ் நூல்களைப் படிக்கவும் அவகாசம் ஏற்பட்டது. நந்தி தேவரின் சோதிடப் பாட்டுகளைப் பாடம் செய்தார். நாளடைவில் சுயமாகப் பாட்டுகள் இயற்றும் திறமையும் பெற்றார். இதில் நிறையப் பித்தலாட்டங்கள் நடப்பதைக் கண்டார். சோதிடம் கேட்பவர்களின் வாயைப் பிடுங்கி அவர்களின் நோக்கம் அறிந்து பாட்டுகளை அமைப்பது'

இரண்டு அர்த்தங்கள் படும்படி பலன் சொல்லுவது போன்ற வியாக்கியானம் தருவது இவைகளைக் கண்டு நொந்தார்.

சோதிடம் பார்க்க வருபவர்களுக்குப் பலன் சொல்லும்போது "சுமார் இருபது வருடங் கழித்து இந்த ஜாதகன் இறந்து விடுவான்—அல்லது பொருள் நஷ்டம் வரலாம்—இதற்கு மாருகப் பெருத்த லாபமும் அடையலாம்" என்று பல பொருள் தரும் வார்த்தைகளைக் கொண்ட பாடல்களை அமைத்துப் பிரமாதமாகப் பலன் சொல்லுவார்கள். மனம் நிம்மதியடைந்து எதையாவது நம்பிக்கொண்டு போய்விடுவார், சோதிடம் பார்க்க வந்தவர். இந்த பித்தலாட்டங்களுக்குத் தானும் உடந்தையாக இருப்பது என்பது நல்லதெனத் தோன்றவில்லை. வேலை வேறு பார்க்க முயன்று கொண்டிருந்தார் குமாரசாமி.

## ஏழை குமாஸ்தா

வாலைக்கொண்டா லட்சுமணய்யர் அண்டு சன்ஸில் குமாஸ்தா வேலை காலி இருப்பதாக அறிந்தார். அதற்கு மனுச் செய்துகொண்டார். உடனே வேலை கிடைத்தது. அங்கு முதன் முதலில் சிறு குமாஸ்தாவாக-அந்தக் காலத்து உயர்ந்த சம்பளக்காரராகச் சேர்ந்தார், மாதம் ரூ. 15 க்கு. உண்மையாகவும், சுறுசுறுப்பாகவும், ஊக்கத்தோடும் உழைத்து வருவதைக்கண்ட முதலாளி, பொறுப்பான பணிகளையும் ஒப்படைத்து, வெளியூர் நிலுவைகளை வசூலிக்கவும் அனுப்பினர். அப்போது வயது 22. வெளியூர் போகும்போது பிரயாணச் செலவும், அன்றாடப் படியும்

உண்டு. தினம் ரூ. 1-8-0 படி கிடைக்கும். காலையில் வெறும் தயிர்மோருடன் 'டிபனை' முடித்துக்கொண்டு, 2, 3 மைல் தூரமானாலும் கால் நடையாகவே செல்வார். எப்போதாவது ஒரு நாளைக்கு 0-2-0 'டிபன்' செய்வார். மதிய உணவுகளை கோயில் பட்டைச் சாதங்களை 0-1-3 க்குள் வாங்கி முடித்துக்கொள்வார். இப்படி 0-4-0 முதல் 0-6-0 வுக்கு அதிகமாக இருக்காது, அவருடைய அன்றாடச் செலவினங்கள். வெளியூர்போய் வருகிறபோது நிறையக் காசுகள் மீதியாகும். இவைகளை வாங்கித் தாயார் சிக்கன மாகச் சேர்த்து வைத்து மகனுக்கு நல்ல உணவாகக் கொடுத்து வந்தார். தான் தண்ணீர் விட்டுத்தான் சாப்பிடு வார். பசையற்ற உணவை தன் அன்னை உண்பதைக் கண்டு தன்னைப் போன்று உண்ணுமாறு வற்புறுத்துவார். "எனக்கென்ன வாலிபமா திரும்பப் போகிறது? பசித்த வயிற்றிற்கு எதையோ போட வேண்டியதுதானே! வளரு கிறவன் நீ தானே" என்று கூறுவார். குமாரசாமியின் சம்பளத்தில் ரூ. 10 சீட்டுப்போட்டு விடுவார். மீதிஉள்ள சிறுவருவாயை வைத்துக்கொண்டு பெருக வாழ்ந்தனர் தாயும் மகனும்.

இந்தக் காலத்தில் நல்லறிஞர் எல்லோரின் நூல் களைக் கசடற கற்றார். வார, மாத சஞ்சிகைகளை வாங்கினார். தினசரிகளைப் படித்து தேசிய நிலையை உணர்ந்தார். கதர் உடுத்தத் துவங்கினார். காந்தியடிகளின் யோசனைகளைக் கேட்டு, அண்ணலாரின் அறவழி பற்றிக் கற்றுணர்ந்து, அந்த இயக்கத்தின் அபிமானியானார். 24 வயதுக்குப் பிறகு தன் வாழ்க்கையிலேயே முதல் முதல் தைத்த சட்டை கதரில்தான். அதைக் குமாரசாமி அணியும்போது மிகப்

பெரிய அதிர்ஷ்டம் வந்ததாகவே கருதுவார். பெருமிதத்துடன் சொக்காய் அணிந்து சோபிதமாகக் காட்சி அளிப்பார்.

## திருமண ஏற்பாடு!

மங்களகரமான செய்தி ஒன்று இந்த சந்தர்ப்பத்திலே அடிபட்டுக் கொண்டிருந்தது, தனது வட்டாரத்தில். வரதட்சணை வழங்கப்படாத அந்தக் காலத்தில் பெண்ணுக்குப் 'பரியம்' என்று சுயஜாதி விதிப்படி ரூ. 61 மாப்பிள்ளை வீட்டார் கொடுப்பது வழக்கம். இதன்படி புடவை துணிமணிகளுடன் மேளதாளம் முழங்க, ஒரு பெண்ணை நிச்சயித்தார்கள். நிச்சய தாம்பூலம் வழங்கியபின் திருமணம் 6 மாதத்திற்குத் தள்ளிவைக்கப்பட்டது, சோதிடரின் திரு உள்ளத்தை முன்னிட்டு. மணப் பெண்ணின் அண்ணனுக்கு ஏற்பட்ட உடல் கோளாறுக்கு நங்கையின் பொருந்தாத நிச்சயதார்த்தமே காரணம் என்று சோதிடன் கூறினான். இந்த நிலையில் இந்தச் சுப காரியத்திற்கு முடிவுசெய்ய வேண்டாம் என 'பரியப்' பணம் திருப்பித் தரப்பட்டது.

மற்றோர் கன்னியை மண முடிக்க ஏற்பாடு நடந்தது. சீதாலட்சுமி என்ற நங்கைக்கு பரியம் தரப்பட்டது. கலியாண செலவு 400 ரூபாய். இது அந்தக் காலத்தில் மிகப் பெருந் தொகை. 'கல்யாணம் செய்து பார்; வீட்டைக் கட்டிப்பார்' என்பார்கள் அல்லவா! சேகரித்து வைத்த பணம் போதவில்லை. இன்னும் ரூ. 100 குறைந்த பட்சம் இல்லாவிட்டால் திருமணம் நடக்காது என்ற நிலைமை ஏற்பட்டது. இந்த நெருக்கடியில் மணக்கோலத்

தோடு சென்று கடன் கேட்கவேண்டியதாயிற்று. எதிர் பார்த்த இடங்களிலெல்லாம் ஏமாற்றமே.

மாமனர் இல்லை. மாமியார்தான் உண்டு. அவருக்கும் புட்டாப் புடவைக்குப் புள்ளி கட்டும் தொழில்தான். சுய வாழ்க்கைக்கே போதாத ஜீவனம். விருந்துவைக்க முடியாத பொருளாதார நெருக்கடி. இந்த நிலையில் தம்பதிகளுக்கு ஏன் தடபுடலான விருந்து? குமாரசாமி விரும்பவில்லை, எனினும் மாமியாரின் அபிலாஷை இருக்கத்தானே செய்யும். ஒரு நிபந்தனையோடு ஒப்புக்கொண்டார், வழக்கமாகத் தான் சாப்பிடும் பழைய சோறுதான் விருந்திடவேண்டும் என்று. கிருத்திகை, அமாவாசை அன்று தான் தோசையின் முகத்தில் விழிக்கவேண்டும். இதுகூட மாமியார் தன் வாழ்வில் செய்தறியார். தானே அதைச் செய்வதில் உதவு வார். இங்ஙனம் சில மாதங்கள் உருண்டன.

## சென்னை சேர்தல்

தான் எந்த முதலாளியிடம் பணியாற்றுகிறாரோ அந்த முதலாளியின் நண்பர். சோமியா சீதாராமையர் என்பவர் சென்னையிலிருந்து மதுரைக்கு வந்திருந்தார். குமாரசாமியின் திறமையான பணிகளைக் கண்டு தன்னிடம் வேலைக்கமர்த்திக்கொள்ள விரும்பி, தனது விருப்பத்தை குமாரசாமியின் உரிமையாளரிடம் அறிவிக்கவே, அவரும் இசைந்து குமாரசாமியை சென்னைக்கு அனுப்பினர்.

இளம் வயதில் இல்லாளுடன் தனியாகச் சென்னை வந்து, வண்ணாரப்பேட்டை சஞ்சீவராயன் கோயில் தெரு வில் உள்ள தனது முதலாளியான சோமி. சீதாராமையரின்

சாயப்பட்டறையில், தனக்கென ஒதுக்கித் தரப்பட்ட ஒரு அறையில் மாதம் ரூ. 18 சம்பளத்தில் வாழ்க்கை நடத்தினார். அப்போதெல்லாம் ஷாப் சட்டமோ கூலி, காலம் இவைகளை நிர்ணயிக்கும் ஏற்பாடோ இல்லை. எனவே சாயப்பட்டறை வேலைமட்டுமல்ல, வீட்டு வேலைகளும் செய்யவேண்டும். முதலாளி திருப்தி படும்வரை முழு நேரமும் உழைக்கவேண்டும். தன் பணியாளர்களுக்கு யாதொரு குறையும் ஏற்படக்கூடாது என்பது முதலாளியின் நல்லெண்ணமாகவும் இருக்கும்.

பூஜைக்கு மலர் பறித்து, குழந்தைகளைக் குளிப்பாட்டி, தொழிற்சாலையைத் திறந்து, சாயத்திற்கு வரும் நூல்களை வரவு வைத்து, சாயம்போட நூல் எடுத்துக் கொடுத்து, அதோடு தானும் சாயம் போட்டு, சாயம் போட்டு வந்த நூல்களை 'பிரஸ்' போட்டு, கணக்குக் கட்டுவது வரை சர்வ வேலைகளையும் சாமர்த்தியமாகச் செய்யவேண்டும். இவைகளுக்குத்தான் இந்தப் பெரும் தொகையான ரூ. 18 சம்பளம்.

## கடினமான உழைப்பு

"சம்பளத்தைக் கணக்குப் பார்க்காமல் கடமை என நினைத்து காரியத்தை செவ்வனே கவனித்ததால் தான் நான் முன்னேற முடிந்தது" என்பதைத் தொழிலாளிகளுக்குப் புத்திமதி சொல்லும்போது குறிப்பிடுவார்.

அப்போது கெட்டிச் சாயம் கிடையாது. பேஸிக் கலர், டைரெக்ட் கலர் தான். கம்பெனியில் நன்றாக வேலை நடந்தது. வருமானமும் பெருகிற்று. இந்த நிலையில்

முதலாளிக்கும் தலைமை குமாஸ்தாவிற்கும் தகராறு ஏற்பட்டது. ஸ்ரீ A. R. ராமசந்திர அய்யர் என்பவர்தான் தலைமை குமாஸ்தா. அவர் விலகிவிட்டார். அதற்குப் பின் "தம்பி நீ கம்பெனியை நடத்துகிறாயா?" எனக் கேட்டார் முதலாளி, குமாரசாமியை. தலையை அசைத்துவிட்டார், தைரியமாக. பெரிய திகிலும் உடனே பற்றிக்கொண்டது. "ராத்தல், படிக்கல், அவுன்ஸ் நிறுவை, சேர்போன்ற கணக்குகளின் கால் நூல்கூடத் தெரியாத அளவில் நாம் எப்படி இந்த பிரமாண்டமான நிர்வாகத்தை நடத்தப் போகிறோம்" என்று. ஆனால் உண்மையில் பொறுப்பும் தைரியமும் இருக்கத்தான் செய்தது.

ராத்தல் படிக்கற்களை நன்றாகவே பாடம் செய்ய ஆரம்பித்தார். அவைகளை வரிசையாக அடுக்குவார். 1, ½, ¼, ⅛ இவ்வாறு கணக்கிட்டுத் தெளிந்தார். தங்கு தடை இன்றி எல்லாமே திருப்தியாக வந்து விட்டன. ரூ. 18ஆக இருந்த சம்பளம் ரூ. 22க்கு உயர்த்தப்பட்டது. சில மாதங்களிலேயே 30, 35, 40 இப்படி உயர்ந்து வந்தது. தன்னுடன் வேலை செய்பவர்களுக்கு அதே ரூ. 20 அப்படியே இருந்து வந்தது. பொறுப்புணர்ச்சியும், சலியா உழைப்பும் வெகுவிரைவில் முன்னேற்றி விட்டன. இப்போது அந்தப் பட்டறையின் நிர்வாகியாகிவிட்டார்.

பணம்—உருண்டோடுகிற பொருள். திரண்டு வருகின்ற செல்வம்!

உலகத்தினை சகலவித சக்திகளுக்கும் அப்பாற்பட்டது என்பது மட்டுமல்ல; அதன் பெருமையும் ஈடு இணையற்றது. அவைகள் சர்வ சாதாரணமாக அனைவரிடமும் வரத்தான்

செய்கின்றன. ஆனால் குறிப்பிட்ட சிலரிடந்தான் தங்கு கின்றன. இதனைப் பற்றி வள்ளுவர் கூறும்போது குறிப் பிடுகிறார்,

"ஆகூழால் தோன்றும் அசைவின்மை-கைப்பொருள்
போகூழால் தோன்றுமடி"

என்று.

செல்வம் சேரவேண்டும் என்ற நியதி இருக்குமானால் அவருடைய வாழ்வில் சுறு சுறுப்பு தோன்றும்; இருக் கின்ற செல்வம் கரைய வேண்டுமானால் சொல்லாமலே சோம்பல் வரும். இதற்கு எடுத்துக்காட்டு, திரு. குமாரசாமி அவர்களின் வாழ்வு. இவரை முன்னேற்றியது அறிவு, ஊக் கம் இவைகளே. இதைக் கதையாகக் கூறுவதல்ல; ஆகூழ் போகூழ் என்பது வாழ்வில் சகஜம் எனினும், ஆகூழ் வருங் கால் அதனைக் காப்பது என்ற பொறுப்பு, தத்தமது முன் அனுபவத்தைக் கொண்டுதான் வரவேண்டும். "சிக்கனம் பக்திக் கடுத்தது; பொருள்தனைப் போற்றிவாழ்" இந்த முதுமொழியின் இயல்பான பழக்கம் இளமையிலிருந்தே துவங்கவேண்டும். "எப்படியோ கிடைக்கிறது; எப் படியோ செலவழிக்கிறோம்" என்ற ஊதாரி குணம் பழக்க மாகிவிட்டபின், எதையும் பேணும் அருங் குணம் மறைந்து விடுகின்றது; சக்தி இருக்கும்போது ஆடம்பர மாய் வாழ்ந்து, முதுமை தட்டும்போது வறுமையில் உழல் கின்ற நிலைமை நமது நாட்டவரின் இன்றைய பண்பாடாகி விட்டது. இதற்காக, "கஞ்சனாய், பணப் பெட்டியைக் காக்கும் பிசாசாய் இருப்பதே அன்றி, ஈதல் நமதியல்பல்ல" என்று மொழிபவனாய் இருப்பது என்று பொருள் அல்ல.

வகையறிந்து தொகையிடவேண்டும் என்பதே இதன் பொருள். அதிக வருமானம் வருகின்ற தொழில் கவனிப் பற்றுப் போயிற்று; தகாத செலவினங்கள் பயனின்றிப் பெருகின; கம்பெனியை மூடும் அளவுக்கு நிலைமை மாறி விட்டது.

பின்னர் ஸ்ரீ T. வரமூர்த்தி செட்டியும் ஸ்ரீ தம்பய்ய செட்டியும் சேர்ந்து ஒரு சாயக் கம்பெனியை ஆரம்பித் தனர். அவர்களிடம் குமாரசாமி வேலைக்கமர்ந்தார். ஜவுளி வியாபாரத்தைக் கவனிக்கவே ஸ்ரீ சல்லா தம்பய்ய செட்டிக்கு நேரம் போதாதிருந்தது. சாயக் கம் பெனியைக் கவனிக்க முடியவில்லை. அதன் வருமானத் தையும் அவர் விரும்பவில்லைபோலும். எனவே அதுவும் நிறுத்தப்பட்டது. குமாரசாமிக்கு வேலையில்லை; சென்னை யில் வேலை இல்லாமல் எத்தனை நாட்களுக்கு வாழமுடியும்? அதே முதலாளியிடம் சில சில்லறை சிறிய சாய அண்டாக் களையும், தொட்டிகளையும் விலைக்குக் கடனாகக் கேட்டார். துருப்பிடித்துப் போவது ஒருவன் பிழைத்துப்போக உத வட்டும் என நம்பிக் கொடுத்தார். பின் வாடகைக்குச் சிறு அறை எடுத்துத் தொழிற்சாலையைத் துவக்கினார், நாணயத்தையே முதலீடாக வைத்து, தன் இருகைகளே சகத் தொழிலாளிகளாகப் பணியாற்றின. தன் அறை முன் இருக்கின்ற இடமே தனது சாயப்பட்டறை. ஆனால் சாயம்போட ரசாயனப் பொருட்கள், நூல், இவைகள் வேண்டுமல்லவா? இவைகளை யார் தருவது? எங்கே வாங்குவது? பக்கத்து வாசலில் குடி இருந்த ஸ்ரீ வரமூர்த்தி செட்டி அவர்களே இவரின் தொழிலுக்குப் போதிய ஒத்துழைப்புகளை நல்கினார். பெருந்தன்மையான குணம்

அமைந்த அப்பெரும் வியாபாரி, குமாரசாமி அவர்களின் நிலைமையை உணர்ந்து சில மாஸ்டர் வீவர்களிடமும், சாயத் திற்குரிய ரசாயனப் பொருட்கள் விற்பனை செய்யும் கம் பெனிகளிடமும் குமாரசாமியை அழைத்துக்கொண்டு போய் சிபார்ஸ் செய்தார்.

M/s. சாரி & ராம், M/s. டாடாஜி டாக்ஜி முதலிய சாய கம்பெனிகளின் வாடிக்கைக்காரராக குமாரசாமி ஆக்கப்பட்டார். அவரின் நாணயமும் நன்னடத்தையும் தொழில் துறையில் அனைவரையும் வசீகரித்தன. எவரையும் வசீகரிக்கும் திறமை வாய்ந்த குமாரசாமி,

> "எண்ணித்துணிக கருமம்; துணிந்த பின்
> எண்ணுவது இழுக்கு".

என்ற பண்புடையவர். எனவே நாணயத்தின் ஆணையாகவே தனது வாழ்வை வளப்படுத்திக்கொண்டார். சாய, ரசாயனங்கள் கிடைத்தன—வியாபாரிகளிடமிருந்து நூலும் வந்து குவிந்தன. தாலும் தன் மனைவியும் சேர்ந்தே சாயம் போடுவார்கள். போட்டு முடிந்ததும் அவைகளைப் பெட்டிகளில் வைத்துக் கட்டிக்கொண்டு, தலையில் சுமந்து சென்று ஆசாமிகளின் வீட்டிலேயே கொடுப்பார். அங்கு கிடைக்கும் சாயக்கூலியை வைத்து ஒரு வாரத்திற்கு போதுமான அரிசியைவாங்கிக்கொள்வார். மேல்செலவிற்கு ஒன்றிரண்டு ரூபாயை வைத்துக்கொண்டு மீதியை சாய அண்டா வாங்கியவர்களுக்கும், சாயப் பொருட்கள் வாங் கிய கம்பெனிகாரருக்கும் ஒதுக்கி விடுவார். அவருடைய அன்றாட வாழ்க்கையில் திட்டமும் தீர்மானமும் இல்லாத நடவடிக்கைகளே இல்லை.

## வளர்ச்சித் துறையில்

ஆரம்பத்தில் 5 ராத்தல் பெட்டி ஒன்று, இரண்டு என்று இருந்தது. பின்னர் மாதத்திற்கு 30, 40 பெட்டிசாயம்தீரும். அதில் வரும் லாபத்தைச் சாப்பாட்டுக்கு மட்டும் வைத்துக் கொண்டு, மற்றவைகளைக் கடன் அடைக்கும் வகைக்கும் அபிவிருத்திக்கும் செலவு செய்வார். ஒரு தம்பிடியைக் கூட அனாவசியமாகச் செலவு செய்யச் சம்மதிக்கமாட்டார். தனக்கு உதவியவர்களை என்றும் மறந்ததில்லை; ஒரு காசு உதவியவர்களானாலும் அவர்களுக்குத் தனது நன்றி கலந்த உதவியைச் செய்யத் தவறவே மாட்டார்.

“நன்றி மறப்பது நன்றல்ல ; நன்றல்லது
அன்றே மறப்பது நன்று”

என்ற பெருங்குணமும்,

“தினைத்துணை நன்றி செய்யினும் பனைத்
துணையாய்க் கொள்வர் பயன் தெரிவார்” என்ற

ஆன்றமைந்த தகைமையும் இளமையிலிருந்தே, இடையறாத இயல்பாகிவிட்டது, குமாரசாமிக்கு. இங்ஙனம் வடமுனை வளர் ஒளியாக வாழ்க்கை வண்ண ஒளிவீசித் திகழ்ந்தது.

## செய்நன்றி

அன்று மாதக்கடைசி; அண்டாக்கள் உதவிய செட்டியிடம் சென்றார். “ஐயா நீங்கள் உதவிய சாய அண்டாக்களால்தான் நான் வாழ்கிறேன். அந்த நன்றியை அறிவிக்க ஒரு கட்டு நூலுக்கு 0-4-0 கமிஷன் தருகிறேன் ஏற்றுக்கொள்ளவேண்டும்” என்றார்.

பெருந்தனவந்தர், ஒரு தொழிலாளியிடம் கமிஷன் வாங்குவது தன் அந்தஸ்துக்கு ஏற்றதல்லவே! இந்த நியாயத்தின் அடிப்படையில் மறுத்தார் செட்டி.

"என்னய்யா! கமிஷன் கிமிஷன் என்கிறீர்? என்னல் பிழைத்ததாக வேறு சொல்கிறீர்? ஏதோ கேட்டீர்; சும்மா இருக்கும் துருப்பிடித்த அண்டா குண்டாக்களைக் கொடுத்தேன்; தானமாக அல்ல, கிரயத்திற்கு—கடனுக. அந்தக் கடனையும் திருப்பித் தந்துவிட்டீர். மேற்கொண்டு எனக்கு ஏன் கமிஷன் தரவேண்டும்? நீரும் உமது மனைவியும் உண்டு களித்து சுகமாக இருப்பதே எனக்கு மகிழ்ச்சி என்றார். அப்போது மாதம் ரூ. 10 கமிஷன் தருவதை ஏற்பது அவரின் பெருந்தன்மைக்கு நன்ருகப் படவில்லை.

எனவே ஸ்ரீ T. வரமூர்த்தி செட்டியிடம் சென்று 'நீங்களும் நிறுத்தப்பட்ட சாயப்பட்டறையின் பங்காளி தானே! எனக்கு நீங்களும் நாலு பேரிடம் வந்து அறிமுகப் படுத்தி உதவினீர்கள் அல்லவா? அந்த கமிஷனை நீங்களாவது பெற்றுக் கொள்ளவேண்டும்.' என்று குமாரசாமி கெஞ்சினர். ஸ்ரீ வரமூர்த்தி செட்டி கூட்டாளி செட்டியிடம் சென்று, குமாரசாமி கூறியதைச் சொன்னர். "நான் மறுத்து விட்டேன்; நீங்கள் வேண்டுமானல் ஏற்றுக்கொண்டு திருப்திப் படுத்துங்கள்" என்றார். இந்தச் செட்டியும் மறுத்துப் பார்த்தார். குமாரசாமி விடுவதாக இல்லை. கடைசியில் கமிஷன் வாங்கிக் கொள்வதாக ஒப்புக் கொண்டார். அன்று முதல்தான் குமாரசாமி நிம்மதியாகத் தூங்கினர் என்றே சொல்ல வேண்டும்.

## உயர்ந்த வருவாய்; உத்தரவாதமாக சரக்கு

தொழில் வளமுற்றது; வியாபாரத் தொடர்புகளும் வலிவுற்றன; சிறிய அண்டாக்கள் பெரிதாயின; நூல் பெட்டிகளும் பெருகின; 1928-ல் தான் கெட்டிச்சாயம் (இண்டாந்திரன்கலர்) வந்தது. அதனை சாயக்கம்பெனிகளில் போய் நன்றாகத் தெரிந்தபின்தான் சாயம் போட ஆரம்பித்தார். குறிப்பாக சென்னையில் முதன் முதலில் கெட்டிச்சாயம் என்று போட்டவர் திரு. V. N. குமாரசாமி ஒருவரே யாவர். இந்தப் பெருமை சாயத் தொழிலிலே புரட்சிகரமான மாற்றமாகும். அதன் உரிமை படைத்தபெரும் பங்கு திரு. குமாரசாமி அவர்களையே சாரும்.

அப்போது குமாரசாமியின் தமக்கை, அவரது கணவன், ஒருமகள், ஒருமகன் ஆகியோருடன் கூனையில் இருந்தனர். சில நாட்களில் அத்தான் இறந்துவிட்டார். பின் தமக்கையார் தன் இரு குழந்தைகளுடன் குமாரசாமியின் பாதுகாப்பில் வந்து விட்டனர். சாயத்தொழிலுக்கு இவர்களும் உதவினார்கள். தண்ணீர் இறைக்க, கம்பி நூல் திருப்ப, நூல் காயப்போட, பின்னல்போட இத்தனையும் செய்வதற்குப் போதிய, தனதாட்களே கிடைத்துவிட்டனர். தமக்கையும் மனைவியும் சேர்ந்து பெரும்பாலான வேலைகளைத் தனியே செய்துவரலாயினர்.

அப்போது தமக்கையின் மகன் K. R. வெங்கடாசலபதிக்கு வயது பத்து இருக்கும். பகலெல்லாம் சில்லறை வேலை செய்வான். இரவில் 'பிரைவேட்' வாத்தியாரை வைத்து 'டியூஷன்' படிப்பித்தார்.

நாளாக நாளாக தனது அறையைச் சுற்றியுள்ள வீடுகளை வாடகைக்கு வாங்கித் தொழிற்சாலையை விரிவு படுத்தினார். பெரிய அடுப்புகளைக் கட்டினார். தொட்டிகள் நூல்தட்டும் பார்கள், பிரஸ்போட பண்டலிங் மிஷின் எல்லாம் வாங்கி 100 பெட்டிகள் சாயம் போடும் அளவுக்குத் தொழிற்சாலையைப் பெரிதாக்கினார். ரூ 10 வீதம் தனக்கு உதவியவர்களுக்குக் கொடுத்து வந்த கமிஷன் ரூ 500, 600 வீதம் உயர்ந்தது. வருவாய் வளர்ந்தது. தொழிலாளர்கள் வந்து சேர்ந்தனர்.

இடையில் தனது மைத்துனர் திரு. T. R. ராஜா ராவ் சென்னைக்கு வந்து குமாரசாமி அவர்களின் சாயப்பட்டறையில் ஒத்துழைத்தார்; அவருக்கு குமாரசாமியே முன்னின்று திருமணம் செய்து வைத்தார். தன் பெரியப்பாவின் மகள்-தமக்கையின்மகன் திரு. S. V. ராமாச்சாரி யன்பவரும் சென்னை வந்து வேலைசெய்யத் துவங்கினார். அப்பொழுது வயது 13 இருக்கும். அவருக்கும் தனது ஆதரவில் வேலை கொடுத்துப் பராமரித்தார்.

1929 ஆம் ஆண்டில் ஒரு ஆண்குழந்தை பிறந்தது. இரண்டாவது வயதில் இறந்துவிட்டது, பிறந்தபோதே ஏற்பட்ட ஆரோக்கிய மின்மையால். 1931-ல் ஒரு பெண் குழந்தை பிறந்தது. அதன் பிறகு ஒரு ஆண்டு கழித்து மூன்றாவது குழந்தை கர்ப்பத்திலே சிதைந்துவிட்டது. அந்தச் சிதைவின் காரணமாக ஏற்பட்ட எதிரொலிதான் திருமதி. சீதாலட்சுமியின் மரணம். கழிந்த ஏழு ஆண்டுகளாக கணவரின் கஷ்ட நஷ்டங்கள் அனைத்திலும், சரி பங்கு கொண்டு, உன்னத வாழ்க்கைப் பாதையைச் சீராக்குவதில்

ஊண் உறக்கமின்றி ஒத்துழைத்த துணைவியாரின் பிரிவு, ஈடு செய்ய முடியாத நஷ்டமாயிற்று. எந்தப் பெரிய சக்தியும் தீர்க்கமுடியாத வேதனையை அடைந்தார்-வாய் விட்டே அழுதும் விட்டார். ஆம்! ஆண்டாண்டு தோறும் அழுது புரண்டாலும் மாண்டார் வருவரோ மா நிலத்தில்?

தமக்கையார், ஆதரவும் பொறுப்பும் கொண்டு குடும்பத்தைக் கவனிக்கலாயினர். மீண்டும் விவாகப் பேச்சு துவங்கிற்று. முதல் திருமணம் செய்து கொள்ளும் போது, தான் ஒரு ஏழை குமஸ்தா. பெரியோர் தீர்மானப் படி நிச்சயம் செய்த பெண்ணை மணந்தார். சிறந்த படிப்போ, தேர்ந்த சிந்தனையோ, காலத்திற் கேற்ற முன் னேற்றமோ இல்லை என்றாலும் பத்தாவுக்கேற்ற பதிவிரதை யாய் எத்தாலும் கூடி இருக்கும் இயல்பினராய் வாழ்ந்தார்.

## மாதாவின் வரவும் மனைவியின் பிரிவும்

சொந்தமாகச் சாயத்தொழில் துவங்கிய சின்னாட் களில் தாயாரை சென்னைக்கு அழைத்துக்கொண்டு வந்து விட்டார். மகன் நாளுக்கு நாள் அபிவிருத்தி அடைந்து வருவதைக் கண்டு ஈன்ற பொழுதினும் பெரிதுவந்தாள்.

1930-ஆம் ஆண்டு வாத நோயால் படுத்த படுக்கை யானார். மகனும் மகளும் அன்னையைப் பேணி ஆவன செய் தனர். வயோதிகத் தாய்க்கு வாய்க்கு ருசியுள்ள 'பாதாம் ஹல்வா' போன்ற பட்சணங்களை வாங்கித் தருவார். தன் வாழ்வில் கண்டும் கேட்டும் இராத உயர்ந்த பட்சணங்களை அன்னையின் ஆசைதீர வாங்கிக்கொடுத்தார். அந்த பட்ச-

ணம் வாங்கிவந்தாலும் முதலில் விலையைக்கேட்பார் அவரின் அன்னை. உண்மையான விலையைச் சொன்னால் 'இத்தனை விலையுள்ளதை ஏன் வாங்கினாய்?' என்று கேட்டு சாப்பிட மறுத்துவிடுவாரோ என்று எளிய விலையைக் கூறுவார் திரு. குமாரசாமி. இங்ஙனம் ஆறு மாதங்கள். பின்னர் இயற்கை எய்தினார்.

"இப்போது நான் சொந்த வீடு, வாசல், பணியாளர்கள், பலவித வசதிகளுடன் வாழும்போது என் அன்னை பார்த்தால் எத்தனை ஆனந்தப்படுவாள்" என்று அடிக்கடி கூறுவார்.

ஆம்! இதனை வள்ளுவர் வர்ணிக்கிறார் அழகாக ஈரடிகளில்.

> 'ஈன்ற பொழுதினும் பெரிதுவக்கும்; தன் மகனைச்
> சான்றோன் எனக் கேட்டதாய்' என்று.

## வலிவற்ற தேகம்

> 'கொடிது கொடிது; வறுமை கொடிது.
> அதினிலும் கொடிது இளமையில் வறுமை'

எத்தனை உண்மையான கணிப்பு இது!

இங்ஙனம் இளமையில் வறுமையுற்ற உடல், வளர்ச்சியற்றுப் போயிற்று. சொந்தமாய் தொழில் வளமாகச் செய்தபின் உடலை உறுதியாக்கிக்கொள்ள எண்ணங் கொண்டார். அதற்காகப் பல்வேறு முறைகளைக் கையாண்டார்.

> 'தெய்வம் விளங்குமணிக் கோவில் — இந்த
> தேகம் உறுதி பெறவேண்டும்.'

சுத்தானந்த பாரதியின் சத்தான பிரார்த்தனை! ஆம் சுத்த சக்தியிடம் அதையே வேண்டுகிறார்.

இதையே நமது யோகாசனப் பேராசிரியரும் ஏற்றுக் கொண்டார். ஓய்ந்த நேரங்களில் 'ஸ்பிரிங் டெம்பிள்ஸ்' பயிற்சியை தினம் காலையில் செய்வார். இருப்பினும் உடல் ஆரோக்கியம் முற்றிலும் படியவில்லை. வசதி ஏற்பட்ட பின்னரும் ஆரோக்கிய உணவு சம்பந்தமாக, வீட்டில் உள்ள உணவு இலாகாவிற்கு ஒன்றும் தெரியாது. இவரும் அதில் போதிய கவனம் செலுத்த முடியாது போயிற்று. உழைத்து, உழைத்து அஜீரணக் கோளாறுகள் வரத்தலைப் பட்டன. பல மருந்துகளை அருந்தியும் போதிய பலன் இல்லை. ஜுரமும் அடிக்கடி வரத் தலைப்பட்டது. மாலை யானால் சர்வ சாதாரணமாகத் தலைவலி வரும். இந்த நிலை யில் தன் முதல் மனைவியும் மறைந்து விட்டார்.

ஆல் போல் தழைத்து, அருகுபோல் வேர் ஊன்றி, மூங்கில் போல் சுற்றஞ் சூழ்ந்து சாலச் சிறந்த வாழ்வை நடத்திய திரு. குமாரசாமி அவர்களின் வாழ்க்கை நாடகத் தில் இடைநேரம் இது! பிரிந்து விட்டமுதல் மனைவியின் ஸ்தானத்திற்கு மற்றோர் அரிவை வந்தாலல்லவா, இந்த நாடகம் முற்றுப் பெறமுடியும், பூர்ணமாக!

## மறுமண முயற்சி

மீண்டும் பெண்தேடும் படலம் துவங்கிற்று. மதுரை யில் தன் மூத்த தமக்கையார் ஒரு பெண் பார்த்தார். அப்பெண்ணை நேரில் பார்க்கும்படி அழைப்பு வந்தது.

நேரில் பெண்ணைப் போய் பார்த்தபோது கல்வியறிவற்றவ ளாகவே அக்கன்னி காட்சி அளித்தாள்; 'பார்க்கலாம்' என்று தமக்கையிடம் கூறி விட்டு சென்னை வந்துவிட்டார். அதற்குள் தமக்கை, தன் தம்பி சம்மதித்து விட்டதாக நினைத்து, மேளதாளத்துடன் ஒரு நகரில் சென்று 'பரியம்' கொடுத்து 'நிச்சயதார்த்தம்' நடத்திவிட்டார்.

திரு. குமாரசாமி சென்னைக்கு வந்தபின் இங்குள்ள நண்பர், உறவினர்கள் ஒரு பெண்ணைக் குறிப்பிட்டுப் பார்க்கும்படி கூறினர். பட்டணம் திரு. குபேரய்யருக் கும் திருமதி காவேரி அம்மைக்கும் ஏழாவது குழந்தையான சௌ. நாகம்மாள் என்ற கன்னியைக் கண்டார். அவர் களின் சொந்தஊர் சேலம். ஆனால் சுமார் 35 ஆண்டுகளாக சென்னையிலேயே இருந்தனர்.

இதற்கிடையில் மதுரைப்பெண் நிச்சயமாகிவிட்டது என தமக்கை தபால் எழுதினார். "நான் ஒப்புக் கொள்ளா மல் நீங்கள் நிச்சயித்தது தவறு" என்று தமக்கையின் வேண்டுகோளை மறுத்தார். தமக்கையார் 'மதுரைப் பெண்தான் நமக்குப் பொருத்தமானது; படித்த பெண் வீட்டுக்கு அடங்கமாட்டார்கள்; நான் பார்த்த பெண்ணுக்கென்ன அழகில்லையா? நீ சம்மதிப்பாய் என்று தானே நான் நிச்சயித்தேன்; எனவே இப்பெண்ணைத்தான் முடிக்கவேண்டும்' என்றார். பின்னர், தான் பார்த்த பெண்ணை வந்துபார்க்கும்படி தமக்கையாருக்குத் தபால் எழுதினார்.

சௌ. நாகம்மாள்-ஆம்! நான்தான்-அன்னாரின் இரண் டாம் மனைவி! எனக்கு அப்போது வயது 14. ஒன்பதாவது

வகுப்புப் படித்துக்கொண்டிருந்தேன். குடும்பம் நெருக்கடியான நிலையில்தான் இருந்தது. விளையாட்டானாலும் சரி; படிப்பானாலும் சரி; முதன்மையாக விளங்கி வந்த என்னைப் படிக்குமாறு பெற்றோர்கள் ஊக்குவித்தனர்.

நானும் படிப்பதாகவே முடிவு செய்திருந்தேன். இந்த சமயத்திலே பெண் பார்க்க வந்தனர். நான் தாயாரிடம், "படிக்கப்போகிறேன்; திருமணம் வேண்டாம்" எனத் தீர்மானமாகக் கூறியும் இருந்தேன்.

"அம்மா! அருமை மகளே!! அறியாத பருவத்தில் தெரியாமல் கூறுகிறாய். ஜாதிய முறைப்படி உன் வயது வரை நமது குடும்பங்களில் ஒரு பெண்ணை மணமுடிக்காது வைத்திருக்கமாட்டார்கள். 10, 12 வயதில் திருமணம் செய்துவிடுவார்கள். அதற்குமேல் போனால் யாரும் மண முடித்துக்கொள்ள சம்மதிக்கமாட்டார்கள். இம்மாதிரியான நல்ல குடும்பங்களில் சம்பந்தம் கிடைப்பதே மேல். இரண்டாந்தாரம் எனவே கேட்கின்றனர். மூத்த மனைவிக்கும் ஒரு பெண் குழந்தையாம். மாப்பிள்ளை நல்ல குணவான்; பெரிய மனிதர்" என்றார் தாயார்.

"மண முடித்தபின் மேல்படிப்புக்கு வகை செய்வார்களானால் மண முடித்துக்கொள்கிறேன்" என்றேன். பின்னர் மதுரையிலிருந்து அவருடைய தமக்கையார் வந்து பார்த்தார். அவர்கள் பேசிக்கொண்டது, நடந்து கொண்டது ஒன்றுமே பிடிக்கவில்லை. அவர்கள் பேசிக்கொண்டது பயமாகவே இருந்தது. அவர்கள் போனபின் என் தாயாரிடம் கேட்டேன் "அம்மா! அவர்களின் சொந்தக்காரர்கள் எல்லாம் இப்படிதானா?" என்று. "அப்படியல்ல; வேறு ஊர் பெண் பிடிக்கவில்லை போலும்" என்றார்.

முதல் தாரம், மறுதாரம் இவைகளின் வேற்றுமை களோ, குடும்ப சம்பந்தபட்ட விஷயங்களோ அறவே தெரியாது. பள்ளியுண்டு; நானுண்டு. படிப்பில் ஒரே கவனமாக இருப்பேன். ஸ்ரீ வெங்கடேசா என்பவர் ஆரிய சமாஜம் நடத்தி வந்தார். நாங்கள் குடியிருந்த வீட்டின் எதிர் பக்க ஹாலில் பல அறிஞர்கள் பேச்சாளர்கள் அடிக்கடி அங்கு வந்து சொற்பொழிவாற்றுவார்கள். சமாஜத்தின் கொள்கைகள் எனக்குப் பிடித்திருந்தன. “ஆசார அனுஷ்டானங்களைத் தடுப்பவர்கள், ஆண்டவன் கட்டளையை மீறுபவர்கள்” இப்படிக் கூறி என்னைத் தடைசெய்தனர், சமாஜ நடவடிக்கைகளில் கலந்து கொள்ளாதபடி.

அப்போது மற்றவர்கள் உணவைத் தொட்டாலோ, உண்ணும்போது பார்த்தாலோ தீட்டுப் பட்டுவிடும் என்று மதிய உணவை என் தாயாரே பள்ளிக்கூடத்தில் கொண்டு வந்து கொடுப்பார். இந்தக் குடும்பத்தில் ஆரிய சமாஜக் கொள்கைகளை எப்படி ஏற்க முடியும்? சமயத்தில் நிலவும் பூசல்கள், கடவுளின்மீது வைத்து நடத்துகிற பித்தலாட்டங்கள் அத்தனையும் என் சிறு உள்ளத்தைச் சிந்திக்க வைத்தன. சிறு பெண்தானே என்று என் குடும்பத்தினர் சிரித்து ஒதுக்கினாலும், பள்ளித் தோழிகளிடம் என் உள்ளக் கொதிப்பை எடுத்துக் கூறுவேன். அது பிரசங்கமாகவே அமைந்துவிடும். ‘இந்தியா’ ‘குடியரசு’ போன்ற பத்திரிகைகளை அப்போது அதிகம் படிப்பேன். நாங்கள் குடியிருந்த வீட்டை என் தந்தை வாடகைக்கு மொத்தமாக எடுத்து தனித்தனியாகப் பல பேருக்கு விட்டிருந்தார். 1931-ல் அன்னியத் துணி பகிஷ்காரம் நாடெங்கும் நடைபெற்றது. சட்டமறுப்பு, தடியடிப் பிரயோகம் தாண்டவமாடியது.

காந்தியடிகளைப் பற்றியும், உப்பு சத்தியாகிரஹத்தினைப் பற்றியும் பத்திரிகை வாயிலாக ஒருவாறு தெரிந்திருந்தேன். ஆனால் அவரின் அகிம்சையை ஏற்றுக்கொள்ளவில்லை. ஆயுத முனையின்மீது நின்று ஆட்சி செலுத்தும் ஒரு அரசாங்கம், நமது அகிம்சைப் போருக்கு அடிபணியுமா என்று சிந்தித்தேன்.

பகத் சிங்கின் மீது வெடிகுண்டு வழக்கு வந்தது. சுகதேவ், ராஜகுரு போன்றோர் அவரின் சகாக்கள். அவர்களைச் சிறைபடுத்திப், பயங்கரமாக, பரிதாபகரமாகத் தூக்கிலிட்டனர், தேசத்தின்மீது கொண்டுள்ள பாசத்திற்காக. எனது இளமை ரத்தம் கொதித்தது. உணர்ச்சிக் கனல் உள்ளத்திலே சுடர்விட்டு இலங்கியது. அந்த வயதிலேயே தேசிய ஆர்வம் எனக்கு தீவிரமாக இருந்தது. தோழிகளிடமெல்லாம் சொல்லுவேன், பகத் சிங்கைப் பற்றி. அப்போதே பல கதைகள் உண்டு; காந்தியடிகளைப் பற்றியும் பகத்சிங்கைப் பற்றியும். தனது ஆயுதத் தொழிற்சாலையில் ஏராளமான வெடிகுண்டுகள், பீரங்கிகள் செய்து வைத்திருந்ததாகவும், தூக்குமேடைக்குப் போகும் கடைசி நேரத்தில் வைசிராய் இர்வினை அழைத்துச்சென்று கண்ணைக் கட்டி செய்து, சுரங்க அறைக்குள் உள்ள தொழிற்சாலையை காட்டினாராம். காந்தியைச் சிறைப்படுத்தினால் வெளியில் பல நூறு காந்திகளாக உருவெடுப்பாராம். சிறை அதிகாரிகள் அடிக்கடி காந்தியைக் காணாமல் தவிப்பார்களாம். திடீர் என வருவதும் போவதும் அவருடைய இயல்பாம். இப்படி எல்லாம் அக்காலத்தில் கதை. இதைக்கூட நம்பினர். இந்த நம்பிக்கைகளும் சுதந்திர இயக்கங்களுக்குப் பக்க பலமாக அமைந்தன.

## சுதந்திரக்கிளர்ச்சிகள்!

பகத்சிங்கைத் தோழர்களுடன் தூக்கிலிடப்பட்ட போது அவர்களின் படங்கள் அமோகமாக விற்றன. எனது மேஜை அருகில் அந்தப்படத்தை வைத்துக்கொண்டு அடிக்கடி கண்ணீர் விட்டிருக்கிறேன்.

ஒரு நாள் சில வாலிபர்கள் என் தகப்பனாரிடம் வந்தார்கள்; "நாங்கள் பற்பொடி வியாபாரிகள்; எங்களுக்கு அறை வாடகைக்கு வேண்டும்" என்றனர். அறை தரப்பட்டது. அங்கு பலர் போவார்கள், வருவார்கள். அறையிலே தங்கிப் புதிய புதிய மனிதர்களிடம் பேசுவர். கத்தை கத்தையாக நோட்டீஸ்களை வைத்திருப்பார்கள். எல்லோரும் கதர் அணிபவர்கள். எனக்கு அப்போது வயது 13 இருக்கும். என் தந்தைக்கு அரசியல் தெரியாது. அவர்களிடம் உள்ள நோட்டீசுகளைக் கேட்டேன். பல்பொடி விளம்பரம் என்று கூறிவிட்டனர். நானும் நம்பினேன். அன்று இரவு வீட்டு வாசலில் பெரிய போலீஸ் லாரி வந்து நின்றது. புற்றீசல் போல் போலீஸ்காரர்கள் கிளம்பினர். வீட்டிற்குள் விரவிய போலீஸ்காரர்கள் அங்குள்ள குடித்தனக்காரர்களிடம் ஓடிச்சென்று ஏதேதோ விசாரிக்கின்றனர். எங்களுக்கு பயம் பிடித்துவிட்டது. நாங்கள் குடியிருந்த வீட்டிலும் நுழைந்தனர். அப்பா இல்லை. நானும் அன்னையும் இருந்தோம். இங்கு யார் இருக்கிறார்களென்று என் தாயாரைக் கேட்டனர். நாங்கள் மட்டுந்தான் என்று பதில் சொன்னார். அதோடு முன் கதவை இழுத்துப் பூட்டினர். மாடியில் ஒரே ரகளை—அடிதடி.—ஓடுவதும் சாடுவதுமாக இருந்தனர். அப்போதுதான் தெரிந்தது.

இவர்கள் பல்பொடி வியாபாரிகள் அல்ல; காங்கிரஸ் தொண்டர்கள் என்று. பூண்கொண்ட தடியால் ஒரு தொண்டரை மாடிப் படிக்கட்டில் அடிப்பதை நான் கண் கொண்டு பார்த்தேன். ஒரு சப்-இன்ஸ்பெக்டர் பூட்ஸ் கால்களால் உதைத்தார். மூர்ச்சித்து விழுந்தார், அடி பட்ட காங்கிரஸ்காரர். 'சோம்பேறிப் பசங்களுக்கு சுதந்திரமா?' என்று கேட்டு மனிதாபிமானமின்றி ஒரு தொண்டர் தாக்கப்பட்டார். இப்படிப் பல தாக்குதல் மாடி மீது. எங்களுக்குத் தெரியாது எத்தனையோ அக்கிரமங்கள் நிகழ்ந்தன. ஒரு மணி நேரம் தாக்குதல் நடந்தன. எல்லாத் தொண்டர்களும் வாசலில் நிறுத்தப்பட்டனர். ஒருவருடைய மண்டை உடைந்து ரத்தம் ஒழுகிக்கொண்டிருந்தது. மற்றொருவருக்கு நெற்றியிலிருந்து ரத்தம் வடிந்தது. உடைகளெல்லாம் ரத்தம். எல்லோருக்கும் நல்ல அடி. தொண்டர்களால் நிற்க முடியவில்லை. இதைக் கண்டு எனது நெஞ்சம் கொதித்தது. ஒவ்வொரு போலீஸ்காரனையும் சுட்டுப் பொசுக்கவேண்டும் என்றுகூட தோன்றிற்று எனக்கு அழுகையும் பெரு மூச்சும் தாங்க முடியவில்லை.

'பாரத மாதாக்கி ஜே! மகாத்மா காந்திக்கு ஜே!!' கோஷங்கள் வானைப் பிளந்தன. அந்த நிலையிலும் தொண்டர்கள் கோஷித்தனர். எனக்கு உடல் புல்லரித்தது. முன் வராந்தாவிலிருந்து நானும் கத்தினேன். அன்று முதல் 'விடுதலை யின்றி நமக்கு விமோசனமில்லை' என்று கருதினேன். 'வெள்ளையர்கள் என்றால் வெறுத் தொதுக்கப்பட வேண்டியவர்கள், மனித இனத்திலிருந்து' எனக் கருதினேன். ஆம்! வெள்ளையர்கள், இந்தியர்களுக்கு புத்தியில்லை அவர்களுள் ஒற்றுமை இல்லை என்று கூறுகின்

றனர். ஆனால் அதைக் கேட்டு, மானமீனமின்றி இந்தியப் போலீஸ்தானே இந்தியர்களைத் தாக்குகின்றது. இந்தக் கயவர்களுக்கு என்ன தண்டனை அளிப்பது? என்று மனம் புழுங்குவேன். பிழைப்பு கிடைக்கவில்லையேல் இந்தப் பேடிகள் பிச்சை எடுக்கட்டும். அடிமை நாட்டில் அரசனாக இருப்பதைக்காட்டிலும் சுதந்திர நாட்டில் தோட்டியாக இருப்பது நலமல்லவா? இப்படி இளமையில் பெருக்கெடுத்த தேசிய உணர்ச்சி எனது உள்ளத்தில் புயலோடும் புரட்சி எண்ணங்களை வளர்த்தன. வெள்ளையரை வெளியேற்றும் வீரவேள்விக்கு நானும் தயாரானேன். பின் காந்தியடிகளின் பிரசங்கங்கள், அவரின் நூல்கள், தியாக புருஷர்களின் சரிதைகள், சுதந்திர இயக்கம் பற்றிய வரலாறுகள் இவைகளைத் தேடிப் பிடித்து படிக்கலானேன்.

## என் தந்தை கைது

இந்த சம்பவத்திற்குப் பிறகு மறுநாள் காலை 10 இருக்கும். ஒரு போலீஸ்காரன் என் தந்தையைப் போலீஸ் ஸ்டேஷனுக்கு வருமாறு அழைத்தான். துண்டை எடுத்து தோளில் போட்டுக்கொண்டு சென்றவர், மதியம் ஆகி, மாலையும் ஆகிவிட்டது, வரவில்லை! நாங்கள் ஏது நடந்ததோ என வருந்தி என் அண்ணனை விசாரிக்க அனுப்பினோம். 'காங்கிரஸ்காரருக்கு வீட்டை வாடகைக்குக் கொடுத்ததால் தந்தை சிறைப்படுத்தப்பட்டார்' என்று தகவல் கிடைத்தவுடன் நாங்கள் அழுதேவிட்டோம். இடியோசைக் கேட்ட நாகம்போல் அன்னை திடுக்கிட்டு வேதனையுற்றாள். அன்றே அடிமை அரசாங்கத்தை தகர்க்க நானும் உறுதி பூண்டேன்.

ஒருவர் கண்ணில்பட்ட உணவையோ, ஒருவர் கைபட்டு விட்ட பொருளையோ, நாமம் போடாமலோ, தினம் இரு முறை குளிக்காமலோ, பூஜை செய்யாமலோ, சாப்பிடாதவர் என் தந்தை. அவர் எப்படிச் சிறையில் தவிக்கிறாரோ என்பதை நினைத்து நாங்கள் அடைந்த வருத்தத்திற்கு வரை முறை இல்லை.

"வருந்தாதீர்கள் அம்மா! வந்துவிடுவார்கள்; தெரியாமல்தானே அவர்களுக்கு வீடு வாடகைக்கு விட்டீர்கள்; அதனால் விசாரித்து விட்டு விடுவார்கள்; விரைவில் ஐயா வந்து விடுவார்" எனக் குடித்தனக்காரர்கள் சமாதானங் கூறினார்கள். என்ன சமாதானங்கூறினாலும் வேதனை குறைந்தபாடில்லை. இரு வேளை சமைக்கவில்லை. பிறகு ஏதோ சமைத்து ஒப்புக்குச் சாப்பிட்டோம்; தந்தையை நினைத்து நினைத்து நாங்கள் இரவெல்லாம் அழுதோம்.

இருந்தரும் மனையும் நீங்கி, இடர் மிகு சிறையிற்பட்டும் பதந்தரு இரண்டுமாறிப் பழிமிகு இழிந்து பட்டு, விதந்தரு கோடி இன்னல்கள் விளைந்து நம்மவரை அழித்துக்கொல்வதும் வெள்ளையரின் கொள்ளைக்கார ஆட்சிதானே! இந்த ஆட்சியின் வேட்டை நாய்களென நமது சகோதரர்கள் பணியாற்றுவது அனுமதிக்கத்தக்கதா? இந்த நாட்டு சகோதர இனத்தின் மீது இந்த நாட்டு அதிகாரிகளே நரவேட்டை நடத்துவதா? கேவலம்! கீழ்மை!! என்று பொங்கிப் பொரிந்தேன்; பயங்கரமான மிகப்பெரிய போலீஸ் அதிகாரிகளாக மதிக்கப்படுபவர்களை சோற்றாலடித்த சொரணையற்ற பிண்டங்களாகக் கருதினேன்.

நாட்கள் ஏழு! அப்பா விடுதலை! எங்களுக்கு பிரிந்தவர் கூடிய பெருமிதம்-விசாரணையையும், விடுதலையான விஷயத்தையும் விளக்கினார், தந்தை.

'வீட்டை அவர்களுக்கு வாடகைக்கு விட்டது உண்மையா?'

'ஆம்!'

'நீயும் அவர்களுடன் சேர்ந்த புள்ளியா?'

'இல்லை!'

'பின் எப்படி வாடகைக்கு விடலாம்?'

'பற்பொடி வியாபாரம் செய்ய அறை தேவை என்றார்கள்?'

'சரி போ!'

'நான் அவர்களோடு சேர்ந்தவன் அல்ல' என்று என் அப்பா குறிப்பிட்டதைக்கண்டு எனக்கு வருத்தம். 'நானும் தேசியவாதி; நானும் சுதந்திரம் விழைபவன்' என்று கூறி இருந்தால் எனக்கு எத்தனையோ மகிழ்ச்சியாக இருக்கும்; இருந்திருக்கும். என் அப்பா முன் தாராளமாக நான் பேசமாட்டேன். அவ்வளவு பயம்—அதிலும் இப்படிப்பட்ட அபிப்பிராயத்தை சொல்லமுடியுமா? அவர் தலை தப்பியது தம்பிரான் புண்ணியம் என்று வந்த நிலையில் சொன்னால் என்ன ஆவது?

## பரியம் தரப்பட்டது!

என்னைப் பெண்பார்த்து விட்டு தமக்கையின் அழைப்பின் பேரில் ஸ்ரீ குமாரசாமி மதுரை சென்று பெண்பார்க்கப்

போனார். அப்போது எனது வயது 14. நான் புஷ்பவதி யாகிவிட்டேன். சுய ஜாதிமுறைப்படி புஷ்பவதியாகிவி டால் பெண் கொள்ளமாட்டார்கள், யாரும். இது ஒரு பெருத்த கவலையாகி விட்டது, பெற்றோர்களுக்கு. சோதிட ரிடம் செல்லவேண்டிய அளவுக்கு வந்துவிட்டது, எனது புஷ்பவதியான நேரபலன். பல சோதிடர்கள், என் ஜாத கத்தை உயர்ந்தது என்றும், கவலைப்படவேண்டாம் என்றும், 100 ஆட்கள் கைகட்டி, நிற்க ராஜாத்தியாக வாழ்பவள் என்றும், இரண்டாந் தாரமாகவே வாழ்க்கைப் படுவாள் என்றும் கூறினர். எனக்கு ஒருபுறம் மகிழ்ச்சியும், மறுபுறம் சோதிடத்தில் அவமதிப்பும் கொண்டேன். 'தாய் தந்தையர்களுக்கு மகளால்தான் பலனே அன்றி, ஆண்பிள்ளைகளால் பலனே இல்லை' என்றும் ஜாதகத்தின்மூலம் சோதிடர் பேசினார். படிப்பு பலன் இல்லை என்றார். படிப்பைப் பற்றி சோதிடர் கூறியதுகண்டு எனக்கு ராட்சஸக் கோபம் வந்தது. 'இதோ நான் படிக்கப்போகிறேன்; இப்போதே படிப்பில் ஏகப்பட்ட அக்கரை இருக்கிறது. இன்னும் படிப்பேன் என்ற நம்பிக்கை இருக்கிறது' என்று கூறினேன், சோதிடரிடம். ஆனால் படிக்க முடியாத நிலை உண்மையிலேயே ஏற்பட்டுவிட்டது. இதற்கு ஜாதகந்தான் காரணம் என்று நம்பிக்கையோடு நான் சொல்லத்தயாராக இல்லை. பரீட்சை முடியும்வரை பள்ளிக்குச் சென்றேன். தந்தையார் எனது திருமண ஏற்பாடுகளில் தீவிரமாக இறங்கினார். இது சம்பந்தமான பல தகவல்களை வீட்டில் வந்து சொல்வார். "மதுரையில் பெண்பார்த்துப் பரியம் கொடுத்துவிட்டார்களாம்" என்று சொன்னார். பெற்றோர்கள் வருந்தினார்கள், நான் 'குளிர்

விட்டது; இனி தாராளமாகப் படிக்கத் தடையேதுமில்லை என்று மகிழ்ந்தேன்.

ஒரு நாள் பல பெண்கள், ஆண்கள் வண்ணாரப் பேட்டையிலிருந்து வந்தார்கள். நீங்கள் ஒரு வாரத்திற்கு முன்பே வந்து மூத்த தாரத்தின் வீட்டில் தங்கவேண்டியது. அங்கு வைத்துப் பரியம் தரப்படும் என்றார்கள்.

"மதுரையில் பரியம் கொடுத்த பெண் என்ன ஆவது?"

எங்களுக்கு ஒன்றுமே புரியவில்லை. பின் என் தகப்பனருக்கு 'நிறுத்தப்பட்டு' விட்டதாக தகவல் தெரிந்தது.

எப்பொழுதுமே நிரந்தரமாகச் சில திட்டங்களை வைத்துக்கொண்டுதான் செயலில் ஈடுபடுவார், திரு. குமாரசாமி. சொன்னால் ஏற்கும் சக்தி வீட்டில் வேண்டுமல்லவா? குடத்திலிட்ட விளக்குபோல் மனதுக்குள் சீர்திருத்த மனப்பான்மையும் முற்போக்கு சிந்தனைகளும் இருந்து பயன்? இல்லாளின் ஒத்துழைப்பின்றி எதைச் சாதிக்க முடியும்? இதை வான்புகழ் வள்ளுவன் என்ன அழகாகக் கூறி உள்ளான்:

மனை மாட்சி இல்லாள்கண் இல்லாயின் வாழ்க்கை
எனை மாட்சி தாயினுமில்.

சென்னைப் பெண் பிடிக்கிறது. ஆனால், அவருடைய உறவினர்களின் எதிர்ப்பு வலுக்கிறது. படித்த பெண் வேண்டாம்; குடும்பத்திற்கு ஒத்து வராது என. தமக்கையாரின் மனம் கோணாமல் நடக்கும் இயல்புள்ளவர் இவர். தனக்குப் பிடித்ததைத் தமக்கை மறுக்கிறார். ஆம்! இது

வும் ஒரு தர்ம சங்கடமான பிரச்சனையாகிவிட்டது. முடி வின்றி திரிசங்கு நிலையில் தவித்தார்.

## ஆண்டவன் சன்னதியில்

திரு. குமாரசாமி அவர்கள் பால்ய முதல் பகவத் கைங்கரியங்களில் பற்றுள்ளவர். மதுரையில் சிறுவனாய் இருந்தது முதல் மணமாகி சென்னை வரும்வரை அன்றாடம் அம்மை மீனாட்சியின் ஆலயத்திற்குச் செல்ல மறந்ததில்லை. அதோடு அங்கு, 'நம்பிரான் மணிமுடிச் சொக்கனும் நந் தாய் மதுராம்பிகை மீனாட்சியும்' அங்குள்ள பூசாரிகளால் படுத்தப்படுகிற பாட்டை இவர் காணுந்தோறும் சிந்தனை யிலே வரட்டு தெய்வீகம் ஏறுவதற்கு பதில், சீர்திருத்த எண்ணங்கள் தான் ஏறினவாம். இதை அடிக்கடி ருசிகர மாகச் சொல்லுவார்.

'எங்கும் நிறைந்து ஏக பரம்பொருளாகி நிற்கும் இறைவனை எப்படியோ ஒரு உருவமாக்கி, அவருக்கொரு ஆசை நாயகியைப் படைத்து, அவள் தூங்கும்போது, அடுத்தொரு வைப்பாட்டியிடம் போவதை மனைவி தெரிந்து, கணவன் மீது விபசாரக் குற்றம் சாட்டித் தண்டித்து, தன் னுடன் சேர்த்துக்கொள்வது'.

இதுபோன்று அரூபியான ஆண்டவனை அசிங்கப்படுத் தும் அநீதத்தைக் கண்டு, வைதீகத்தின் மீது பெரு வெறுப் புக் கொண்டார் எனினும், ஆண்டவன் இல்லை என்ற நிரீஸ்வர வாதத்திற்கு அவர் வரவில்லை.

அன்று அதிகாலை. கிருத்திகையுங்கூட. குளித்து நீராடி, கோவிலுக்குச் சென்றார் சைக்கிளில் யாரிடமும்

சொல்லாமல், தனது திருமணத்தைப் பற்றி ஆண்டவன் திருவுள்ளத்தைத் தெரியவேண்டும் என்று கஸ்தூரிப் பூக் களில் வெள்ளை, சிவப்பு நிறங்கள் உள்ள பூக்களைக் அங்குள்ள திருமுருகன் திருவடி முன்பு சமர்ப்பித் தார், யாரும் இல்லாதபோது. விபரமறியாத பையனை விட்டு எடுக்கச் சொன்னபோது வெள்ளைப்பூ வந்தது. அது என்னை குறிப்பதாகவே இருந்தது. எனவே என் னைத் தான் மண முடிப்ப தென்றும், பரியம் தரப்பட்ட மதுரைப் பெண்ணை நிறுத்திவிடவேண்டும் என்று தீர்மானித் தெடுக்கப்பட்ட இறைவனின் முடிவாக வைத்துக்கொண்டு தமக்கையையும், சம்பந்தப்பட்டவர்களையும் அழைத்துத் தனது சம்மதத்தைத் தெரிவித்தார். ஆனால் பூக்கட்டிப் பார்த்த நிகழ்ச்சியைக் கூறவில்லை.

"விவாகம் என்பது விளையாட்டல்ல; இன்று நாளை தீருவதுமல்ல; ஆயிரங்காலப் பயிர். மண முடித்து வாழ் பவன் நான்; எனது வாழ்வின் சுக துக்கங்களில் உங்க ளுக்கு அக்கறை இருப்பினும், எனக்குத் திருப்தி ஏற்படாத வரை நான் வாழ்வதில் ஒரு அர்த்தமும் இல்லை. எனக்கு சென்னை பெண் பிடித்திருக்கிறது. என் சம்மதமில்லா மல் தமக்கையார் பரியம் தந்தது என்னைக் கட்டுப்படுத் தாது. சென்னைப் பெண்ணையே மணக்கப் போகிறேன்" என இறுதியாக வரையறுத்துக் கூறிவிட்டார்.

## மணவிழா

'ஐந்துதலைப் பாம்பென்பார் அப்பன்—ஆறுதலை
என்று மகன் சொல்லிவிட்டால்
அஞ்சுது முகட்டிலென்பார்'

இப்படிக் கதை கட்டிவிடும் நம்மவர்களுக்குச் சொல்லியா தரவேண்டும்? திரித்தவரையில் கயிறுதானே. எங்களைப் பற்றியும், மாப்பிள்ளையைப் பற்றியும் அவர்கள் வஞ்சனை கூற கொஞ்சமும் பின்வாங்கவில்லை. அவர் எங்கள் வீட்டுக்கு தினம் வந்து போவதாகவும், பால் பழம் தவறுமல் அருந்துவதாகவும், ஏதோ மருந்து வைத்து நாங்கள் மயக்கிவிட்டதாகவும் கூறத்துவங்கினர். கடைசியில் மனமில்லாமல் இந்த மணத்தை ஒப்புக்கொண்டனர். குறிப்பிட்டபடி வண்ணாரப்பேட்டைக்கு நாங்களும் வந்தோம். மறுநாள் நிச்சயதார்த்தம்; ஒரு வாரம் பொறுத்து திருமணம். 13-7-32 தேதி சம்பிரதாயபடி ஐந்து நாள் திருமணம் வெகு சிறப்பாக நடைபெற்றது. முதல் மனைவியின் நினைவாக என் பெயரையும் சீதாலட்சுமி என்று அனைவரும் என்னை அழைத்தனர். எனது துணைவர் ஒரே ஒரு நாள் தான் கலியாணமானபின் என் பெற்ரோர் வீட்டில் விருந்துண்டார். பின்னர் வர மறுத்துவிட்டார். பொய்யும் புரட்டும் புகாரும் உற்பத்தி செய்வதே வாழ்வின் லட்சியமாகக் கொண்ட ஒரு கும்பல், எதை எதையோ தினம் விடிந்தால் கிளப்பிக் கொண்டே, இருந்தது. எனக்குக்கூட அடிக்கடி மன வேதனை வரும்.

என்னை வெறுத்துப் பேசும் உறவினர்கள் ஒரு புறம்—என்னைக் காக்கவேண்டிய பொறுப்பு மறுபுறம்—இதனிடையில் யாரையும் கடிந்துகொள்ள முடியாத நிலை. ஆனால் இவைகளுக்கிடையில் அவர் கூறியது இதுதான்:

" நான் உன் கணவன். நீ என் மனைவி. நான் உன்னை மனமாறநேசிக்கிறேன். இந்த வீட்டிற்கு நீ தான் அதி

காரி. மற்றவர்களைப்பற்றி நீ சிந்தனை செய்யாதே. என்சகோதரி மிக நல்லவர். சொல்லுவார் பேச்சைக் கேட்டு சற்று மாறுபாடு அடைந்திருக்கலாம் நீ படித்தவள்; சுயமாகச் சிந்திக்கும் திறமை உண்டு. எனவே, சொல்லவேண்டியதை என்னிடம் சொல்—கேட்கவேண்டியதை என்னிடம் கேள்; வீட்டுக்குத் தேவையானவற்றைத் தமக்கையாரிடம் கேள்; யாரையும் திட்டுவது நமது நோக்கமல்ல; திருத்துவதுதான் நமது கடமை.'

இந்த அறிவுரைகள் என் வாழ்வில் இன்றும் பொன்னிலும் அருந்தனமாகப் பயன்படுகின்றன. என்னைப்பற்றி தீயது கூறுபவர்கள் யாராக இருந்தாலும் சரி; அந்த நிலைக்கு நான் வருந்தி அவர்களின் மீது பரிதாபப்படுவேனே அன்றி, வஞ்சம் தீர்க்கும் எண்ணத்திற்கு என் இதயத்தில் கிஞ்சித்தும் இடந்தரமாட்டேன். என்னைப்பற்றிய பொய் வதந்திகளை என் கணவரிடம் கூறி, அவர் நெஞ்சைப் புண்ணாக்க முயலுவதும் இல்லை. இது என்னுடைய இயற்கையான இயல்புங்கூட. இந்த நிலையில் என் கணவரைத் தத்துக்கொடுத்த தாய் தந்தையர்களும் வந்துசேர்ந்தனர், வளர்ப்புப் பெண்ணோடு.

## புரையோடிய பூசல்கள்

குழந்தைகள் என்றால் எனக்கு உயிர். முதல் தாரத்தின் குழந்தை, எனது சொந்தக் குழந்தை என்று பாகுபாடு இல்லை. அதிலும் தாய் இல்லாக் குழந்தையை எனக்கு மிகவும் பிடித்துவிட்டது. என் விளையாட்டு சாமான்களை அவளுக்குத் தந்தேன்; எனக்குத் தெரிந்த பூவேலைகளை என்

லாம் தைத்துப் போடுவேன்; எதிர்பாராத தவறு இயற்கையாக நேர்ந்தாலும் அறஞ்சூழும் பழியாக ஆகிவிடுகிறதே என்ற பீதியும், பயமும், நடுக்கமும் எனக்கிருக்கத்தான் செய்தன. இருப்பினும் நான் வெள்ளையான உள்ளம் படைத்தவள் என்பதை மனசாட்சி உள்ளவர் யாரும் என்றும் மறுக்க முடியாது. எனவே வெள்ளைக்கேது கள்ள சிந்தை? இத்தனையும் மீறி அபாண்டங்கள் கிளம்பிக்கொண்டுதான் இருந்தன. சுருங்கச் சொன்னால் புகை நடுவினில் தீயாக இருந்து வந்தேன்.

வேலைக்காரிகூட நான் சொன்னால் எதையும் செய்ய மாட்டாள். எல்லோருடைய துணிமணிகளையும் துவைப்பாள்; என் துணிமணிகளைமட்டும் ஒதுக்கிவைத்து விடுவாள். நானேதான் தோய்த்துப் போடுவேன். எனக்கு தலைமுடி நிறைய இருக்கும். நான் ஒரு நாள்கூட கசக்கி அறியேன். மற்றவர்கள் ஸ்நானம் செய்யத் தண்ணீர் நிரப்ப ஆள் வரும். எனக்கு ஒரு அண்டா தண்ணீரை நானே நிரப்பி, அதிலேதான் குளிக்கவேண்டும். சரியாகத் தலையில் சிகைக்காய் போயிருக்காது. எண்ணெய்ப்பசும் போயிருக்காது. யாரையும் கூப்பிட்டுச்சொல்லவும் பயம். சொன்னாலும் நடவாது என்பதும் தெரியும். ஒரு நாள் என் தாயார், எண்ணெய்போகாமலும், சிகைக்காய் போகாமலும் தலை முழுகி இருப்பதைப் பார்த்து "இது என்ன இப்படி? யாரும் கசக்கிவிடவில்லையா? தலைக்குத் தண்ணீர் நிறைய ஊற்றிக்கொள்வதற்கென்ன?" என்றார். "தண்ணீர் போதவில்லை; நானே கசக்கிக்கொண்டேன், அரைகுறையாக" என்றேன். மறு வெள்ளியன்று அம்மாவே வந்து தலை கசக்கி விட்டாள். இது மற்றவர்களுக்குப் பிடிக்க

வில்லை; அதற்காகப் பெரும் அபாண்டத்தைச் சுமத்தி ஞர்கள்.

எப்படியோ ஒரு தடவை என் மோதிரம் கழன்று விழுந்துவிட்டது. தேடிப் பார்த்தும் கிடைக்கவில்லை; என் தாயாரிடம் கொடுத்துவிட்டு 'ஜாலம்' செய்வதாகச் சொன்ஞர்கள். ஒரு நாள் வேலைக்காரப் பெண்ணொருத்தி, ஸ்நானம் செய்துவிட்டு வாங்கிக்கொள்வதாக கூறி கம்மல் களைக் கழற்றி என்னிடம் கொடுத்துவிட்டுச் சென்ருள். நான் மறந்துபோய் உட்கார்ந்த இடத்தில் வைத்துவிட்டு வந்துவிட்டேன். திரும்ப வந்து அவள் கேட்டபின்தான் நினைவுக்கு வந்தது. தேடிப் பார்த்தேன், வைத்த இடத் தில் கிடைக்கவில்லை. அதையும் என் தாயாரிடம் கொடுத்தனுப்பியதாகப் பெரும்பழி என் தலைமீது விழுந்தது. இந்த நிகழ்ச்சியைத்தான் நேரில் பார்த்ததாக என் கணவ ரிடம் அவருடைய வளர்ப்புத் தந்தையே கூறி இருக்கிருர். அவர் அதை என்னிடம் கேட்க மனம் துணியவில்லை. ஆனல் கேட்டார். இதன் உண்மை என்ன? என்று. "இது அபாண்டம்; வைத்த இடம் மறந்துவிட்டேன். மீண்டும் பார்த்தேன் கிடைக்கவில்லை" என்றேன். இந்த நிகழ்ச்சிகள் தாய்-சேய் உறவைப் பிரித்தன. தாயார், வீட்டுக்கு வந் தாலும் அதிகம் பேசுவதில்லை. இந்த சம்பவங்கள் பெற் ருேர்களுக்குத் தெரிந்து வருந்திஞர்கள். தீபாவளிக்கு அழைத்தார்கள் என் பெற்ருேர்கள், தம்பதிகள் சகிதம். மறுத்துவிட்டார் என் தலைவர். நான் பல நாட்களுக்கு முன்பே சொல்லி இருந்தேன் 'தீபாவளி அன்று ஆரிய சமாஜத்திற்குப் போவோம்' என்று.

## தலை தீபாவளி

ஆரிய சமாஜத்தின் கொள்கை, கோட்பாடுகளை அறிந்து கொள்ளவேண்டும் என்று அவருக்கு ஆசை அதிகம். வீட்டு விஷயங்களைத்தான் பேசத்துணியவில்லையே தவிர, அவருடன் பொது விஷயங்கள் பற்றி தடையின்றி உறவாடுவேன் - மனப் பூர்வமாகப் பேசுவேன். தமக்கை மகன் திரு. K. R. வெங்கடாசலபதி, பெரிய தமக்கை மகன் திரு. S. V. ராமாச்சாரி இவர்கள் எல்லோரும் என் கட்சியை ஆதரிப்பார்கள். திட்டமிட்டபடி தீபாவளி அன்று ஆரிய சமாஜத்திற்குப் போனோம். அப்போது ஸ்ரீ K. ஞானி தான் அதனை நடத்தி வந்தார். புத்திக் கூர்மையையும், தெளிந்த ஞானமும், தேர்ந்த அனுபவமும் உள்ள அவர் நெடுங்காலம் சென்னையில் ஆரிய சமாஜக் கொள்கைகளைப் போதித்து வந்திருக்கிறார். இளவயதிலிருந்தே அவரை நன்கு அறிவேன். அன்று பல அறிஞர்கள், சுவாமி தயானந்த சரஸ்வதி அவர்களை பற்றியும், சமாஜத்தின் கொள்கைகள் குறித்தும் சொற்பெருக் காற்றினர்.

இடையில் ஒரு ஆள் வந்தது, சிவ பூஜையில் நுழைந்த கரடி போல. என்தாு அண்ணா ஏதோ கூச்சல் போடுவதாகவும், உடனே வரவேண்டும் என்றும் வந்தவன் தந்த தகவல். எனக்கு ஒரே பீதி.

ஆத்திரமும், அடங்காத கோபமும், மூக்கின் மீது நிற்கும் முரட்டு சுபாவமுள்ளவர். போக்கிரி என்றாலும் பொருத்தமான பட்டந்தான், அவருக்கு. என்ன நடக்கப் போகிறதோ என்ற திகில் வேறு எனக்கு. நான் போவதற்குள் அவர் போய்விட்டார்.

எப்படி தலை தீபாவளிக்கு வாராமல் இருக்கலாம்? நாங்கள் என்ன அவ்வளவு கேவலமானவர்களா? ஏழைகள் என்றால் எங்களை அவமானப் படுத்தலாமா? திருட்டுக் குற்றம் சாட்டும் அளவுக்கு யார் எதை நேரில் கண்டார்கள்? நிரூபிப்பார்களா என் முன் வந்து? பிறகு வந்து பேசிக் கொள்கிறேன். பெண்ணையும் மாப்பிள்ளையையும் எங்கள் வீட்டுக்கு அனுப்பவேண்டும்; இல்லையானால் கொலை விழும்.

இதுதான் என் சகோதரர் கூறிய வார்த்தைகள். குரலில் கொஞ்சம் முரட்டு சுபாவம் கலந்திருந்தது. ஒன்று ஒன்பதாகி, ஓராயிரமாகி யுகப்பிரளய ரகளையாகி விட்டது.

தமக்கையார் என் கணவரிடம் 'நான் முன்பே சொன்னேனே கேட்டாயா? புதிய ஊரார் வீட்டில் சம்பந்தம் வேண்டாம் என்று படித்துப் படித்துச் சொன்னேனே; உனது காதில் ஏறியதா என்வார்த்தைகள்?' என்று அழுதார்.

'அடிமேல் அடிவைத்தால் அம்மியும் நகரும்-கரைப் பார் கரைத்தால் கல்லும் கரையும்' என்பது புலனாயிற்று. திடீர் என்று என் நகை நட்டுகளை எல்லாம் கழற்றி வாங்கிக் கொண்டு "நீ உன் தாய் வீட்டுக்குப் போகலாம்" என்றார்.

"மணமுடித்தபின் இது என் வீடு; அம்மாவீட்டில் எனக் கென்னவேலை" என்றேன். மறுகணம் கடும் நிபந்தனை பிறந்தது அவர் வாயிலிருந்து. பூரணமனதுடன் ஏற்றுக்கொண்டேன்.'

"நீ இங்கிருப்பதானால் உன் பெற்றோர் பிறந்தோர், இங்குவரக்கூடாது; நீ அவர்களுடன் பேசவும் கூடாது"

பெற்றோரோடோ, பிறந்தாரோடோ பேசுவதும் இல்லை. புழங்குவதும் இல்லை. அவர்கள் இங்கு வருவதும் இல்லை. நான் தெருவில் போகும்போது யாராவது பார்த்தால் போதும்; புதியகதை ஒன்று பிரசுரமாகிவிடும். சிந்தனைக் கெட்டாத கற்பனைகள் நிரம்பி இருக்கும், அதில். ஆணிமுதல் கோணிவரை அத்தனையும் அம்மா வீட்டிற்கு அள்ளிக் கொடுத்துவிட்டேன் என்ற புதிர்கள் பொங்கிப் வழியும்.

இந்தப் பிரச்னை நாளுக்கு நாள் வளர்ந்து வந்தது எனது பொறுமையையும் பெருத்த அளவுக்கு சோதனை செய்து வேதனையை விரித்துவிட்டது. நெஞ்சம் பொறுக்கவில்லை. யாருக்கும் தெரியாமல் கிணற்றில் விழுந்து இறந்துவிடுவது என்று தீர்மானித்தேன். இதைத்தவிர புதியயோசனைகள் எதுவும் தென்படவில்லை ஆம்! நான் படுகிற பாடு தாளம் படுமோ? தறிபடுமோ?

தற்கொலை செய்துகொள்ளும் எண்ணத்தோடு கிணற்றடிக்குச் சென்றுவிட்டேன். பிறகு நினைவுக்கு வந்தது, நான் கர்ப்பமுற்றிருப்பது. கோழைத்தனமும், பாவமும் நிறைம்பிய இச்செயலுக்கு நான் துணிந்ததை வருந்தினேன். யாருக்கும் தெரியாமல் போய் படுத்துக்கொண்டேன். நாட்கள் எவ்வாறோ ஓடின.

## புதிய வீடும் தொழிலகமும்

பச்சரிசிசாதம் சாப்பிட்டுத்தான் எனக்கும் பழக்கம். வீட்டில் புழுங்கலரிசிதான் சமைப்பார்கள். முதலில் அதைத் திருத்திச் சிறிது சிறிதாகப் பச்சரிசியைப் பழக்கப் படுத்தினேன். காய்ச்சி வடிக்கட்டின பானை ஜலத்தைத்தான்

எனக்குச் சாப்பிட்டுப் பழக்கம். இவர் வெந்நீரைத்தான் அருந்துவார். பகல் உணவுடன் பழங்களைச் சாப்பிடுவது நல்லது என்று பழங்களை விரும்பினேன். அவர் உடலுக்கு பாதாம், பிஸ்தா ஆகியவை நலந்தருமென அவைகளை உபயோகிக்கத் தொடங்கினேன். அப்போது இரவில் சாதம் மட்டும் வடிப்பார்கள். பகலில் செய்த சாதம், காய்கறி, குழம்பு மீதம் இருப்பதை உபயோகிப்பார்கள். அவ்வப் போது சமைப்பதுதான் நன்றாக இருக்கும்; ஆரோக்கியத் திற்கும் நல்லது என்று. இரவில் சமைத்தோம். நானும் என் நாத்தனாரும் சேர்ந்து சமையல் செய்வோம் நான் சமைக்கும் பக்குவம் நன்றாக இருக்கும் என்று அனை வரும் மகிழ்வார்கள். நானும் புதிது புதிதாக ஏதையாவது செய்துகொண்டிருப்பேன். ஒழிந்த நேரங்களில் நிறையப் படிப்பேன்.

## புலால் மறுத்தல்

எனக்கு 10 வயதிருக்கும். ஐந்தாவது வகுப்புப் படித் தேன். சௌக்கார்பேட்டை தபால் நிலையத்திற்கு மூன்றாவது வீடு எங்களுடையது. எதிரில் வசந்த உத்ஸவமண்டபம் உண்டு. அதற்குமுன் ஒரு நாள் நடுப்பகலில் ஒரு கூட்டம் கூடியது. நான் பள்ளியிலிருந்து வந்து கொண்டிருந்தேன். சிறு குழந்தைகள் ஆட்டுத்தலை, மாட்டுத்தலை, கோழித்தலை, முதலியவைகளை தங்கள் கழுத்தில் மாட்டிக் கொண்டு உயர மான இடத்தில் நின்று கொண்டு 'தன்னைக் கொன்று தின்னவேண்டாம்' எனத் தலையை ஆட்டி ஆட்டி ஜாடை காட்டிக்கொண்டிருந்தனர். இதைப்பார்க்க வேடிக்கை யாக மட்டும் இருக்கவில்லை-பரிதாபமான காட்சியாகவும் இருந்தது. பிறகு கூட்டத்தில் என்ன நடக்கிறதென கவ

னித்தேன். 'ஜீவரட்சகப் பிரசார சங்கம்' என்று எழுதப் பட்ட தோரணம் தெரிந்தது. 'உயிர்களைக் கொன்று தின்பது பாவம்' என்பதுபற்றிப் பேசினார், சங்கத்தின் பிரசாரகர் ஸ்ரீ பால் என்பவர்.

பிரசங்கம் ஓய்ந்தபின் வீட்டுக்கு வந்தேன். தட்டை எடுத்து முன்னே வைத்துக் கொண்டேன். அன்னை அன்னம் படைத்துக்கொண்டிருந்தார். அன்று புலால் உணவு என்று தெரிந்தது. உணவுத்தட்டை ஓரமாகத் தள்ளிவிட்டு,

'கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
எல்லா உயிரும் தொழும்'

என்ற வள்ளுவனின் கருத்துப்படி மாமிசம் சாப்பிடுவது மனிதத்தன்மையல்ல; அரக்கர்களே இறைச்சி உண்பார்கள். இம்மனம் செய்வது பாவம். இப்படியாகப் புலால் மறுத்தலைப்பற்றி எனது சிறு மூளைக்கு எட்டியமட்டும் ஒரு குட்டிப்பிரசங்கம் செய்தேன். அண்ணன்மார்களும் அம்மாவும் சிரித்தனர். எனக்கு மிகவும் கோபம் வந்தது. நான் சாப்பிட மறுத்துவிட்டேன். பிறகு பக்கோடா கொண்டுவந்து வைத்தார்கள். ரசம் சாதம், தயிர் சாதம் சாப்பிட்டுவிட்டுப் பள்ளி சென்றேன். இரு ஆண்டுகள் இம்மாதிரி இருந்தேன். 12 வயதில் மூல உபத்திரம் வந்தது. புலாலை மறுத்ததுதான் காரணம் என்றனர். ஆஸ்பத்திரியில் மூலத்தை சிகிச்சை செய்து எடுத்தனர். மேலும் சாப்பிடச் சொன்னார்கள் மறுத்தேன். ஒருநாள் டாக்டர் 'காட்லீவர் ஆயிலை'ச் சாப்பிடும்படி சொன்னார். சாப்பிட்டேன். மறு நாள் அந்த 'பாட்டி'லின் லேபிலைப்படித்தேன். 'காட்' என்ற மீனின் ஈரலில் இருந்து செய்யப்பட்டது என்றிருந்தது.

அப்படியே நிறுத்திவிட்டேன். உடல் பலவீன மடைந்தது. பெற்றோர்கள் வற்புறுத்தி வேண்டினர். பின் பெரிய மீன், முட்டை இவைகளை மட்டும் எப்போதாவது சாப்பிடுவேன்.

நான் கலியாணம் செய்துவந்த இடத்தில் யாரும் புலால் அருந்தவில்லை. நான் ஏற்கனவே புலால் உணவை இளமையிலேயே வெறுத்ததால். இப்போது நல்லதாகப் போய்விட்டது.

## பழைய பஞ்சாங்கம்

என் வீட்டில் மூட நம்பிக்கைகள் முளைவிட்டுக்கிளர்ந்து, முன்னிலும் பன் மடங்காகப் பெருகின. வேண்டாம் என்று வெறுத்தொதுக்கவும் இயலவில்லை.

பிரதி வெள்ளி தோறும் 'பேரண்டம்' என்றபோல் பூஜை போடுவார்கள். அன்று பெண் ஒருத்தியின்மேல் பிரிந்த ஆவி வந்துபேசும்; தனக்குள்ள குறைகளெல்லாம் தீரும் என பயந்து நின்று பணிவோடு அனைவரும் கேட்பார்கள்.

அன்று சாயத்தொழிலாளியின் மகள் மீது மூத்த மனைவியின் ஆவி வந்து பேசிற்று. ஆம்! அந்தப்பெண் பேசினாள், இப்படி.

"குமாரசாமி முன்போல் இல்லை; இளைய மனைவியின் மீது மிகுந்த பாசம் கொண்டு என்னை அடியோடு மறந்துவிட்டார். எனக்கு அது வேதனையாக இருக்கிறது. எனவே எனக்கு பூஜை போடவேண்டும்."

இந்த வார்த்தைகளைக் கேட்டு நான் திடுக்கிட்டேன். ஆகட்டும் அம்மணி; போடுகிறோம் பூஜை என்று அவள் பாதத்தில் பணிந்து விழுந்தனர் அனைவரும். என்னையும் விழுந்து கும்பிடுமாறு வற்புறுத்தினார்கள். எதிர்த்துப் பேச இயலாது நானும் பாதம் பணிந்தேன்.

பொதுவாக குடும்பத்தில் என் கணவரைத் தவிர என்னை யாருக்கும் பிடிக்காது. எனவே 'பேரண்டம்' ஆடுகிற அவளுக்கும் பிடிக்காது.

ஒரு நாள் குழந்தை துளசி (மூத்த தாரத்தின் மகள்) அவளுடன் பேசிக்கொண்டிருந்தாள். குழந்தைக்கு வயது இரண்டுதானிருக்கும்.

"உன் அம்மா இறந்துவிட்டாள்; இவள் உன் அம்மா இல்லை; எனவே இவளை அம்மா என்று அழைக்காதே."

இப்படிச் சொல்லிக் கொண்டிருந்ததை அவளுக்குப் பின்புறமாக நின்று கொண்டிருந்த நான், என் இரு காதார நன்றாகக்கேட்டேன். என்னைப் பார்க்காத அவள் வெகு சுதந்தரமாகச் சொல்லிக் கொண்டிருந்தாள். இதை என் கணவரிடம் சொன்னேன். அவர் அவளைக் கூப்பிட்டுக் கண்டித்தார். மறு வெள்ளிக்கிழமை ஆவி வந்து பேசியதன் அர்த்தம் புரிந்து விட்டது. அவரும் நம்ப மறுத்துவிட்டார். 'என் இரண்டாம் மனைவி மாசு மறுவற்றவள்; அவள் பேரில் வந்து சொல்லட்டும், அந்த ஆவி' என்று கூறிவிட்டார்.

என்னை குளிப்பாட்டி பூஜை அறையில் அமர்த்தினர். எனக்கு கூட, சாம்பிராணி தீப தூபம் காட்டினர். கண்களை மூடிக்கொண்டு உட்கார்ந்தேன். ஆவியும் வரவில்லை.

நான் பேசவும் இல்லை. அன்றுடன் பூஜைபோடும் படலம் முற்றிற்று.

புரட்டாசி மாதம், பிரதி சனியும் திருப்பதியில் பள்ளி கொண்டுள்ள ஏழுமலையானுக்கு பூஜை போடுவர் வீட்டில். அங்கு நம் இனத்தார்ஒருவர் குளையிலிருந்து வாட்ட சாட்ட மாக வருவார். அவர்ஒரு சாமியாடி.

பூஜை போடுமிடத்தில் இவர் அமர்வார்; ஏகமாக அலறுவார்; சூழ்ந்து நின்றவர்களுக்கெல்லாம் ஒரே பீதி உண்டாகும். எனக்கோ சொல்லமுடியாத பயம் வரும். ஏழுமலையான் அவர் மீது வந்து விட்டதற்கு அடையாள மாக ஏதோ புலம்புவார்-குதிப்பார்-துள்ளுவார்-ஏக வச னத்தில் பேசுவார், வாடா! போடா!! என்ற நாலாந்தர வார்த்தைகளை உபயோகித்து. வந்தவர் போனவர்களுக்கு வாயில் வந்ததைக் கூறுவார். ஏழுமலையானே கூறுகின்று ராம், அவர் மூலம். எனவே அவர் கூறியதை வேத வாக்குக ளாகக் கொண்டு உத்திரவு வாங்கிச் செல்லுவார்கள். பக்தர்களை திருப்பதிக்கு வரச்சொல்லவும் போகச் சொல்ல வும் ஆணையளிப்பவர் அவராகவே இருப்பார். எனவே எங்களையும் திருப்பதிக்கு வர உத்திர விட்டார்.

இந்த நிகழ்ச்சிகளைக் கண்டு ஒருபுறம் சிரிப்பும், மறுபுறம் துக்கமும் எனக்கு மாறி, மாறி வரும்.

இதைக் கண்டிக்கும் அளவுக்கு எனக்கு தைரியம் இல்லை. என்னையும் மொட்டையிட்டுக் கொள்ளவேண்டும் என்று சொன்னார்கள். எனக்கு மிகுந்த வருத்தம் ஏற்படுவது இயற்கைதானே. அதற்கு என் தலைவர் சொன்னார்:

"கடவுளுக்கு என் மனைவியின் முடிவேண்டாம்; வேண்டுமானால் ஒருவாரம் தலைசீவாமல் இருக்கச் சொல்கிறேன்; பிறகு முடிச்சுவிழுந்தால் எடுப்போம்" என்று. முடிச்சும் விழவில்லை; முடியையும் எடுக்கவில்லை; முனை மயிர் மட்டும் எடுக்கவேண்டியாயிற்று. இதை யாரும் ஆட்சேபிக்கவில்லை.

திருப்பதி யாத்திரைக்கு 21 'டிக்கட்டுகள்' கிளம்பினோம். போகும் போது ஆண்டவன் பேரால் புரோகிதர்கள் செய்யும் அக்கிரமங்களையும், பித்தலாட்டங்களையும் சிறுகச் சிறுகக்கூறிக்கொண்டே வந்தார். உண்ணும்போதும், உறங்கும்போதும், நடக்கும்போது குளிக்கும்போதும், வேறு எதையாவது பேசும் போதும், சீர் திருத்தங்களைப் பற்றி கொஞ்சம் கொஞ்சமாகச் சொல்லிவருவார்.

எனது கணவர் சாயத்தொழிலையும் கற்றுக் கொள்ள வேண்டும் என்று எனக்குச் சொன்னார். ஏற்றுக்கொண்டேன். சாயப்பொடிகளை எடை போட்டுக் கலக்குவது மணி சொல்லி சாயம்போட்ட நூல்களைத் திருப்புவது இவைகளைச் செய்தேன். அப்போது நிறைய ஆர்டர்கள் இருந்தன. ஆனால் அத்தனையும் சாயம் போட முடியாது திணறினார். நானும் என்னாலான உதவியைச் செய்வேன்.

தன் ஆர்டரைத் தான் முதலில் நிறைவேற்ற வேண்டும் என்று ஒவ்வொரு ஆசாமியும் அவசரப்படுத்துவார்கள். வி. என். கே. சாயத் நூல் என்றால் மார்க்கட்டில் நல்ல கிராக்கி. என்ன விலையானாலும் நம்பிக்கையோடு வாங்குவார்கள். சாயம் போடும் ஆசாமிகளில் மிகப் பிரபலமானவர் மௌலானா S.H. பாஷா கம்பெனியாரும், மதராஸ்

பனையகாட் கம்பெனியாருமே யாவர். கொழும்பில் இருவருக்கும் கடை உண்டு. போட்டியும் பலமாக இருந்தது. இருவருமே வீட்டுக்கு வந்து தங்களுக்கு மட்டுமே சாயம்போட்டுத்தரவேண்டும் என்றனர். பனைய காட் கம்பெனியார் தங்களுக்குமட்டும் போட்டுத்தரவேண் டும் என்றனர். இருவரின்போட்டி நாளுக்குநாள்வலுத்தது.

"எங்களுக்கே சாயம் போடுவதானால் உங்களைத் தவிர நாங்கள் யாரிடமும் சாயம் போடமாட்டோம்; சொன்ன சொல்லை மாறமாட்டோம்" என்று பெரிய மௌலானா அவர்கள் கூறினார்கள். அவர்களின் வார்த்தையில் முழு நம்பிக்கை வைத்து, மதராஸ் பனையகாட் கம்பெனியாருக் குச் சாயம் போடுவதை நிறுத்திக்கொண்டு விட்டோம். பின்னர் வேறு கம்பெனிகளில் சாயம் போட்டும் திருப்தி அடைந்தார்களில்லை. ஸ்ரீ வி. என். கே. மைத்துனர் இங்கு வேலை செய்தாரல்லவா? அவர் தம் மாமனார் சொற்படி ஒரு சாயக் கம்பெனி வைத்து, மதராஸ் பனையகாட் கம் பெனிக்குச் சாயம்போட்டுக் கொடுத்தார். முக்கியமாக சென்னையில் யார் யார் லுங்கி வியாபாரத்தைத் துவங்கின லும் அவர்களுக்கு நல்ல மார்க்கெட் கிடைக்கும்வரையா வது ஸ்ரீ வி. என். கே. யிடந்தான் சாயம் போடுவார்கள். இன்று சென்னையில் பிரபல லுங்கி வியாபாரிகளான 'சங்கு மார்க்' அபூபக்கர் கம்பெனியார்கள் ஸ்ரீ வி. என். கே. கம்பெனியின் பழைய வாடிக்கைக்காரர்களே ஆவர். எங்களால் சாயம்போட முடியாமல் இருந்தபோது தனியாக சாயப்பட்டறை வைத்துக்கொண்டனர்.

சாய வேலையில் அவர் பெயர் வாங்கினார் எனினும் விரிவான அளவிற்கு விருத்தி செய்யவில்லை. அதனால்

கிராக்கிகள் பல கைவிட்டுப் போயின. பழைய இடத்தில் இட நெருக்கடி. எனவே பெரிய இடம் ஒன்று வாங்கி போதிய வசதிகளுடன் விரிவாகவே கட்டவேண்டும் என்று 6 மனைகள் கொண்ட இடம் திருவொற்றியூர் ஹை ரோட்டில் வாங்கப்பட்டது. நான் பல பிளான்களைப் போட்டு காட்டுவேன். அதன்படி கட்டவேண்டுமானால் ரூ. 20000 தேவைப்பட்டது. அதே சமயத்தில் 216, தி. ஹை ரோடு பங்களா விலைக்கு வருகிறதென்று திரு. T. வரமூர்த்தி செட்டியார் சொன்னார். நேரில் பார்த்தோம்; மிகவும் பிடித்துவிட்டது. ரூ. 15,000-ம் தான். 20 மனைகள் உள்ள மிகப் பெரிய கட்டிடம். அவருடைய முயற்சி இல்லையானால் நான் இந்த நயமான விலைக்கு இதை வாங்கவே முடியாது. இதை வாங்கிய பின் நல்ல நாளாய் பார்த்து, அதில் குடி உள்ளவர்கள் போனபின் 6 மாதங் கழித்து கிரஹப்பிரவேசம் செய்வதென முடிவு செய்யப்பட்டது.

இந்த வீட்டை வாங்கப் பிரயத்தனப்படும்போது ஸ்ரீ T. வரமூர்த்தி செட்டிக்கு என்ன தோன்றியதோ என்னவோ ஒரு நாள் அவர் திரு. குமாரசாமியை அழைத்து "உன்னிடம் நான் இம்மாதிரி கமிஷன் எத்தனை நாள் வாங்குவது? அதற்கு பதில் மொத்தமாகவே ஒரு வீடு வாங்கி கொடுத்துவிடு" என்றார். திரு. குமாரசாமியும், சரி என்று ஒப்புக்கொண்டு வண்ணாரப்பேட்டையில் ரூ. 5000 க்கு ஒரு வீட்டை வாங்கிக்கொடுத்துவிட்டார்.

## முதல் குழந்தை

1934 ஆண்டு. இந்த ஆண்டிலே எனக்கொரு ஆண் குழந்தை பிறந்தது. பிரசவ வேதனையின் காரணமாக முதல் மனைவி இறந்த பீதியால், என்னையும் ரெயினி ஆஸ்பத்திரியில் சேர்த்தார். குழந்தைக்கு ஈஸ்வரன் என்று பெயர் வைத்தார். பின்னர் குழந்தை பிறந்ததை என் பெற்றோர்கள் வந்து பார்க்க அனுமதிக்கப்பட்டது. குழந்தையும் நல்ல ஆரோக்கியமாகவும் அழகாகவும் இருந்தது. என் கணவரைத் தவிர குழந்தை பிறந்ததைப் பற்றி யாருமே மகிழ்ச்சி கொள்ளவில்லை, என் குடும்பத்தை பொறுத்தவரை. என் பெற்றோர்கள் வந்து அடிக்கடி பார்த்து உதவி செய்தனர்.

இச்சமயத்தில் ராம்மோஹன் யாத்திரைக் கம்பெனியார் வட இந்திய யாத்திரை விளம்பரம் செய்தனர். வெகு நாட்களாக வட இந்திய யாத்திரை செய்ய விரும்பிய என் கணவருடன் குடும்ப சமேதராகப் புறப்பட்டோம். யாத்திரை செய்ய எனக்கு ரொம்ப ஆசை. எந்த ஊருக்கும் நான் போனதில்லை. என் பெற்றோர்கள், அண்ணு, அவரின் வளர்ப்புத் தந்தை, தாய், குழந்தை துளசி இவர்களுடன் புறப்பட்டோம், யாத்திரைக்கு.

ஒவ்வொரு ஊராக இறங்கி நானும் என் தாயாரும் சமைப்போம். உணவுக்குப் பிறகு ஊர் சுற்றிப் பார்ப்போம். விடிவதற்குள் வேறு ஊர் செல்வோம். ஹரித்துவாரம் சென்றோம். ரிஷிகேஷத்திற்கு டாக்ஸியில் போனோம். லக்ஷ்மண் ஜுலா, ரிஷிகுண்ட் ஆகிய இடங்களுக்கு அனைவரும் சென்றோம். பவித்திர கங்கையில்

ஸ்நானம் செய்தோம். குழந்தை ஈஸ்வரனையும் கங்கை ஸ்நானம் செய்வித்தார், அவர்.

பனி நீர்தான் கங்கை. வெகு குளிர்ச்சி. உடன் வந்திருந்த யாத்திரை நண்பர்கள் இதில் குளிப்பதால் உடம்பிற்கு தோஷமில்லை என்றனர்.

ஆனால் குளிர் தாங்க முடியாமல் குழந்தை வீர் வீர் என்று அழுதது. அவசர அவசரமாகத் துடைத்து உடுப்பு மாட்டினோம். இருப்பினும் நடுக்கம் குறைய வெகு நேரமாயிற்று. தொடர்ந்து காய்ச்சலும் வந்துவிட்டது. அன்று இரவே குழந்தைக்கு பேதியாயிற்று. மறுநாள் ஜுரமும் பேதியும். யாத்திரா ஸ்பெஷலில் உள்ள டாக்டரை அழைத்துக் காட்டினோம். ஏதோ மருந்து கொடுத்தார்; குணமில்லை. குழந்தை என் பக்கத்தில் படுத்திருந்தது. எனக்கு தூக்கம் வந்தது. என் தந்தை படுத்தபடியே குழந்தைக்கு எப்படி இருக்கிறது என்றார். எழுந்து பார்த்தேன்.

உடம்பு சில்லிட்டிருந்தது. மூச்சில்லை; ஐயோ அப்பா என்று அலறிவிட்டேன். அருகில் தூங்கிய அனைவரும் விழித்துக்கொண்டனர். உடனே சங்கிலியைப் பிடித்திழுத்து வண்டியை நிறுத்தினார்கள். டாக்டர் வந்து பார்த்தார். அவ்வளவுதான்' என்று சொல்லிவிட்டுப் போய்விட்டார்.

தயவு செய்து அழவேண்டாம்; வண்டி நிற்கும் ஜன நெருக்கம் உள்ள ஸ்டேஷன்களில், கூட்டம் அதிகமாகிவிடும் என்று பிரயாண ஸ்பெஷல் முதலாளி சொன்னார். விடிந்தது ; ஆம்; அலகாபாத் ஸ்டேஷன் வந்தது.

ஸ்ரீ குருராவ். அவர்தான் யாத்திரா ஸ்பெஷலின் முதலாளி. எங்களிடம் வந்தார். குழந்தை இறந்ததாகக் காட்டிக்

கொள்ளக் கூடாது. சாதாரணமாகக் குழந்தையைத் தூக்கிக்கொண்டு வெளியே வந்துவிடவேண்டியது என்றார். அதுபோலவே ஸ்டேஷனிலிருந்து வெளிப்பட்டு, லக்ஷ்மண புரி திரிவேணி சங்கத்தின் கரைக்கு நேராய் குழந்தையை எடுத்துக்கொண்டு போனோம். யாத்திரை நண்பர்கள் பலர் வந்திருந்தனர். சர்வ சடங்குகளும் செவ்வனே நடை பெற்றது. எனக்கு ஒன்றுமே புரியவில்லை.

மனித உயிர் இவ்வளவு அற்பமானதா? குழந்தை பிறப்பானேன்? இத்தனை சீக்கிரம் இறப்பானேன்? ஒன்றுமே புரியவில்லை, வந்திருந்த தாய்மார்கள் வெகு ஆறுதல் கூறினார்கள். யாத்திரை நேரத்தில் நான் பால் கொடுக்கும் நேரம் தவிர குழந்தை என்னிடம் இருந்ததில்லை. உடன் வந்திருந்த பல யாத்திரை நண்பர்களிடையே, கிருஷ்ண விக்கிரஹம் போன்ற எனது குழந்தை இருந்து வந்தது.

யார் அழைத்தாலும் புன்சிரிப்புடன் புன்னகை தவழ தாவிக் குதித்தோடுவான். வட நாட்டு நண்பர்கள் குழந் தையைப் பார்த்தால் சற்றுநேரம் நின்று பார்த்துவிட்டு யார் குழந்தை என்று கேட்காமல் செல்லமாட்டார்கள்.

அழகு, ஆரோக்கியம், வசீகரம் நிறைந்த அந்த 6 மாத குழந்தையின் உயிர் மூச்சு நின்றதைப் பற்றி வருந்தாதார் இல்லை, எங்களுடன் பிரயாணம் செய்தவர்களில்.

"எத்தனை புண்ணியம் செய்தவர்களுக்கும் கிடைக்காத இந்தத் திருவேணிக்கரை இக் குழந்தைக்குக் கொடுத்து வைத்திருப்பது பாக்கியம். வயோதிக காலத்தில் இங்கு வந்து ஆத்மா சாந்தியடைய வேண்டும் எனப் பலர் நினைப்ப

துண்டு; நிகழ்வதில்லை. எனவே உங்கள் குழந்தை புண்ணியாத்மா.''

## பண்டாக்களும் ஆரியசமாஜமும்

இங்ஙனம் பலர் சமாதானம் கூறி ஆற்றித் தேற்றினர்!

எனது வேதனையை மறக்கடிக்க என் கணவரிடம், உங்கள் மனைவிக்கு ஊர்களை நன்றாகச் சுற்றிக் காண்பியுங்கள்; சிறு பெண்; நீங்கள் ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ளவேண்டும் என்றனர். நான் 'இனி எதையும் பார்க்கவேண்டாம்; ஒழுங்காக ஊர்போய்ச் சேரவேண்டும்' என்றேன். அவர் 'ஊருக்குப் போனால்தான் என்ன? குழந்தை வரப்போகிறதா என்ன? வெளியூர் சுற்றினாலாவது சற்று ஆறுதல் இருக்கும்.' என்றார். ஏதோ நடைப்பிணமாகப் பலஊர் சென்று பார்த்தேனே அன்றி, பார்த்தது எதுவும் என் நினைவில் இல்லை. சதா குழந்தையின் மீதே நினைவு. நினைத்து நினைத்து அழுவேன்.

காசிக்கு சென்றோம் பண்டாக்களின் வேட்டை கிளம்பிற்று. குழந்தை இறந்து ஐந்தாவது நாள். காரியம் செய்ய பண்டாக்கள் திட்டமிட்டனர். ஆயிரம் ரூபாய் வரை பிடுங்க ஏற்பாடு செய்தனர். இவர் மறுத்துவிட்டார். எனக்கு ஏற்கனவே இதிலெல்லாம் நம்பிக்கையும் இல்லை. பண்டாவுக்கும் இவருக்கும் பலத்த விவாதம் ஏற்பட்டது. 'நீங்கள் நாஸ்திகர்கள்' என்றார் பண்டா. 'நீங்கள் பகல் கொள்ளைக்காரர்கள்' என்றார், இவர். பண்டா 'நீ ஆரிய சமாஜி போல் இருக்கிறது; அதனால்தான் இத்தனை துணிவு உங்களுக்கு' என்றார். 'ஆம் உங்களின் அக்கிரமங்களுக்கு

உடன்படமாட்டோம்' என்றார் கங்கையில் குளிப்பதை பார்ப்போம் என்றார், பண்டா. கங்கைப் பொதுச் சொத்து; உங்கள் உத்திரவு தேவை இல்லை என்றார் இவர்.

ஆரிய சமாஜ கூட்டங்களுக்குச் சென்று பல நூல்களைப் படித்து சமாஜத்தின் கொள்கை விளக்கம் பெற்றிருந்தார், திரு. குமாரசாமி அவர்கள்.

உள்ளூர் வாசிகளுக்கு இந்த நிபந்தனை இல்லை; வெளி யூரிலிருந்து வரும் அப்பாவிகளை இப்படி வரி போட்டு கொல்லுகிறது, ஸ்டேஷனிலிருந்து பின் தொடர்ந்துவரும் பண்டாக்களின் கூட்டம். காசியில் உள்ள எல்லாச் சத்திரங்களும் இந்த பண்டாக்களின் கையில்தான் இருக்கிறது. இவர்கள் இட்டது சட்டம். கொள்ளை, கொலை இவைகளுக்கு அஞ்சாத நெஞ்சர்கள் என்றுகூட கேள்வியுற்றோம். அவர்களின் முகத் தோற்றமும் அப்படித் தான் இருந்தது. நன்றாகக் கொழுத்த தடியர்கள்; வேத மந்திரங்கள் திரு. குமாரசாமி அவர்களுக்கும் தெரியும். புரோஹிதர் கூட இவரும் சொன்னார். பின்னர்தான் மரி யாதையுடன் நடந்து கொண்டனர், பண்டாக்கள்.

ஆஜ்மீர், ஒரு புராதன ஸ்தலம்! மகாமகம்போல் 12 ஆண்டுகளுக்கு ஒரு முறை மிக விசேஷமாகக் கூடுவார்கள். கும்பகோண மகாமகக் குளம் போலவே புஷ்கரணி என்ற குளம் அங்கு உண்டு. அங்கு குளிப்பவர்கள் தேங்காய் புஷ்பம் வாங்கி பிராமணர்களுக்குத் தானம் கொடுத்து விட்டுப் பின்புதான் குளிக்கவேண்டும். பின்பு புரோகிதர் கள் தட்சணையாகக் கொடுத்த தேங்காய்களை மற்றவர் களுக்கு விற்றுவிடுவார்கள். இந்தப் பித்தலாட்டங்கள் நம் கண் முன்னே நடைபெற்றன.

இந்தக் கிரியைகள் இல்லாமல் நாங்கள் குளிக்கச் சென்றோம். தேங்காய், பழம் இன்றி குளிக்க விடமாட்டோம் என்றனர். "தரும் பழக்கமில்லை" என்றார். "ஓ! நீங்கள் ஆரிய சமாஜிகள்" என்றனர், எங்களை. அங்கே ஆரிய சமாஜம் என்றால் சாதாரண மக்களும் புரிந்து கொள்ளும் அளவுக்குப் பிரபலமடைந்திருக்கிறது. மூடப்பழக்க வழக்கங்களை ஒத்துக்கொள்ளாவிட்டால், உடனே ஆரிய சமாஜிகள் என்று சொல்லி விடுகின்றனர்.

இந்த நிலை தமிழ் நாட்டில் இன்னும் வளரவில்லை; எனினும், இங்கு சில கழகங்கள் தோன்றி அழகான அடுக்குச் சொற்களை வைத்து, பகுத்தறிவை வளர்ப்பதாக நடித்துப் பணம் திரட்டி வருகின்றன. எதுகை மோனை வசனங்களை வைத்து அப்பாவி மக்களை ஏமாற்றித் தமிழினத்தை ஆட்டு மந்தைகளாக்கி வருகின்றனர். கழகங்களின் வேலை, மடமையை ஒழிப்பதல்ல; புகழும், பொருளும் பெற்று பெருந் தலைவர்கள் ஆகிவிடவேண்டும் என்பதுதான் அவர்களின் அடிப்படை.

மேடை ஏறுபவர்களெல்லாம் எதுகை மோனையுடன் சீர்திருத்தம் பேசுகின்றனர்; நடைமுறையிலோ பழுத்த வைதீகர்களாக இருக்கின்றனர். சொன்னதைச் சொல்லும் கிளிப்பிள்ளைகளாக சொற்பெருக்கும் சொற்போர் மன்னர்களிடம் விளக்கம் கேட்டால் திண்டாடித் திணறி விடுவர்.

ஆனால் ஸ்ரீ தயானந்த சரஸ்வதியின் ஆரிய சமாஜமானது, அவ்வாறில்லை. ஆதி வேதம் ஒன்றையே அடிப்படையாகக் கொண்டது. பின்னால் வந்த பாஷ்ய கர்த்தாக்

கள், அவரவர்களுக்கு தோன்றியவகையில் பொருள்செய்து போந்தனர். இதன் உண்மையை அறிய வேண்டி, மாக்ஸ் முல்லர் என்ற மேல்நாட்டறிஞர் எழுதிய வேதங்களைப் படிக்கவேண்டிய தாயிற்று. ஸ்ரீ விரஜானந்தர் என்னும் அந்தக யோகியிடம் முறைப்படி ஸ்ரீ தயானந்த சரஸ்வதி வேதம் கற்றார். உலகத்தில் கடவுளின் பேராலும், மதத்தின் பேராலும் நடைபெறும் அக்கிரமங்களையும் அநீதிகளையும் அகற்ற வேண்டி தன் வாழ்நாளை அர்ப்பணித்தார். ராஜா ராம் மோகன்ராய், விபின்சந்திரபால், திலகர், சிரத்தானந்தர் மற்றும் பல உத்தமர்களை வளர்த்துத் தந்தது ஆரிய சமாஜ மாகும்.

தேசிய இயக்கத்திற்கு அரணாய் அமைந்து சுதந்திரப் போராட்டங்களுக்கும் ஆரிய சமாஜம் பலமளித்தது. மகாத்மா காந்தியடிகளும், சுவாமி தயானந்த சரஸ்வதி எழுதிய 'சத்தியார்த்தப் பிரகாசம்' என்ற நூலைப் பாராட்டியதோடன்றியில் 'அதைப் படித்தபின்தான் நான் உண்மையான ஹிந்துவானேன்' என்று சொல்லுகிறார். சமுதாயத்தில் உள்ள அக்கிரமங்களை வன்மையாகக் கண்டிப்பது ஆரியசமாஜமே. தீண்டாமை ஒழிப்பு, மதுவிலக்கு, ஜீவகாருண்யம் இவைகளை, காங்கிரஸிற்கு போதித்ததும் அதுவே. இந்துமதத்தில் உள்ளதைப்போன்றபொய், புரட்டு கள், புனைகதைகள் இதர மதங்களிலும் இருக்கின்றன என் பதை அம்பலப் படுத்துகின்றது. எனவே நம்மவர்கள் இதர மதங்களுக்கு போய்விடாமலிருக்கப் புனிதமான பாதையை வகுத்துத்தந்தது, சமாஜமாகும். கடவுளை ஒப்புக்கொண்டு வேதசாஸ்திர விதிப்படி வாழவேண்டுமென்கிற சமாஜம் சீர்திருத்த சேவைகளையும் செய்கிறது. வட இந்தியாவில்

ஆரிய சமாஜம் இல்லையானால் ஆங்குள்ள மக்கள், மகமதியர்களாகி இருப்பார்கள். அங்கு நடந்த அக்கிரமங்கள் அனந்தம். அதிர்ஷ்டவசமாக தென்னாட்டிற்கு எட்டவில்லை. முகம்மதியர் ஆதிக்கம் வடநாட்டில் வேர்விடத் துவங்கியது என்றால், தென்னாட்டில் கல்வியின் பெயரால் கிருஸ்தவர்களின் தொகை அதிகமாகின. இதனைக் கடுமையாக எதிர்த்தது ஆரியசமாஜம்.

மாவீரத் தியாகி ஸ்ரீ சிரத்தானந்தரும் முஸ்லீம்களை மதம் மாற்றியதற்காக ஒரு முரடனால் சுட்டுக் கொல்லப்பட்டார். இந்த ஆபத்தான நிலையில் மதமாற்றம் என்ற துணிகரமான செயலை செய்துவந்தது சமாஜமே. டெல்லி ஜும்மா மசூதி என்பது முகமதியர்களின் புண்ணியஸ்தலமாகும். அதில் எம்மதத்தலைவரும், ஸ்தாபனதலைவரும்செய்ய முடியாத அளவிற்கு இஸ்லாமியர்களிடையே நீண்ட பிரசங்கம் நிகழ்த்தினார். அவரின் நியாயமான வாதத்தை மனசாட்சியுள்ள எவரும் மறுக்க முடியாது? நியாயத்தை விளம்ப எந்த இடமும் உரிமையானதன்றோ?

ஆரியம் என்னும் சொல்லுக்கு பார்ப்பனர் என்று உரை கொள்வது தவறு. சீரியர், அறிவாளிகள், உயர்ந்தவர்கள் என்று விளக்கம் தருகின்றன, நமது வேத தர்மங்கள். உலகில் பரவிய பல்வேறு மக்கள் பலவிதங்களாக மதங்களை பரப்பித்துக் கொண்டனர். எல்லாவற்றிற்கும் தாயகமானது வேதமேயாகும்.

தென்னாட்டில் திருவனந்தபுரம் ஜில்லாக்களில் இந்து மதத்திலிருந்து பலரை மாற்றிக்கொண்டுவந்த பெருமையும், இந்து மதத்தைக் காப்பாற்றிய பெருமையும் ஆரிய சாம

ஜத்தையேசேரும். ஸ்ரீ தயானந்த சரஸ்வதி அவர்கள் ஒரு அரசனின் நடத்தையைக் கண்டிக்கப்போய், அந்த அரசனின் தாசியால் விஷம் தரப்பட்டு மாண்டார். காந்தி அடிகளும் இந்த மத வெறிக்கே பலியானுர். பொதுவாக உலகில் இது வரை தோன்றிய எல்லா சீர்திருத்த வாதிகளுக்கு ஏற்பட்ட நிலையும் இதுவே. வாய்ப்பறை அடிக்கும் பகுத்தறிவுப் பாசறை அல்ல ; உண்மையாகவே ஒழுக்கத்தையும், விவேகத்தையும், சத்தியம், ஆன்மீகம் ஆகியவைகளின் பலத்தையும் உலகுக்கு போதிக்கும் ஒப்பற்ற ஸ்தாபனம் ஆரிய சமாஜமே.

ஜகந்நாதத்திற்குப் போனேம். அங்கு பகல் உணவு சமைக்கவில்லை ; குளித்துவிட்டுக் கோவிலுக்குச் சென்று பிரசாதம் வாங்கினேம். உட்கார்ந்து உண்ண இடந்தேடிக் கொண்டே பிரசாதத்தை கையில் ஏந்திக்கொண்டே என் கணவர் வந்துகொண்டிருந்தார். ஒரு பிச்சைக்கார பண்டார வந்தான். எங்கள் அனுமதியின்றி அந்தப் பிரசாதத்தை கையாலும் தொடாமல் வாய்வைத்துக் கவ்விச் சாப்பிட்டான். எங்களுக்கு ஒரே ஆச்சரியம்—அருவருப்பு ஏற்பட்டது. "என்னப்பா நாய்போல எங்கள் சாதத்தை எச்சில் படுத்தித் தின்று விட்டாயே" என்றுர்.

"பாபம் ! பாபம் !! ஜகந்நாதத்தில் எச்சல் என்று சொல்லக்கூடாதே" என்று சொல்லிக்கொண்டே போய் விட்டான். பின் அந்த சாதத்தை (உண்மையான) நாய்களுக்கே போட்டு விட்டுக் கடைத்தெருவிற்குப்போனேம். அங்கு ரொட்டிகளை வாங்கினேம். கடையைவிட்டு சிறிது தூரம் வந்திருப்போம் ; ஒருவன் வந்தான். கையில் உள்ள

ரொட்டிகளைப்பிடுங்கி எறிந்தான். எங்களுக்கு இவன் என்ன பைத்தியமா? என்று தோன்றிற்று. அவன் கோபமாக "நீங்கள் ஹிந்துவல்ல? முஸ்லீம் கடையில் ரொட்டி வாங்கினீர்களே" என்றான். நாங்கள் புரிந்து கொண்டோம், அங்கு இந்து—முஸ்லீம் கலகம் அடிக்கடி வருவதுண்டு என்று. அன்றுகூட ஏதோ நேரலாம் என்று ஸ்பெஷல் ரயில் அதிகாரிகள் எங்களை எச்சரித்திருந்தனர். அங்கு ஹிந்துக்கள் ஹிந்து கடையிலும், முஸ்லீம்கள் முஸ்லீம் கடையிலும் தான் சமான்கள் வாங்குவார்களாம். புதிதாக அங்கு சென்ற நமது கண்களுக்கு எல்லாம் ஒன்றாகவே தெரிந்தது.

## கிரஹப்பிரவேசமும் திருமணங்களும்

ஒருவாறாக யாத்திரையை முடித்துக்கொண்டு சென்னை வந்து சேர்ந்தோம். 1935-ஆம் ஆண்டு புதிதாக வாங்கிய இல்லமான திருவொற்றியூர் ஹைரோடு 216-ஆம் எண் இலக்கமிட்ட கட்டிடத்தில் கிரஹப்பிரவேசம் செய்தோம். சாயத்தொழிற்சாலையும் பின்புறம் நிறுவப்பட்டது. திரு. K. R. வெங்கடாசலபதிக்கு திருமணப் பேச்சு நடந்தது. பாபு என்று அவரை அன்பாய் அனைவரும் அழைப்போம். அவர் "எனக்கு மாமியைப்போல் படிப்பு, சித்திரம், சங்கீதம், தையல், நீண்ட கூந்தல் உள்ள பெண் வேண்டும்" என்று தன் தாயாரிடம் கூறுவார். அம்மாஜி விரும்புவது இயற்கைதானே என்று பெண் பார்க்க நாங்கள் இருவரும் கிளம்பினோம். கும்பகோணம், சேலம், பரமக்குடி, தஞ்சை திருச்சி, காஞ்சி ஆகிய பல இடங்களில் பெண் வேட்டையாடினோம். குறைந்தபடிப்பிருந்தாலும் பெண்கள் தோற்றமில்லை; தோற்றமுள்ள பெண்கள் படிப்பு "பக்கா என்ன

வில்லை ?" என்று கேட்பவர்களாக இருந்தனர். எப்படி இருந்தாலும் சரி இருப்பதற்குள் எதையாவது கேட்டு முடிக்கலாம் என்றால், ஆயிரக்கணக்கில் பரியம் கேட்டனர். நாங்கள் ஊர் சுற்றியபின், தன் அக்காளையும் அக்காள் பிள்ளையையும் மறு சுற்றுக்கு அனுப்பினர், என் கணவர். அதுவும் பயனில்லாது போயிற்று. பின் வண்ணாரப் பேட்டையிலேயே பெண் பார்த்து முடிக்கவேண்டியதாயிற்று. எதிர்பார்த்த குணவிசேஷங்கள் இல்லாது போனது ஒருபுறம் வருத்தந்தான், இவருக்கு. இந்த பங்களாவிற்கு வந்தபின் தன் தமக்கை பிள்ளைக்கு மிகச் சிறப்பாய் திருமணம் முடித்து வைத்தார். 2, 3 மாதங்களுக்குப் பின்னர் அவர்களுக்குச் சம்பள நிர்ணயம் செய்து தனிக்குடித்தனத்தைத் துவக்கிவைத்தார். அதற்குரிய காரணத்தையும் விளக்கினர் ; எனக்குக்கூட திகைப்பு. அவரின் தமக்கை யார்கூட இக்பிரமை கொண்டிருக்க வேண்டும் என்றே நினைத்தேன்.

" உங்களுக்குப் பிடிக்காத பெண்ணை நான் கட்டிக்கொண்ட காரணத்தால் என் மனைவியை நீங்கள் நேசிப்பதில்லை ; ஒரு பொருட்டாக மதிப்பதில்லை. அவளுக்கு என்ன வந்தாலும் உங்களுக்கு அக்கரையில்லை. இப்மாதிரி எத்தனை நாள் இருக்கமுடியும் ? இப்பொழுது கலியாணமாகிவிட்டது. நீங்கள் தனிக்குடித்தனம் போவது நல்லது."

இந்தக் காரணங்களை அவர்களுக்கு முன்னிலையில் கூறியது, எனக்கு பயமாக இருந்தது. எங்கே நான் சொல்லித் தந்துதான் இவைகளை என் கணவர் இப்படிக் கூறுவதாக பழி வருமோ என்று நான் திகிலடைந்தேன். உண்மை

யில் இந்த விஷயங்களை அவர் எப்படி தெரிந்திருப்பார் என்பதை நானே புரிந்து கொள்ள முடியவில்லை.

"இவைகளை நான் ஏன் கூறுகிறேன் என்றால் இனி யாவது நீங்கள் திருந்துவீர்கள் என்ற ஆசை நிறைந்த எண்ணத்தோடுதான்."

என்றும் இறுதியாகச் சொன்னார். அதன் பின்தான் அவரின் அக்காளுக்குக் கண்திறந்து சுய சிந்தனையோடு என்னை நேசித்தார். அதற்கு முன் நானும் அவரும் திறந்த உள்ளத்தோடு தெளிவாகப் பேசியதில்லை. பட்டும் படாம லும் இருப்போம். அந்த அம்மையார் தன்னைத் திருத்திக் கொண்ட பின்னர் தான் நன்றாகப் பேசினோம், பழகினோம். பிறகு தனக்கு மருமகள் வந்தபின் என்னை உணரத் தலைப்பட்டார். குடும்ப விஷயங்களைப் பற்றி ஒரு போதும் வெளியில் கூறமாட்டார். அனைத்தையும் அனுசரித்துப் போகும் அருங்குணம் அவருக்குண்டு.

## போராட்டமும் பொதுப்பணிகளும்

சாயவேலை சில மாதங்களில் குறைவாக இருக்கும். அப்போது பஞ்சு, தக்ளி வாங்கிக்கொடுத்து தொழிலாளி கள் அனைவரையும் நூற்கச்சொல்லி ஊர்வலமாக போகச் சொல்வார். இங்ஙனம் தேசிய இயக்கங்களுக்கு அவர் தந்த ஒத்துழைப்புகள் பலப்பல.

தான் மட்டுமல்ல, தனது வேலைக்காரர்கள் அனைவருக் கும் கதர்வாங்கித்தருவார். நான்கூடக் கதர்தான் உடுத்து வேன். விசேஷ தேசிய நாட்களில் கதரை தோளிலும் வண்டியிலும் போட்டு விற்போம். வேண்டியவர்கள், வீட்டி

லும் வந்துவாங்கிக்கொள்வர். மொத்தத்தில் எங்கள் வீடு ஒரு கதர் வஸ்திராலயமாகவே இருந்தது. வீட்டிற்குக் காங்கிரஸ் தொண்டர்கள் வருவார்கள், போவார்கள். உணவும் உத வித்தொகையும் தருவார். தொண்டர்களின் தொகை பெரு கிற்று. அனைவருக்கும் ஓட்டல் டிக்கட் வாங்கித்தருவார்.

வசதியடைந்து வளமாக வாழ்ந்த பிறகும் தனது சென்ற காலத்தை மறந்து விடவில்லை. ஏழ்மையான காலத்தில் தான் தருமக்கட்டளை வாங்கி உண்டதுபோலவே அவர் இருக்கும்வரை தேசாந்திரியாக வருபவர்களுக்கு அரிசி, பருப்பு, உப்பு, புளி, மிளகாய் மேல் செலவிற்கு 0-2-0 ஆகியவைகள் மாமூலாகக் கொடுத்துதவுவார்.

" துறந்தார்க்கும் துவ்வாதார்க்கும்
இறந்தார்க்கும் இல்வாழ்வான் என்பான்துணை "

என்று மணி மொழியின் மாபிலேயே வாழ்ந்தார்.

திருவொற்றியூர் சாலை மிகப் பெருமைகொண்டது. யாத்திரீகர்கள், சந்நியாசிகள், ஏழைகள், அனாதைகள், பிச் சைக்காரர்கள் தினம் தினம் ஏராளமாக வந்து போய்க் கொண்டிருக்கும் முக்கியத்வம் வாய்ந்த இடம் அல்லவா? அத்தனை பேரையும் ஓரளவு திருப்திப்படுத்தவேண்டும் என்ற பெருந்தன்மை கொண்ட திரு. குமாரசாமியவர்கள்

" இல்வாழ்வான் என்பான்
இயல்புடைய மூவருக்கும்
நல்லாற்றி நின்ற துணை "

என்ற வள்ளுவன் வாக்கினை வழிமொழிபவர். யுத்தகாலத் தில் ரேஷன் ஏற்பட்டபோதும், பெரியவர்களுக்கு 0-6-0

வீதமும் சிறியவர்களுக்கு 0-3-0 வீதமும் கொடுத்து வந்தார்.

இப்படிச் செய்வதைப் பார்த்து-ஏராளமான-பல லட்சக்கணக்கான ரூபாய்களைச் சேர்த்து வைத்திருப்பார் போலும் என்று பலர் கருதினர். ஆனால் உண்மை அதுவல்ல; அன்றாட வருமானத்திற்கும் செலவிற்கும் சரியாக இருக்குமே அன்றி மீதத்திற்கு வழி இருக்காது.

படிப்பதற்காக ஏழை மாணவர்கள் இல்லம் தேடி வருவார்கள். அவர்களுக்குப்புத்தகம் வாங்க, சம்பளம்கட்ட ஆளுக்கு மாதம் இவ்வளவு என்று கொடுத்து வந்தார். இதுவும் அளவுக்குமீறிப் பெருகிவிட்டது. பின்னர் பள்ளி திறந்தவுடன் சில மாதங்களுக்குத் தருவது என்று நிர்ணயித்திருந்தார்.

எத்தனையோ பேர் சாயத்தொழிற்சாலை வைத்தனர்-எடுத்தனர். பலர் சாயத்தொழிலில் நஷ்டப்படுகின்றனர்; லாபமின்றி நடத்துகின்றனர். இவர் எப்படி பங்களா வாங்குகிறார்; தானம் செய்கிறார். இது பலபேருக்கு விடுவிக்கமுடியாத புதிராக இருந்தது. இதே சாயத்தொழிலைச் செய்ய விரும்பும் ஒருவர் தம்மிடம் வந்து கேட்டால் "நல்ல தொழில்; தாராளமாகச்செய்யலாம், ஆனால் நாணயம்வேண்டும்" என்பாரே தவிர, போட்டியைத் தடுக்கும் நோக்கத்தோடு வந்தவரின் ஆசையை பலவீனப்படுத்த மாட்டார். அது மட்டுமல்ல தொழில் நுணுக்கங்களைச்சொல்லி, இன்னும் கேட்டால் பண உதவியும் செய்வார். இதை யாராவது கேட்டால் "இரத்தலே இழிவு; அப்படி இரப்பார்க்கு இல்லை என்பது இன்னும் இழிவு" உடைத்

தாகும். எனவே ஆண்டவன் கொடுத்திருக்கிறான் போதிய அளவு; நான் கேட்பவர்களுக்கு இயன்றவரை தருகிறேன்'' என்பார்.

யாராவது ஒருவர் ஒருமுறை கடனாகவாங்கிக்கொண்டு போய் திருப்பித்தராவிட்டால் போய் கேட்கமாட்டார்; மீண்டும் தரமாட்டார். எதற்கும் அளவு அவரிடம் உண்டு, இன்னாருக்கு இவ்வளவு தரவேண்டும் என்று. திருப்பிவரும் என்று கருதமாட்டார்; வராவிட்டால் மறுமுறை கேட்டால் மறுத்துவிடுவார். சிலர் சரி என்று போய்விடுவர்; சிலர் பின்புறமாகத்திட்டுவர். இதை யாராவது அவரிடம் சொன்னால் ஓ! அந்த ரூ. 100 வாங்கியவரா? சரிதான் அந்த ரூ. 100க்கு அதுகூட திட்டாவிட்டால் அவருடைய நன்றியுள்ளம் எப்படி வெளியாவது?'' என்று கேலியாகச் சிரித்துச்சொல்லுவார்.

1935ல் எங்கள் பக்கத்து வீட்டுக்கு ஆரிய சமாஜ காரியதரிசி ஸ்ரீ E. S. ரங்கசாமி குடிவந்தார். அவருடைய பெண் சரஸ்வதியும் நானும் ஒன்றாகப் படித்தவர்கள். அவளுக்கும் ஜெயராமன் என்பவருக்கும் மணமானது. அடுத்த வீட்டில் குடிவரவும், நாங்கள் நன்கு பழகினோம். சமாஜக் காரியதரிசி ஸ்ரீ ரங்கசாமி அவர்கள் மாலை நேரங்களில் எங்களுக்குப் பாடம் சொல்லித்தருவார்; பள்ளிப்பாடம்மட்டுமல்ல, அறிவு வளர்ச்சிக்குரியவைகளை விரித்துரைப்பார். தன் பெண்ணைக்காட்டிலும் என்மீது அவருக்கு அளவற்ற அன்பு. அவரின் போதனையைக்கேட்டு அதன்படி நடைமுறையையும் கடைபிடித்தேன். சிக்கலான கேள்விகளை யெல்லாம் கேட்பேன். அத்தனைக்கும் அயராது பதில் சொல்வார். இத்தகைய அறிஞர் என் வீட்டுக்கருகில் குடி

வந்ததைப் பற்றி மகிழ்ந்தேன். இரவு நெடு நேரம்வரை நாளும் என் கணவரும் அவருடன் ஆத்மீக லௌகீக விஷயங் களைப்பற்றி உரையாடுவோம். அவரை 'ஞானத்தந்தை' என் றாலும் மிகைமையாகாது. தள்ளாதவயதிலும் உணர்ச்சிக் களஞ்சியமாக இருந்தார். அவருக்கும் ஸ்ரீ K. ஞானிக்கும் ஏற்பட்ட தகராறில் 'தென்னிந்திய ஆரியசமாஜம்' எனத் தனியாக ஆரம்பித்தார். அதற்கு நாங்கள் தவறாமல் போய் வருவோம்.

## ஹிந்தி கற்றோம்

ஒரு நாள் நான் சமாஜத்தில் பேச விரும்பி, விருப்பத் தைத் தெரிவித்தேன். ஸ்ரீ ரெங்கசாமி மகிழ்ந்தார். பேச எழுந்தேன்; நடுக்கம் உண்டாயிற்று. பேசவேண்டியவை கள் அனைத்தும் தெரிந்தும் பயம் என்னைப் பேச வொட்டா மல் தடுத்தது. புத்தகத்தில் உள்ள கொள்கைகளை வாசித்து விளக்கிக்கூறி விட்டு 5 நிமிடத்தில் உட்கார்ந்துவிட்டேன். அங்கு வந்திருந்தவர்கள் மகிழ்ந்தனர். என் கணவரும் பெருமைப்பட்டார்.

பின்னர் எங்களுக்குக் கூட்டங்களில் பேசுமாறு பல அழைப்புகள் வந்தன. ஹிந்தியில் அருமையான புத்தகங் கள் இருப்பதாக அறிந்து பண்டிட் கண்ணையா அவர்களி டம் ஹிந்தி கற்றுக் கொண்டோம்.

"தொட்டனைத் தூறும் மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறும் கல்வி"

என்னும் இயல்புள்ள பண்டிட் கண்ணையா அவர்கள் எளிய முறையில் முதியோர்க்குக் கல்வி போதிக்கும் முறை அறிந்

தவர். அவரும் ஒரு பெரிய ஆரிய சமாஜி. ஸ்ரீ தயானந்த சரஸ்வதி அவர்கள் எழுதிய சத்தியப்பிரகாசத்தை மொழி பெயர்த்தவர் தமிழில். சமாஜ நூல்கள் பல எழுதி உள்ளார். வடமொழியில் வல்லார். நாங்கள் ஹிந்தி படிக்கும் போது பாடத்தைமட்டும் படிப்பதில்லை. விஷயாலோசனையி லும், விவாதத்திலும் இறங்கி, சர்ச்சைகள் செய்துகொள்ளு வோம். வியாசங்கள் எழுதச் சொல்லுவார். மறுநாள் எங்கள் இருவரின் வியாசங்களைப் பார்வை இடுவார். இங் ஙனம் மூன்றாண்டுகள் ஹிந்தி கற்றோம்.

## காங்கிரஸில் நாங்கள்

1935 ஆம் ஆண்டில் வெளிப்படையாகப் பொதுவாழ் வில் இறங்கினோம். கார்ப்பரேஷன் தேர்தல் நடந்தது. 4, 5, பேருடன் ஸ்ரீ ம. பொ. சிவஞான கிராமணியார் எங் கள் வீட்டிற்கு வந்து காங்கிரஸிற்கு 'வோட்' போட வேண்டும் என்றுகேட்டுக்கொண்டார்." "நாங்களே காங் கிரஸ்வாதிகள் எங்களுடைய 'வோட்' காங்கிரஸிற்கன்றி வேறு யாருக்குப் போய் போடுவோம். காங்கிரஸிற்கு 'வோட்' சேகரிக்க முயல்வது எங்கள் கடமை அல்லவா?" என்றோம். அன்றுமுதல் ஸ்ரீ ம. பொ. சிவஞான கிராமணி யார் அடிக்கடி எங்கள் வீட்டுக்கு வருவார்.

அக்காலத்து நாடக நடிகர்களில் புகழ்பெற்ற ஸ்திரீ பார்ட்டுக்காரர் திரு. K. S. அனந்த நாராயண அய்யர் அவர்களும் பக்கத்து பங்களாவில் குடியிருந்தார். பெண் களே நாணும்படி அவ்வளவு தத்ரூபமாக நடிப்பதில் வல்லார்.

முதன் முதலில், முதல் டிவிஷன் காங்கிரஸ் கமிட்டி ஏற்படுத்தப்பட்டது. எங்கள்வீடுதான் காரியாலயம். அதன் தலைவர் திரு. ம. பொ. சி. செயலாளர். திரு. குமாரசாமி யவர்கள். நான் பொருளாளர். இதன் சார்பாகப் பொதுக் கூட்டங்கள் நடைபெறும். திரு. வி.என்.கே. யும் பேசுவார். நானும் பேசுவேன். திரு.ம.பொ.சி. அவர்களுக்காக கூட்டம் காத்திருக்கும். அப்போதே அவர் சொல்லின் செல்வர். இந்த சமயத்தில் நிறையக் கூட்டத்தைக் கூட்ட திரு. K.S. அனந்த நாராயணய்யரைப் பாட அழைத்தால் உதவியாக இருக்கும் என்று கருதி அழைத்தோம். ஒத்துக்கொண்டு வந்தார். பின்னர் காங்கிரஸ் பொதுக்கூட்டம் என்றால், அதிலும் திரு. K. S. அனந்தநாராயணய்யர் பாடுகிறார் என்றால் எள்விழ இடமிராது. அந்த சம்பந்தத்தில் நடிகர் அனந்தநாராயணய்யர் எங்களின் நண்பராகிவிட்டார். வெகு ஹாஸ்யமாகப் பேசுவார். சர்க்கிள் காங்கிரஸ் கமிட்டியின் பதவிகள் ஸ்ரீ ம.பொ.சி. ஸ்ரீ வி.என்.கே. நான் ஆகிய மூவருக்குள் ஆண்டுக்கொருமுறை மாறிக்கொள்ளும். எந்த காங்கிரஸ் கூட்டம் போட்டாலும், இராயபுரம் பழம் பெரும் தேசபக்தரான ஸ்ரீராமுலு நாயுடுவின் தேக்குமரத்தொட்டி அல்லது எங்கள் வீட்டின் முற்றம் இந்த இடங்களில்தான் நடைபெறும். ஊர்வலங்கள், பொதுக் கூட்டங்கள், கொடியேற்றம் இவைகள் மாதந்தோறும் நடைபெறும். வட சென்னையில் தேசிய ஆர்வம் பொங்கி வழிந்தது. மூலைக்குமூலை தேசிய சங்கங்கள், மூலைக்கு மூலை தேசியப்படிப்பகங்கள், காட்சி அளித்தன. சுதந்திர தினம், தேசியவாரம் இத்தகைய திருநாட்களுக்கு ஊர்வலம் நடத்தப்போவதை சுற்றறிக்கையாக எல்லா தேசிய சங்கங்களுக்கும் அனுப்பிவிட்டால் போதும். மைல் கணக்கான நீளத்தில் பிரமாண்டமான மக்கள் அணி

திரண்டிருக்கும். ஜஸ்டிஸ், கோட்டையென கருதப்பட்ட வடசென்னை, காங்கிரஸின் கற்கூடமாகி விட்டது என்றால் அது மிகையாகாது.

திரு ம. பொ. சி. எங்கள் வீட்டுக்கு வருவார். அவர் பேச்சில் திரு. வி.என்.கே. மயங்கிவிடுவார். நாடுமீள, ஜாதி சமய வேறுபாடுகள் மாள அவர் கூறும் யோசனைகள் அற்புதமானவைகளாகும். திரு. வி.என்.கே. அவர்கள் நேரில் யாரையும் புகழமாட்டார். திரு. ம. பொ. சி. சென்ற பின் அவரின் யோசனைகளைச் சொல்லி பூரித்துப்போவார். "நாடு சுதந்திரம் அடைந்தபின் ஸ்ரீ ம. பொ. சி. அவர்களுக்கு மந்திரி பதவி அளித்தால் எத்தனை உருப்படியான காரியங்களைச் செய்து நாட்டை வளப்படுத்துவார்! மக்கள் வாழ்க்கை நிலை எத்தனை தூரம் உயரும் என்று பெருமையோடு புகழ்வார்.

அவர் திட்டங்கள் வகுத்துத்தர வேண்டும்; நாம் அதை நிறைவேற்றவேண்டும்; எனவே எங்கள் வீடே காங்கிரஸ் ஆபீஸ். எங்கள் தொழிலாளிகளே காங்கிரசின் செயல் வீரர்கள். தேசியத் திருநாட்களுக்கெல்லாம் எங்கள் சாயத் தொழிலாளிகள், எங்கள் வீட்டை மிகப்பிரமாதமாக அலங்கரிப்பார்கள்.

திரு. ம. பொ. சி. திரு. K. S. அனந்தநாராயணய்யர் ஆகியோரின் குடும்பங்களும் எங்கள் குடும்பமும் மிகநெருங்கிப் பழகின. நன்மை தீமைகள் அனைத்திலும் சகோதரத்வ ரீதியில் கலந்து கொள்வோம்.

1937ல் ராஜாஜியின் தலைமையில் காங்கிரஸ் மந்திரிசபை பதவியேற்றது. அப்போது ஹிந்தி எதிர்ப்பு இயக்கத்தை

ஈ. வெ. ரா. பலமாக நடத்தியபோது, திரு. ம. பொ. சி. ஸ்ரீ K. S. அனந்தராமைய்யர் நாங்கள் எதிர்த்தோம். இந்தி எதிர்ப்பாளர்கள் எங்கெங்கு கூட்டம் போடுகிறார்களோ அங்கெல்லாம் மறுநாள் நாங்கள் கூட்டம் போட்டு தகுந்த பதில்சொல்லுவோம். 1938-ஆம் ஆண்டு ஒரு நாள் எங்கள் இல்லத்தில் ஸ்ரீ ம. பொ. சி. பேசிக்கொண்டிருந்தார். அப்போது குறிப்பிட்டார், "சொல்வல்லாளர் திரு. சத்தியமூர்த்தியின் சீடர், பெயர் காமராஜ்; நாடார் வகுப்பைச் சேர்ந்தவர்; என் வகுப்பினைச் சேர்ந்த அவரை நாம் ஒரு கூட்டத்தில் அறிமுகப்படுத்தவேண்டும்" என்றார். நாங்கள் ஒப்புக்கொண்டு தண்டையார் பேட்டையில் ஒரு கூட்டத்தைக் கூட்டி ஸ்ரீ காமராஜரை அறிமுகப்படுத்தினோம். இங்கு ஒரு கார்ப்பரேஷன் பள்ளியில் கூட்டம் நடந்தது. ஹிந்தியையும் காங்கிரஸின் சேவைகளைப்பற்றியும் பாராட்டிப்பேசினார். பின்னர் பல கூட்டங்களுக்கு அழைக்கப்பட்டார். ஸ்ரீ காமராஜ் எளிய சுபாவம் உள்ளவர். எல்லாத் தொண்டர்களிடமும் சகஜமாகப் பேசுவார். (இன்று M. L. A. வாகவும் நமது மாகாணத்தின் தலை அமைச்சராகவும் இருக்கிறார்). யாரையும் உதாசீனம் செய்யமாட்டார். தான் ஒரு பெருந்தலைவர் என்பதைக் காட்டிக்கொள்ளமாட்டார். எல்லோர் சொல்வதையும் கிரகித்துக் கேட்பார். பின்பு பல பிரச்னைகளுக்காக வடசென்னை வந்திருக்கிறார். யார் எதைக் கேட்டாலும் தக்கபதில் சொல்லுவார். இவர் கேட்டுக்கொள்ளும் பாணி தொண்டர்களை வசீகரிக்கும் பண்புடையது. இதை நேரில் பழகியறிந்தவர்களே உணர்வர். தன்னம்பிக்கை உள்ளவர். எனவேதான் இத்தனை விரைவில் உன்னத நிலைக்கு அவர் வர முடிந்தது.

பின்னர் நான் ஜில்லா கமிட்டியின் அங்கத்தினர் ஆனேன். எனக்குவந்த பதவி என்றால் தனக்குவந்ததாகக் கருதுவார் என் கணவர். அவருக்கு வந்ததெல்லாம் எனக்கு வந்ததாகவே எண்ணிக்கொள்வேன். தேசியப் பணிகளில் போட்டிபோட்டு முன்னேறுவோம். சிக்கலான காரியங்களை விவாதிப்போம். தினசரிபத்திரிகைகளில் காந்தியடிகள் எதைக் குறிப்பிடுகிறாரோ அதையே செய்வோம். முற்றிலும் எங்கள் வாழ்க்கை தேசிய இயக்கத்திற்குத் தியாகம் செய்துவிடுவதாகவே தீர்மானித்தோம்; செயல் பட்டோம்.

## யோகாசன பிரசாரம்

1935 லேயே யோகாசனப் பயிற்சியைத் துவக்கினார். அவர் தேசியவேலைகளுக்கிடையில் இதையும் பிரபலப்படுத்த முயன்றார். எனக்கு அடிக்கடி தலைவலி வந்தது. எங்கள் குடும்ப டாக்டர் திரு. சோமசுந்தரம் அவர்களைக் கேட்ட போது அவர் ஒரு கண் டாக்டரிடம் அழைத்துச்சென்றார். கண்ணாடி அணியவேண்டி ஏற்பட்டது. ஒரு நாள் சமாஜகாரியதரிசி ஸ்ரீ E. S. ரங்கசாமி அவர்கள் வீட்டுக்குச் சென்றபோது அவர் சொன்னார், "ஏனம்மா இள வயதில் கண்ணாடி போட்டிருக்கிறாய் ? தலைவலியானால் தொடர்ந்து சிரசாசனம் செய்வதுதானே என்று சொன்னார். ஆசனங்களின் நன்மைகளையும் விளக்கினார். நான் உடனே வீட்டுக்குவந்து என் கணவரிடம் சொன்னேன். அவரும் ஆர்வமுடன்கேட்டார். அன்று மாலை திரு. E. S. ரங்கசாமிஅங்கள் வீட்டுக்கே வந்தார். ஆசனங்களைப்பற்றி திரு. வி. என். கே. யிடம் பிரஸ்தாபித்தார்.

தனக்கு நல்லது எனத் தெரிந்தால் உடனே அவர் செய்யத் துவங்கிவிடும் சுபாவம் உள்ளவர். எனவே அன்று முதல் திரு E. S. ரங்கசாமி அவர்களை இங்கே இரவில் படுக்கச்சொன்னோம். காலை 5 மணிக்கெல்லாம் எழுந்து ஆசனங்களைச் செய்ய ஆரம்பித்துவிடுவோம். இவரின் தமக்கை பிள்ளைகள் திரு. K. R. வெங்கடாசலபதி, திரு. S.V. ராமாச்சாரி ஆகியோரும் செய்வர். நாளுக்குநாள் உடலில் ஒரு புது உற்சாகமும், ஆரோக்கியமும் உண்டாவதை அறிந்தார். விடாமல் தொடர்ந்து செய்தார். நான் சில நாட்களில் நிறுத்திக்கொள்ள வேண்டியதாயிற்று. பின்னர் குழந்தை பிறந்த 3 மாதங்கழித்துத் துவங்கினேன், என் துணைவர் ஒரு நாள்கூட ஆசனம் செய்யாமல் இருந்ததில்லை. பின்னர் திரு. வி. என். கே. யுடன் திரு. E. S. ரங்கசாமியும் கலந்து பொதுக்கூட்டங்களில் ஆசனப் பிரசாரம் செய்யத்துவக்கினர். கூட்டம் ஆரம்பித்தவுடன் ஒருமணிநேரம் ஆசனங்களைச் செய்துகாட்டி விளக்கம் நடைபெறும். கொள்கையில் ஸ்ரீ E. S. ரங்கசாமிக்கும் நமக்கும் வேறுபாடுகள் உண்டு. அதனால் காங்கிரஸ் கூட்டங்களுக்கு அவர் அதிகமாக வருவதில்லை. அவருக்கு சர்வமும் ஆரிய சமாஜமாகத்தான் இருக்கவேண்டும். மத நம்பிக்கை உள்ளவர். அதை வளர்ப்பது அவரின் சொந்த விஷயம்போல.

திரு. வி. என். கே. "காங்கிரஸ் ஒரு தேசிய இயக்கம்-சமாஜத்திற்கும் தேசியத்திற்கும் சம்பந்தமில்லை. சமாஜம் தனிஸ்தாபனம். இரண்டும் ஒருவருக்கு வேண்டியதே" என்பார். பின்னர் நான் அவருடன் ஆசனப்பிரசாரத்திற்குச் செல்லுவேன். அவர் ஆசனம் செய்து காட்டும்போது நான் விளக்கம் தருவேன். இங்ஙனம் தம்பதி சகிதமாய்

ஆசனப் பிரசாரம் செய்தது புதிதாகவும், புரட்சிகரமாயும், இதுவரை யாரும் செய்யாதமுறையாயும் இருந்தது. மக்கள் ஆர்வமுடன் கேட்டு, அதன்படி நடக்கவும் தலைப்பட்டனர். இதன் பயனாக தேசியம், யோகாசனம், ஆரியசமாஜம் ஆகியவைகள் ஒரே சமயத்தில் அதிவேகமாக வளரத் தலைப்பட்டன.

தினம், தினம் இது சம்மந்தமாகப் பலர் வருவார்கள்; போவார்கள். எங்கள் இல்லம் அவர்களை வரவேற்கும். அதே நேரத்தில் வியாபாரத்தில் நாணயமும் மதிப்பும் பெருகலாயிற்று. ஓய்வு ஒழிதல் இன்றி, தென்னாட்டில் பொதுப் பணிகளில் சிரத்தை காட்டிவந்தோம்.

1936 ஆம் ஆண்டில் பெங்களூர் ஸ்ரீ S. சுந்தரம் யோகாசனக்கட்டுரைகளை ஆனந்த விகடனில் துவக்கினார். எங்களின் ஆசனப் பயிற்சிக்கும் பிரசாரத்திற்கும் இவைகள் பேருதவியாக இருந்தமையால் அந்தக் கட்டுரைகளைத் தவறாமல் படிப்போம். 1937ல் கோடைக்காக, பெங்களூர் சென்று, ஸ்ரீ சுந்தரம் அவர்களை நேரில் சந்தித்தோம். என் கணவர் அவ்வமயம் தான் செய்யும் ஆசனங்கள், அதனால் ஏற்படும் ஆரோக்கியங்கள், அது சம்பந்தமாகப் பிரசாரம் செய்தல், ஆகியவைகளைச் சொன்னார். ஸ்ரீ சுந்தரம் அவர்கள் மகிழ்ந்தார். அன்றுமுதல் நாங்கள் பெங்களூரில் தங்கினது வரை தினசரி ஸ்ரீ சுந்தரம் அவர்களின் வீட்டுக்குப் போய் திரு. வி. என். கே. ஆசனம் செய்து வருவார். இங்ஙனம் ஒரு மாதம் கழிந்தது.

சென்னைக்கு வந்தபின் ஸ்ரீ. சுந்தரம் அவர்களுக்கும் எங்களுக்கும் கடிதத் தொடர்பு ஏற்பட்டது. ஆசனப்

பிரசாரத்திற்கு அவரை சென்னைக்கழைத்துப் பல கூட்டங்களில் பேச ஏற்பாடு செய்தார், நமது யோகாசன ஆசான். ஆண்டுதோறும் சென்னைவந்து ஆசனப் பிரசாரம் செய்வார். ஸ்ரீ சுந்தரம், தமிழக முழுமையிலும் சுற்றுப் பிரயாணம் செய்ய ஏற்பாடு செய்தார் ஸ்ரீ குமாரசாமி அவர்கள்.

1941ல் நமது ஆசான் "ஆரோக்கியமும் ஆசனமும்" என்ற நூலை எழுதி 2000 பிரதிகள் பதிப்பிக்கப்பட்டு ¾ பங்கு இலவசமாகவே விநியோகமாயிற்று. 1946ல் மீண்டும் 2000 பிரதிகள் அச்சிட்டு தமிழகத்திற்கு நல்ல அறிமுகமானார். பட்டம் பதவிக்காக திட்டமிட்டு பொது வாழ்க்கைக்கு அடி எடுத்துவைக்கும் நடிப்பு சுதேசிகளின் ரகத்தைச் சேர்ந்தவரல்லர்—மற்றவர்களின் நல் வாழ்விற்கு, தான் ஒளி விளக்காக இருக்கவேண்டும் என்பதே இவரின் பரிசுத்தமான எண்ணமாய் இருந்தது. ஆகவே பொது வாழ்வில் தனது பொருளைச் செலவிட்டாரே அன்றி பொருளீட்டும் எண்ணத்திலிருந்து மாறுபட்டிருந்தார். தருமத்திற்கும், தேசியப் பணிகளுக்கும், உதவிய நண்பர்களின் கைமாறுகளுக்கும், ஆசிரமத்திற்கும், ஆசனப் பிரசாரங்களுக்கும் செலவிட்ட தொகை அளவிடற்கரியது.

## எங்கள் குழந்தைகள்

இதற்கிடையில் ஸ்ரீதரன், பிரபாகரன், கருணாகரன் என்ற மூன்று ஆண்குழந்தைகள் பிறந்தனர். பிறக்கும் போது குழந்தைகள் வெகு நேர்த்தியாகவும் ஆரோக்கிய

மாகவும் இருந்தனர். வளரும் போது கண் கொள்ளாக் காட்சியாக இருப்பார்கள். தமிழகத்தில் இம்மாதிரியான குழந்தைகளை பத்தாயிரத்தில் ஒன்று பார்ப்பது அரிதாகும்.

கருவுற்றிருந்த காலத்திலிருந்து இன்ன உணவுதான் உண்ணவேண்டும்; இவ்வாறுதான் நடந்து கொள்ளவேண்டும் என்ற திட்டத்திலிருந்து ஒரு 'கிலோ' மீட்டர்கூட பிசகுவதில்லை. அறிஞர்களின் நூற்களைக்கற்போம்; கற்ற வழி நிற்போம். எங்களுக்குள் தகராறு ஏற்பட்டால் திறந்துகூறித் திருத்திக்கொள்வோம். சொந்த அலுவல்களைக்காட்டிலும் பொதுப் பணிகள் பெருகிவந்தன.

குழந்தைகளுக்கும் எங்களின் சாயைகள் படிந்திருந்தன. மனோதத்துவ ரீதியில் குழந்தைகளை வளர்த்து வந்தோம். அதன் பயனாக அறிவுவளர்ச்சியும் ஆக்க வளர்ச்சியும் அடைந்தன. எங்கள் வேலைக்காரர்களிடம் மற்றவர்கள், எந்த மருந்திட்டுக் குழந்தைகளை இப்படி வளர்க்கிறார்கள் என்று கேட்பார்கள்! அப்படி காலாகாலத்தில் சத்துள்ள பொருள்களை உணவாக்கிக் கொடுப்பதைத் தவிர வேறு ஒன்றும் இல்லை. மற்றவர்கள், நாங்கள் குழந்தைகளுக்கு 'காயகல்பம்' தருவதாக நினைத்துக் கொள்ளுவார்கள்.

மாண்டிசொரி முறைப்படி விளையாட்டு சாமான்களை வீட்டிலே தயாரித்து குழந்தைகளுக்குக் கொடுப்போம். அவர்கள் கேட்கும் கேள்விகளுக்கெல்லாம் அயராமல் பதில் சொல்ல அவரால்தான் முடியும். ஆண்டுதோறும் கோடை காலங்களில் ஊட்டி, கொடைக்கானல் ஆகிய இடங்களுக்குப் போவதுண்டு. பால் குடிப்பழக்கம் உள்ள குழந்தை

களைத்தவிர அனைவரையும் அழைத்துச் செல்வார். கூட குழந்தைகளைப் பராமரிக்கும் தாதியையும் அழைத்துச் சென்று விடுவார்.

இங்கு எல்லோருமே ஒரு நிமிஷம் ஓய்வின்றி உழைக்கும் அளவுக்கு வேலைகள் பெருகிவிட்டன. ஓய்வே இல்லை. எல்லோருக்கும் ஓய்வு ஞாயிற்றுக்கிழமை என்றால் அவருக்கு அன்றுதான் முழுவேலை.

குடும்பம், வியாபாரம் சர்வ நிர்வாகங்களையும் கவனித்துக்கொள்ள என்னை பழக்கி இருந்தார். கோடை வாசத்திற்காக மூன்றுமாதம் வாசஸ்தலங்களுக்குப் போவார். அதில் மூன்றுமாதம் குழந்தைகளுடன் இருப்பார். பின்னர் வந்து விடுவார். நான் போவேன். இவ்வாறு மாறி, மாறி போவதினால் வியாபாரத்திற்கு இடையூறில்லாமல் இருக்கும். அவரும் நானும் சேர்ந்து ஒருவாரந்தான் வெளியூரில் தங்குவோம்.

குழந்தைகளை மனோதத்துவ ரீதியில் வளர்ப்பதினால் வீண்பிடிவாதங்கள் ஏற்படாது. அழுவதும், அரட்டையடிப்பதும் இருப்பதில்லை. பொதுவிஷயங்களுக்காகவோ, வியாபாரத்தை முன்னிட்டோ வெளியில் போனால் நானும் வருகிறேன் என்று குழந்தைகள் அடம்பிடிப்பதில்லை. பாட்டில்கள், டப்பாக்கள், ரேடியோ, டெலிபோன் போன்ற சாமான்களைக் குழந்தைகளுக்கு எட்டும் அளவில் வைத்திருக்கிறீர்களே, குழந்தைகள் உடைத்துப் பாழாக்கி விடாதா என்று பலர் கேட்பார்கள். அவ்வாறான அசம்பாவிதங்கள் நடப்பதில்லை. ஒவ்வொரு பொருளின் மதிப்பும், உபயோகமும் குழந்தைகளுக்கு நன்குதெரியும். ஏற்கனவே

அவர் குழந்தைகளுக்கு அவைகளைப்பற்றி நன்கு சொல்லிக் கொடுத்திருக்கிறார்.

சுத்தமாக இருப்பதைப்பற்றி, பொய் பேசாதிருப்பதைப்பற்றி, திருடாதிருப்பதைப்பற்றி, ஊக்கமாய் இருப்பதைப்பற்றி, பெருந்தன்மையாக இருப்பது பற்றி அவ்வப்போது கதைகள் சொல்லுவார். நானும் சொல்லுவேன். குழந்தைகள் உள்பட அனைவரும் அணிவது கதரே.

குழந்தைகளை பள்ளியில் சேர்ப்பதுபற்றி ஒரு பிரச்னை வந்தது. கார்ப்பரேஷன் பள்ளிகளில் சேர்த்தால் இவ்வளவு நாள் அரும்பாடுபட்டு வளர்த்தது பயனின்றிப் போகுமே! மனோதத்துவ நிலையில் குழந்தைகளுக்குக் கல்வி போதிக்கும் ஆசிரியர்கள் கார்ப்பரேஷன் பள்ளிகளில் கிடையாதே என்று சம்பளம் கொடுத்துப் படிக்கும் பள்ளிகள் சிலவற்றைப் பார்த்தோம். அங்கு குழந்தைகளை நடத்தும் விதமும், அவர்கள் பேசிக்கொள்ளும் தன்மையும் எங்களுக்குப் பிடிக்கவில்லை தமிழார்வமும், தேசிய ஈடுபாடும் அளவற்று எங்களுக்கு இருந்தும், இராயபுரத்திலுள்ள ஆங்கிலப் பள்ளியான செயிண்ட் கெவின்ஸ் கான்வென்டில் சேர்த்தோம்.

எங்கள் மூத்தமகன் ஸ்ரீதரன் மூன்று வயதில் பள்ளி சென்றான். ஆங்குள்ள 5, 6 வயதுள்ள பிள்ளைகளுடன் சரிசமமாகப் படித்துவந்தான். ஏன்? அவர்களையும் மீறிவிட்டான். இரண்டாவது பையன் பிரபாகரன். அவனும் நன்றாகவே படித்தான்.

ஒரு நாள் பள்ளியின் பிரின்ஸிபால் என்னை அழைத்தார், பள்ளிக்கு. என்ன நடந்ததோ என்று போனேன்.

தனது மகிழ்ச்சியைத் தெரிவித்துக்கொண்டார், குழந்தைகளின் புத்திசாலித்தனத்தை மெச்சி. நல்ல முறையில் குழந்தைகளை வளர்த்திருக்கிறீர்கள் என பெருமிதத்தோடு கூறினார். போதித்த அனைத்தும் அவர்கள் மூளையில் புகைப்படமெனப் பதிந்துவிடுகிறது என்று கூறினார், பிரின்ஸிபால். எங்கள் குழந்தைகளை பார்ப்பனப் பிள்ளைகள் என்று நினைத்தார் அவர். மனோ அபிவிருத்திக்காக உங்கள் பள்ளியில் சேர்க்கப்பட்ட இந்தக் குழந்தைகள் மாண்டிசொரி முறைப்படி வளர்க்கப்பட்ட சௌராஷ்டிர குழந்தைகள் என்றேன் நான்.

இந்த சம்பவத்தை வீட்டில்வந்து பிள்ளைகளின் தந்தையாரிடம் சொன்னேன் "யோகாசனந்தான் இவைகளுக்குக் காரணம் என்று சொல்வதுதானே" என்றார். "ஆம்! இப்படி சொல்லி யிருக்கலாம்; நினைவில்லை" என்றேன். இதை அவர் ஒவ்வொரு கூட்டங்களிலும் சொல்லுவார். வீட்டில் சின்னஞ்சிறு குழந்தைகளை எல்லாம் தூக்கிவைத்து ஆசனங்கள் பயிற்றுவிப்பார். நோய், நொடிகள் என்ற பயமின்றி குழந்தைகள் ஆரோக்கியமாக இருந்தன. தன்னைப் போல் வறுமையில் வாடாமல், வேண்டியது வேண்டியாங்கு கிடைக்க என் பிள்ளைகள் என்ன புண்ணியம் செய்தனவோ என்று பூரிப்பார். எதையாவது குழந்தைகள் வீணாக்கினால் விபரக்கூறி திருத்துவார்—மீறினால் தகுந்தபடி தண்டிக்கத் தவறவும் மாட்டார்.

## சத்தியாகிரஹம்

1941 ஆம் ஆண்டு அண்ணல் காந்தியடிகளின் ஆணையைப் பெற்று நாடெங்கும் அறப்போர் நிகழ்ந்தது. இச்

தப் போராட்டத்திலே தேசியத்தில் தீவிரப்பங்கு கொண்ட எங்களின் கடமையையும் செய்ய வேண்டுமல்லவா? எனவே கணவன் மனைவியரில் யார் போருக்குப் புறப்படுவது என்ற பிரச்னை. எனக்கே வெற்றியாக முடிந்தது. அப்போது மூன்று குழந்தைகள். ஸ்ரீதரனுக்கு வயது 4½. பிரபாகருக்கு வயது 2½. கைக்குழந்தைகருணாகரனுக்கு வயது ஒன்று. காந்தியடிகளிடம் அனுமதி கோரி விண்ணப்பித்தேன். உறவினர், உடன் பிறந்தோர் அனைவரும் தடுத்தனர். என் கடமை எனக் கண்டிப்பாகக்கூறிவிட்டேன். அனுமதி கிடைத்தது மகாத்மாவிடமிருந்து. போலீசுக்கு அறிவித்தேன். கச்சாலீஸ்வரர் கோவில் முன் சத்தியாக்கிரஹம் செய்தேன், 12—2—1941 அன்று.

“மனித சமுதாயத்தை மரணப்படுகுழிக்குக் கொண்டு செல்லும் (இரண்டாவது) உலகமகா யுத்தத்திற்கு படை உதவியோ பண உதவியோ செய்யாதீர்கள்”

இதுதான் எனது சுலோகம். கைது செய்யப்பட்டேன். ஸ்பெஷல் காரில் போலீஸாரால் அழைத்துச் செல்லப்பட்டு எழும்பூர் மாகாண மாஜிஸ்ட்ரேட் ஸ்ரீ. அப்பாஸலி அவர்களிடம் ஆஜர் செய்யப்பட்டேன். ஏற்கனவே எங்கள் குடும்பத்தை நன்கு தெரிந்த அவர் ரூ. 250 அபராதம் விதித்தார். கட்டத்தவறினால் 3 மாதம் சிறை என்று தீர்ப்பளித்தார். அபராதம் கட்டமறுத்தேன்; சிறை செல்லுகிறேன் என்றேன். நான் இதைச் சொன்னபின் என்னைச் சிறைக்குக்கொண்டு சென்றுஇருக்கலாம்; மாலை 4மணிவரை கோர்ட்டிலே வைத்தனர். என்னை வழியனுப்பப் பல நண்பர்கள் கோர்ட்டுக்கு வந்திருந்தனர். அவர்களில் சிலர் கூட

அபராதத்தைக்கட்டிவிடுவது நலம்" என்றனர். "அபராதம் கட்ட நான்வரவில்லை, சிறைப்படவே வந்தேன்" என்றேன். அன்று மாலை வேலூர் ரயில் தவறிவிட்டதால், போலீஸார் என்னை சென்னை சிறைச்சாலைக்கு அழைத்துச் சென்றனர்.

## சிறைத்தண்டனை

அங்கு எனக்கு முன், அறப்போரில் சிறைசென்ற தோழர்கள் T. செங்கல்வாராயன், K. கண்ணப்பர், R. S. குமாரசாமி, R. K. வேணுகோபால் மற்றும்பலர், "ஜே!" கோஷத்துடன் என்னை வரவேற்றனர். பின்னர் பெண்கள் பகுதிக்கு அழைத்துச் செல்லப்பட்டேன். படுக்கை தவிர நான் கொண்டுசென்ற சாமான்களை அனுமதிக்கவில்லை. சிறை அதிகாரிகளே வைத்துக்கொண்டனர்.

எனக்கென்று தனி அறை. அன்றிரவு அங்கிருந்து விட்டு, மறுநாள் வேலூர் பெண்கள் சிறைக்கு அழைத்துப் போக திட்டம். அங்குள்ள சிறைக்கைதிகளுக்கு அம்மை வார்த்திருந்ததைமுன்னிட்டு வேலூருக்கு அழைத்துச்செல்லவில்லை. சென்னை சிறையில் என் பகுதியில் தேசியக் கைதிகள் யாருமே இல்லை. வேறு சில தண்டனை அடைந்த பெண்களே இருந்தனர். மாலை சுமார் 5 மணிக்கு சிறை அறைக்குள் நுழைந்தேன்.

அங்கு பெண் கைதிகள் தம் தம் தட்டுகளைத் தூக்கிக் கொண்டு தயாராயினர், உணவு காலத்திற்கு. பெரிய தட்டு ஒன்றில் சாதமும், அதனில் சாம்பாரும் வந்தது. நிச்சயமாக மனிதர்கள் உண்ணத்தக்க உணவே அல்ல. செத்தவர்களைத் தூக்கிச்செல்லும் பாடை போன்றதொன்று அகன்ற இரும்

புத்தகட்டில் பட்டைபட்டையாகச் சாதம் அளவோடுதட்டி வைக்கப்பட்டு, அதன்மேல் துணிபோர்த்தப்பட்டிருந்தது. எனக்கு இது முதல் அனுபவம். என்னுடன் இருந்த கைதிகள் போட்டிபோட்டு ஒரு கட்டி சாதமும், ஒரு குவளைசாம்பாரும் வாங்கிக்கொண்டு அங்கங்கே உட்கார்ந்து சாப்பிடத் தொடங்கினர். எனக்குமனமில்லை. எனினும் சிறைச்சட்ட வரம்புக்கு உட்பட்டாகவேண்டிய நிர்ப்பந்தம். வழக்கம் போல் எனக்கும் சாதம் சாம்பர் கிடைத்தது. வாங்கி வைத்துக்கொண்டேன்.

காணச் சகிக்கவில்லை, சாதமும் சாம்பாரும். கல், மண் இன்னும் என்னென்ன உண்டோ அத்தனையும் அதிலிருந்தன. புழுக்கள் காட்சி அளித்தன. சாம்பாரில்போட்ட துவரம் பருப்போடு வண்டுகளும் பூச்சிகளும் நன்றாக வெந்து மிதந்தன. வாந்தி அடிவயிற்றைக் குமட்டியது. இந்த உணவை இதர கைதிகள் அபாரமாக ரசிக்கின்ற காட்சி விநோதமாகவே இருந்தது. அந்தோ! பரிதாபம்.

எனது பங்கு உணவை வாங்கிக் கொள்ளுமாறு ஒருத்திக்குக் கொடுத்தேன். அதற்கு 4, 5, பேர் சண்டை. அதை அவர்கள் பங்குவைத்துக்கொண்ட காட்சியை இன்றும் நான் மறக்கவில்லை.

"இந்த சாதம் இவ்வளவு கொடுத்தும் உங்களுக்குப் போதவில்லையா?" நான் கேட்டேன் அவர்களை. "கால் வயிற்றுக்குக்கூடப் போதவில்லையே" என்றார்கள். அதற்குள் மணி ஆனது. வார்டர் (பெண்) எல்லோரையும் உள்ளே போகச்சொன்னாள். எல்லோரும் அறைக்குள் புகுந்தனர். நானும் புகுந்தேன். சிறைக்கதவு மூடப்பட்டது. இரவு

முழுதும் இரு அறைகளுக்கு நடுவில் ஒரு விளக்கு எரிந்து கொண்டிருந்தது. படுக்கையை விரித்தேன். அவ்வளவு சீக்கிரம் படுக்க மனம் இல்லை. காந்திஜி, நேருஜி, வ. உ. சி. கஸ்தூரிபாய், பண்டிதமோதிலால், சொரூபராணி போன்ற தியாக மணிகளை நினைத்துக்கொண்டேன். அவர்களுக்கு ஏற்பட்டிருக்கிற—இழைக்கப்பட்ட கொடுமைகளைவிட நாம் எதை அனுபவித்து விட்டோம் எனத் தேற்றிக் கொண்டேன்.

பிறந்தது முதல் விவரம்தெரிந்து தன்னந்தனியாக நான் எங்கும் சென்றதில்லை. இப்புதிய அனுபவம்பெற வேண்டுமென்றுதானோ வலியச்சிறைக்குவந்தோம் என்று எண்ணிக் கொண்டேன். இரவு எப்படியோ கழிந்தது.

பொழுது புலர்ந்தது. சிறைக் கதவுகள் திறந்தன. தனித்தனியாகப் பிரித்து அனைவரையும் வார்டர் வேலைக்கு அனுப்பினான். தோட்டம், அறைகள், கக்கூஸ் இவைகளைச் சுத்தம் செய்தனர். அதன் பின் சிலர் குளித்தனர். மற்றவர்கள் குளிக்கவில்லை. நான் படிப்பதற்காக எடுத்துச் சென்ற புத்தகங்களில் சத்தியார்த்தப் பிரகாசம், சத்திய கிரஹ நாடகம் என்ற அரிச்சந்திர நாடகம் இந்த இரு புத்தகங்களையும் ஏதோ அரசியல் கலப்புள்ளதென்று நினைத்து தரமறுத்தனர். குறள், நாலடியார், பகவத்கீதை, கம்பராமாயணம், அருட்பா ஆகியவைகள் தரப்பட்டிருந்தன. சிறை செல்லுமுன்பே சிறை வாழ்க்கையைப் பயனுள்ளதாகக் கழிப்பது பற்றித் திட்டம் போட்டிருந்தேன். ஸ்ரீ ஆச்சா அனந்தாச்சாரியார் விபரமாக எடுத்துரைத்தார்கள். எங்கள் சமூகத்தலைவர் ஸ்ரீ A. R. வெங்கடாச்சாரியார் அவர்களும் போதனை செய்தார்கள்.

" காலை மாலை பிரார்த்தனை செய் அங்கிருக்கும் கைதி! களைத் திருத்து.! வாயால் அவர்களைத் திருத்தவைப்பதைவிட உனது திருந்திய செயல்கள் அவர்களுக்கு வழிகாட்டி யாக அமையவேண்டும்!" இதுதான் எங்கள் சமூகப் பிரமு கர் ஸ்ரீ A. R. ரங்காச்சாரி அவர்களின் பொன்னுன வாக்கு கள்!

இவரும் ஒரு தேசியவாதி ; மறைமுகமாக காங்கிரஸிற் குப் பேருதவி புரிந்தவர். கார் முதல் பல வற்றை தானமாகக் கொடுத்திருக்கிறுர் என்றுலும் வெளியில் சொல்லுவதில்லை. செய்யாமலே பிரமாதப்படுத்துபவர்கள்; ஏதோ தானோ என்று செய்துவிட்டு கொடைவள்ளல் என்று புகழப்படுவர் கள் ; ஏராளமாகச் செய்தும் மௌனியாக இருப்பவர் கள்; இந்த ரகங்களில் கடைசி இனத்தைச் சேர்ந்தவராவார். ஜாதியக் குப்பைகளைக் கடந்த நுண்ணறிவாளரான இவர் சைஞு, ஜப்பான் போன்ற தூர கிழக்கு நாடுகளுக்குச் சென்றவர். பெரிய வியாபாரி.

## கைதிகளுக்கிடையில்

சிறையில் உண்ணும் நேரந்தவிர இதர நேரங்களில் அனைவரையும் ஒன்ருக இணைத்து சகலமும் விசாரிப்பேன். இதர கைதிகள் தண்டனை அடைந்ததைப்பற்றியும் பல்வேறு விஷயங்களையும் கூறுவார்கள். தங்களுக்கு தண்டனை நியாய மற்றதென்று, தீர்ப்பளித்தவர்களையும் அதற்கு உடந்தையாக இருந்தவர்களையும் கர்ணகடூரமாகப் பேசுவார்கள். ஒருத்தி மறுப்பாள். உடனே அப்போதே சண்டைதான். இவர்களுக்கு நீதியையும், நேர்மையையும், அதன்பலாபலன் களையும் பரிசுத்த வாழ்வின் பயனையும், அந்த வாழ்க்கையை

அடைய பரமனிடம் கோரும் பிரார்த்தனையையும் எடுத்துக் கூறி திருத்துவேன். சிலர் பிரார்த்தனைசெய்யும் போது அழுதே விடுவார்கள். ஓய்ந்த ஒழிந்த நேரங்களில் பாரதி கவிதைகள், கண்ணன் பாட்டு, திரு அருட்பா இவைகளைப் பாடுவேன். பயபக்தியுடன் கேட்பார்கள். சண்டை போடுவதை நிறுத்தினர். உணவு வினியோகத்தின் போது ஒழுங்காக வாங்கி உண்டனர். என்மீது அவர்களுக்கு ஒரு மரியாதை. என் வேலைகளை அவர்கள் பக்தியோடு செய்யவருவார்கள். நானே செய்துவிடுவேன். வார்டன் கூட நீங்கள் வந்தபின் எனக்கு வேலை குறைந்து விட்டது என்றார்.

என்னதான் சீர்திருத்தம் செய்துகொண்டிருந்தாலும் என் பாடு திண்டாட்டமாகவே இருந்தது. மறுநாள் காலை தோசை காப்பி எல்லாம்வந்தது. மற்ற கைதிகளுக்குக் கூழ். எனக்கு வந்த தோசையோ தடித்து கெட்டியான ஒரு பொருள். காப்பியோ சாக்கடை நீர்போல். வாயும் உண்ணமறுத்தது. வயிறும் ஒப்புக்கொள்ள சம்மதிக்க வில்லை. இங்ஙனம் நான் பட்டினியாக இருப்பதைப் பார்த்து வருந்தினர், சிறை சூப்பிரன்டெண்ட். வடநாட்டு உணவுதரு மாறு கேட்கச் சென்னர். கேட்டேன். இரவு ரொட்டி, பால் வந்தது. பாலை மட்டும் சாப்பிட்டேன்.

மூன்றும் நாள் பசி தாங்க முடியவில்லை. தோசையைவைத்து விட்டுக் காப்பியை மட்டும் குடித்தேன். பகலில் சாதம், சாம்பார், தயிர் வந்தது. தயிரைமட்டும் குடித்துவிட்டு இதாவற்றை, கூட இருப்பவர்களுக்குக் கொடுத்துவிட்டேன். நான்காவது நாள் மாலை எனக்கு விடுதலை என்று சிறையதிகாரி (சூப்பிரின்டெண்ட்) சொன்

ஞர். சிறை அதிகாரிகள் என்னைப் பொறுத்தவரை மிக மரியாதையாக நடந்து கொண்டனர். எனது அபராதத் தொகை வசூலிக்கப்பட்டதாகவும் சொன்னார், சிறை அதிகாரி. "இவ்வளவுதானா சிறை? இதற்காகவா எத்தனை முன்னேற்பாடுகள்?" என்ற சலிப்புத்தான் வந்தது. எனது சாமான்களை மீண்டும் கட்டினேன். எனது பிரிவை உடன் இருந்த கைதிகளால் தாங்க முடியவில்லை. சிலர் அழுதும் விட்டனர்." எல்லோரும் நல்லவர்களாக நடந்து கொள்ளுங்கள் என்று ஆறுதல் கூறிவிட்டு வந்தேன். சிறைவாசலில் என் கணவர், ம. பொ. சிவஞானம், ஆக்கூர் அனந்தாச்சாரி, சங்கு சுப்பிரமணியம், ஸ்ரீநிவாச வரதன் மற்றும் பல காங்கிரஸ் தொண்டர்கள் மாலை மரியாதைகளுடன் வரவேற்றனர். "கேவலம்! நான்கு நாட்கள் இருந்ததற்கா இத்தனை மாலை மரியாதைகள்?" என்று கூறியே விட்டேன்.

## விடுதலை

"எப்படி அபராதத் தொகை வசூலிக்கப்பட்டது" என்று கேட்டேன், என் கணவரை. "ஜப்தி செய்யப்படும் நிலை ஏற்பட்டது. ஸ்ரீ ஆக்கூர் அனந்தாச்சாரி, ம. பொ. சிவஞானம் ஆகியோரின் ஆலோசனைப்படி கட்டிவிட்டேன்" என்றார். எனக்கென்னமோ திருப்தி இல்லை. மறு சத்தியாக்கிரஹம் உடனே துவங்கவேண்டும் என்றேன். 10 நாள் கழித்து மீண்டும் போலீஸுக்கு அறிவித்தேன், 25—2—41ல் செய்யப்போவதாக. அதற்கு முதல் நாள் கைக்குழந்தைக்குக் கடும் ஜுரம் 104, 105 டிகிரி காய்ந்தது. வீட்டில் யாரும் சம்மதிக்கவில்லை. நான் அடிக்கடி வந்து பார்க்கும் டாக்டரிடம் பொறுப்பைக்காட்டி விட்டு

அறப்போருக்குத் தயாரானேன். திரு. ம. பொ. சிவ ஞானம் கூட மறுத்தார்.

சிறைவாழ்க்கை திருப்தி அளித்தது எனினும், குழந்தையின்மீதும், வீட்டின்மீதும் என் மனம் இருக்கத்தான் செய்தது. அப்போது ஆங்கில ஆட்சியாளரின் மீது எனக்கு ஏற்பட்ட கோபத்தை அளவிடமுடியாது.

“உங்களுக்கோ சிறு குழந்தை. அந்த அம்மாளைப் பாருங்கள்; பெரிய மகள் ஒருத்தி நோய்வாய்ப்பட்டுச் சாகும் தருவாயில் இருந்தாள். மன்னிப்புக் கேட்டுக் கொண்டால் விடுவிப்பதாகக்கூறினார்கள். மகளும் இறந்து விட்டாள். மன்னிப்பும் கோரவில்லை. மற்றொருமகள் இருந்தாலும் அதையும் தியாகம் செய்வேன் என்றார், அவர்.” இப்படியாக அங்கிருந்தவர்கள் என்னைத் தேற்றினார்கள். பின் என்னைப்பற்றி நான் தலை குனிந்தேன்.

மூன்றும் வகுப்புக் கைதிகளைத் தனியாக வைத்திருந்தனர். அவர்களின் பரிதாபக்காட்சி காணச் சகிக்கவில்லை. எத்தனை தாய்மார்கள் குழந்தைகள், கணவர்கள், உற்றார் உறவினர்கள் இத்தனை பேர்களைத் துறந்து தனிமையில் சிறைப்பட்டுத் தவிக்கின்றனர், இவர்கள் அல்லவா தியாகிகள்!

நாம் ஒருவருக்கொருவர் உதவிக் கொள்ளுகிறோம் என்று மற்றவர்களை வேறு சிறைக்கு மாற்றிவிட்டனர். ஒரு வாரம் மிக வேகமாக கழிந்தது. விடுதலை செய்தி வந்து விட்டது. அபராதத்தொகை வசூலாகி விட்டது என்றனர். எல்லோரும் என்னை ‘கேட்’ வரை வழியனுப்பினார்கள்.

எனது கணவர், காங்கிரஸ்காரர்கள், ஆரிய சமாஜிகள் அனை வரும் என்னை வரவேற்கக் காத்திருந்தனர்.

பின் ஆரிசமாஜத்திற்கு வந்தோம் C.I.D. பின்தொடர்ந் தார். குழந்தைக்கு ஜுரமில்லை; வயிற்றுக்கோளாறு என்றார் திரு. வி. என். கே. நான் வீட்டுக்குப் போகத்துடித்தேன். சமாஜக் கூட்டத்தில் பேசிவிட்டுத்தான் போகவேண்டும் என்றனர், சமாஜநிர்வாகிகள். இரண்டுமணி நேரம் ஆத்திரம் தீரப்பேசினேன். மறு நாள் வீடு சென்றோம். அளவுக்கு மீறி கண்ட கண்ட மருந்துகளைக் கொடுத்து குழந்தையின் குடலைக் கெடுத்து விட்டனர். பின்னர் சகல மருந்துகளை யும் நிறுத்திவிட்டு குழந்தையைத் தேற்றினேன்.

## ஆகஸ்டுபுரட்சியும் யுத்த பீதியும்

இந்த சமயம் யுத்தபீதியினால் சென்னை நகரம் காலியா யிற்று. ஆக்கூர் அனந்தாச்சாரி, B. அரங்கசாமி நாய்க்கர் நாங்கள் வாலாஜாபேட்டையில் தனித்தனி வீடமர்த்தி குடியிருந்தோம். அங்கும் தேசியப்பணிகளில் ஈடுபட்டு உழைத்தோம்.

1942 ஆகஸ்டுமாதம் 7ந்தேதி அகில இந்திய காங்கிரஸ் காரியக்கமிட்டி கூடிற்று. அன்று இரவே காந்திஜி, நேருஜி, பட்டேல் போன்ற தலைவர்களிலிருந்து தீவிரமாக உள்ள அத்தனை தேச பக்தர்களும் சிறைப் படுத்தப்பட்டனர், பாது காப்பு கைதிகளாக. காங்கிரஸில் உள்ள முற்போக்கு இளை ஞர்களும் காங்கிரஸ் சோஷலிஸ்டுகளும் இணைந்து பலாத் காரக் கிளர்ச்சியை ஆரம்பித்தனர், இமயமுதல் குமரிவரை அ. இ. காங்கிரஸ் கமிட்டியின் அந்தரங்க சுற்றறிக்கைப்

படி நடைபெறும் கொள்கை ரீதியான புரட்சி இது என்று வதந்தியைக் கிளப்பினர். பம்பாயில் தலைவர்கள் கைதுசெய்யப்பட்டு கண்காணாத இடங்களுக்குக் கொண்டுபோகப் பட்டனர். 7-8-42 காலை 4 மணியிலிருந்து காங்கிரஸ்காரர்கள் தினம் தினம் கைது செய்யப்பட்ட வண்ணம் இருந்தனர். எந்தத் தலைவர் எந்தச் சிறையில் வைக்கப்பட்டிருக்கிறார் என்றே அறிவிக்கப்படவில்லை. எனவே மக்களின் ஆத்திரம் எல்லை மீறியதோடு, பலாத்காரவாதிகளின் வதந்தியையும் நம்ப ஆரம்பித்துவிட்டனர். திரு குமாரசாமி அவர்கள் இதை நம்பவில்லை. "ஒருக்காலும் காந்தியடிகள் தந்திக்கம்பிகளை வெட்டி, தண்டவாளங்களைப் பெயர்த்து, போலீஸ் ஸ்டேஷன்களை உடைத்து, தபால் ஆபீசைக் கொளுத்தி, ஆயுதங்கள் ஏந்தி, மக்களின் சொத்து சுகங்களுக்கு அபாயம் விளைவிக்கும் ஆயுதப் புரட்சியை அனுமதித்திருக்கவே மாட்டார்" என்று கூறினர். இன்றைய தலையமைச்சர் திரு. காமராஜ் வாலாஜா பேட்டைக்கு வந்தார். ஸ்ரீ. ஆக்கூர். அனந்தாச்சாரியரை அழைத்து, ஆகஸ்டு புரட்சிக்குத் தயாராக வேண்டும் என்றும், நாங்களும் அதில் பங்குகொள்ள வேண்டும் எனவும் தெரிவித்தார். பலாத்காரத்தில் எங்களுக்கு நம்பிக்கை இல்லாது போகவே நாங்கள் ஈடுபடவில்லை. புரட்சியோ பிரமாண்டமாகவே நடந்தது.

பின்னர், துணிந்து பண்டித நேரு "ஆகஸ்டு தியாகிகளுக்கு தலை வணங்குகிறோம். அந்த வீரப் புரட்சிக்குப் பொறுப்பேற்கின்றோம்" என்றார். ஏகாதிபத்தியம் பணிந்தது. 1944ல் சிம்லாவில் பேச்சுவார்த்தைகள் நடைபெற்றன. எல்லா காங்கிரஸ் தலைவர்களும், விடுவிக்கப்பட்டனர்.

இந்த சமயத்தில் யுத்தமும் நின்றது. மாநிலம் எங்கும் மனித இனம் மகிழ்ச்சி கொண்டிருந்திருக்கும்.

## "பரிபூரண சுதந்திரம்"

1947 ஆம் ஆண்டு ஆகஸ்டு 15-ல் இந்தியாவுக்கு சுதந்திரம் கிடைத்தது. அன்று இரவு 12 மணிக்கு தமிழக வாத்திய வித்வான்கள் இன்னிசை முழங்க, தமிழகத்து தங்கச்செங்கோல் தாங்கி, பண்டித நேரு பிரதமரானார். இந்தியமக்கள் அனைவரும் சுதந்திரக் காற்றினை சுவாசித்தனர். நூற்றுக்கணக்கான ஆண்டுகளாக நடைபெற்ற நமது போராட்டம் கத்தியின்றி, ரத்தமின்றி வெற்றிகண்டு விட்டது. ஒண்டி அண்டி குண்டுவிட்டு உயிர்பறித்தல் இன்றி, மண்டலத்தில் கண்டிலாத புதுமையாம் நமது சுதந்திரம்.

பெற்றசுதந்திரத்தின் பிதா காந்தியாரின் யோசனைகளை சுதந்திர இந்திய ஜனஜாதி விநாடிக்கு விநாடி எதிர்பார்த்துக் கொண்டிருந்தது. சமத்துவம், சகோதரத்வம், சமரசம் இவைகளைக் குறிக்கோளாகக்கொண்ட நமதுமணித்திருநாட்டில் துரதிர்ஷ்ட வசமாக சகோதரத்தகராறே வந்துவிட்டது. மதவெறி தலைதூக்கியது. இந்து-முஸ்லீம் கலகம் இந்தியாவை ரத்தக்கரை படியச்செய்தது. தேசத்தின் அமைதி அறுவடை செய்யப்பட்டு, ரௌடிசம் சாகுபடி செய்யப்பட்டது. தேசத்தின் பல பாகங்களில் இந்து-முஸ்லீம் பகையின் அடிப்படையால் கர்ணகடூரமான ரகளைகள் நிகழ்ந்தன. பாக்கிஸ்தான் பிரிக்கப்பட்டது.

காந்திஜி, நேருஜி போன்ற தலைவர்கள் அறிக்கைகள் விட்டனர். அமைதி நிலவவில்லை. உபவாசம் இருக்கவேண்

டிய நிலைமைக்கு அதிதங்கள் வரைமீறின. நவகாளி, தீபேப்ரா ஆகிய இடங்களுக்குக் கால் நடையாகச்சென்று மக்களிடையில் சகோதரத்வம் நிலவச் செய்ய காந்திஜி தனது தள்ளாத வயதில் நடைமெலிந்து சொற்பொழிவுகளை நிகழ்த்தினர்.

## அண்ணலின் மறைவு

எந்த மதத்திற்காக—எந்த இனத்திற்காக-எந்த நாட்டிற்காக எந்த லட்சியத்திற்காக காந்தியடிகள் பாடுபட்டாரோ அந்த மதத்தினன், அந்த இனத்தினன், அந்தநாட்டினன், அந்த லட்சயவாதி எனத் தன்னைப் பெருமையாகக் கூறிக் கொள்ளுபவனே காந்தியடிகளின் தங்க நிற அங்கங்களில் மூன்று குண்டுகளைப் பதித்தான்.

வாயில்லாப் பூச்சிகளாக, உணர்வில்லாப் பிண்டங்களாக, சுதந்திரமறியாக் சோடைகளாக, விழியில்லா சமூகத்தினரான மக்களுக்குப் போரின்றிப் புதுவாழ்வை அளித்த புனிதன் காந்திக்குக் கைமாருக மனித இனத்தின் கடையோன்தந்த வெகுமதி, குண்டுகள் மூன்று.

சுதந்திர அரசாங்கத்தில், தனது லட்சிய பூமியில், அடிகளின் விருப்பத்தை நிறைவேற்றி வைக்கும் தகைமையில்லாததாக, இந்திய இனத்தை இழிவுபடுத்திவிட்டு, பிரார்த்தனைக் கூட்டத்திலே அண்ணலைக் கொன்றுன், கைத் துப்பாக்கியின் ரவைகளைக் கிளப்பிவிட்டு.

ஆம்! கோட்ஸே என்ற கொடியோன். 31-1-48 மாலை 5 மணிக்கு அண்ணல் நம்மிடையே இருந்து பிரிந்து நீரிலே கரைந்து நெஞ்சிலே உறைந்தார்.

காந்தி அடிகள் திடீரென்று சாகடிக்கப்பட்ட செய்தியை நாங்கள் நம்ப முடியவில்லை. நாட்டிலுள்ளோர் யாருமே உடனே நம்பி இருக்கமுடியாது. அப்போதே 'தினசரி' ஆசிரியர் திரு. T.S. சொக்கலிங்கம் அவர்களுக்கு திரு. வி. என். கே. போனில் கேட்டார். பின்னர் எங்கள் வட்டார தேசிய வாதிகள் எங்கள் வீட்டிலே வந்து கூடினர்.

காந்தியடிகளின் அறிக்கைகள், பேச்சுகள் வெகுவாக வருத்தின. அன்னாரின் உபவாச நிறுத்த நிபந்தனைகள் ஏற்றுக்கொள்ளப்பட்டன. தந்தை சொல் மிக்க மந்திரமில்லை என்று பட்டேல், நேரு போன்றோர் உடன் பட்டனர்.

இந்து-முஸ்லீம் ஐக்கியம் நிலவியது; அண்ணலாரின் மகிழ்வு பொங்கிற்று. ஆனால் அந்தக் கண்கொள்ளாக் காட்சியைக்கண்டு களிகொள்ளு முன்னர் பாதகன் நாதுராம்-பழிகார கோட்சே வஞ்சம் தீர்த்தான்-உத்தமனின் உயிரைக் குடித்தான். அகிலத்தை அந்தகாரம் கவ்விற்று.

தமிழகத்து அரசியலில் ராஜாஜி-காமராஜ் தகரூறு வலுத்தது. சுதந்திரமடைந்த ஒருநாட்டில், சுதந்திரத்திற்கு ஏக போக உரிமையுள்ள ஒரு கட்சியில் நிகழ்ந்த உள்கட்சிப் போராட்டம் எங்களை மிகவும் வருத்தியது. எனவே அரசியலிருந்து ஓய்வு பெற்று ஆசனப்பிரசாரத்தில் மும்மரமாக ஈடுபட்டோம்.

இந்த சமயத்தில் யோகாசன வல்லுனர் பெங்களூர் சுந்தரம் அவர்கள் ஆசன அபிவிருத்திப் பிரசாரப் போக்கி

லிருந்து மாறுபட்டிருந்தார். ஆசன சம்பந்தமான கூட்டங்களுக்கு வருவதில்லை; போதும் நோயாளிகளுக்கு ஆசனம் கற்பித்தது; அதை நீங்களே செய்யுங்கள் என்று கூறிவிட்டு பக்தி மார்க்கத்தில் இறங்கிவிட்டார். இந்தப் போக்கினைக் குறித்து திரு. வி. என். கே. தக்க பதில் எழுதினர்.

"ஒரு கூட்டம் பக்தி; மற்றொரு கூட்டம் ஆசனம்; இப்படி நிகழ்த்தினுல் வருகிறேன்" என்ருர். நான் தான் இதற்கு செயலாளர். நாங்கள் ஒப்புக்கொண்டோம். பத்து நாள் கூட்டங்கள் பத்துப் பேட்டைகளில். மந்திரிகள் பிரபலஸ்தர்கள் தலைமை வகித்தனர். திரு. S. சுந்தரம் அவர்கள் பரிவாரங்களுடன் வந்திறங்கினர். "இந்த தடவை சிகிச்சைக்கு கட்டணம் வைக்கவேண்டும்" என்ருர். ஏற்றுக்கொண்டோம். எழுத்து வேலை அனைத்தும் நானே செய்தேன். பலநாள் முன் கூட்டியே சிகிச்சை வேண்டுவோர்களுக்கு எழுதி ரூ. 750 வரை சேர்த்துக்கொடுத்தோம். இது தவிர எங்கள் கையை விட்டுப் பல்லாயிரக் கணக்கான ரூபாய் செலவாயிற்று. இந்த சமயத்தில்தான் ஸ்ரீ. ஆனந்தரங்கா வந்து சேர்ந்தார். ஸ்ரீ. சுந்தரம் அவர்களின் காலில் சாஸ்டாங்கமாக விழுந்து வணங்குவார். இதன் பின் பலர் விழுந்து கும்பிடத் துவங்கினர். ஸ்ரீ. சுந்தரமும் கண்மூடி சாமியாராகிவிடுவார்.

இந்தப் போக்கு ஆரிய சமாஜியாகிய திரு. வி. என். கே. க்குப் பிடிக்கவில்லை. பின்னர் திரு. சுந்தரம் அவர்கள் சென்னை வரும்போதெல்லாம் புரசவாக்கத்தில் தங்கிவிட்டுப் போவார். இந்த நிலையில் ஆனந்த விகடனில் எழுதுவதும் நின்றது.

# திரு. வி. என். கே. யும், "கல்கி" ஆசிரியரும்

அன்று ஆரிய சமாஜ பிதா ஸ்ரீ. தயானந்த சரஸ்வதி அவர்களின் விழா! அதற்கு தலைமை தாங்க "கல்கி" ஆசிரியர் (காலஞ்சென்ற) ஸ்ரீ. ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்களை அழைக்கச் சென்றார், ஸ்ரீ வி. என். கே. தனக்கு ஆஸ்துமா இருப்பதால் வர இயலாதெனத் தெரிவித்து நழுவ முயன்ற 'கல்கி' ஆசிரியரிடம் 'உங்கள் ஆஸ்துமாவை நான் குணப்படுத்துகிறேன்' என்று விழாவுக்கு அழைத்து வந்தார். அதன்பின் திரு. 'கல்கி' அவர்களும் திரு. வி. என். கே. கூறிய ஆசனங்களைச் செய்துவந்தார்.

இதன் பின்னர்தான் கல்கி அவர்களுடன் நெருங்கிய தொடர்பு ஏற்பட்டது. 'கல்கி'யில் திரு. வி. என். கே. தொடர்ந்து ஆசனங்களைப்பற்றி, எழுதுமாறு ஆசிரியர் ரா. கிருஷ்ணமூர்த்தி கேட்டார். இந்த வாய்ப்பு பல லக்ஷக் கணக்கான தமிழர்கள் மத்தியில் நல்ல அறிமுகத்தை உண்டாக்கியது.

அந்த நல்வாய்ப்பை அளித்து தனது முயற்சிகளுக்கு வெற்றி தேடித் தந்த 'கல்கி' கிருஷ்ணமூர்த்தி அவர்களுக்கே தனது "ஆரோக்கிய ரகசியம்" என்ற நூலை, தனது மரியாதையையும் நன்றியையும் தெரிவித்துக்கொள்ளும் வகையில் சமர்ப்பணம் செய்தார். அந்த நூலின் முகவுரையில் திரு. குமாரசாமி அவர்கள் தந் திருக்கும் விளக்கத்தின் சுருக்கம் பின்வருமாறு :

# ஆரோக்கிய ரகசியத்தின் முகவுரை

'கல்கி' இன்றைய தமிழ் வார ஏடுகளில் உன்னத ஸ்தானம் வகிக்கின்றது என்பதற்கு மறுப்பு இருக்க முடியாது. உயர்ந்த ரகமான விஷயங்களைத் தாங்கி வரும் 'கல்கி'யின் வாசகர்களும் அப்படியே. எனவே அதில் எழுதும் வாய்ப்புக்கு மகிழ்ந்தேன். எனினும் மிகப் பெருத்த பளுவைத் தாங்குகின்ற நினைப்பும் இருக்கத்தான் செய்தது. 1950 ஆகஸ்டுக்கு முன் "கல்கி"யில் எனது ஆரோக்கிய ரகசியக் கட்டுரைகளை எழுதுவேன் என்று எதிர்பார்த்ததே இல்லை. எனக்கு மலைப்பாகவே இருந்தது. ஆனால் ஆசனப் பிரசாரத்தில் நான் கொண்டுள்ள ஆர்வம் அந்த; துணிவை உண்டாக்கியது.

1935-க்கு முன் நம்மைப்போன்ற குடும்பத்தினர் ஆசனம் செய்யமுடியாது என்று எல்லோரைப்போல நானும் கருதினேன். சைனு பஜார் (சென்னை) மூலையில் கையைக் காலை முறித்து மிக பயங்கரமாக ஆசனம் செய்து பலரை பிரமிக்க வைத்தார் ஒருவர். அதைப் பார்த்துப் பரிதாபப் பட்டு கையில் உள்ள காசுகளைப் போடுவர் கூடியிருப்போர்.

1935 க்கு முன் நான் ஒரு நோயாளி. இளமையில் வறுமையிலும் கவலையிலும் ஆழ்ந்ததன் எதிரொலி அதன் பின் ஏற்பட்ட பலஹீனம், தலைவலி, ஜுரம், வயிற்றுக் கோளாறுகள் சர்வ சாதாரணம். சொந்த சாயத் தொழில் 1927-ல் துவங்கினேன். மாதம் ரூ. 30 குறைந்த பட்சம் வைத்தியத்திற்கு செலவிட்டேன். "ஸ்பிரிங் டெம்பெல்ஸ்" போன்ற உடற்பயிற்சிகள் செய்தேன். பலன் இல்லை.

ரிய சமாஜத்தில் செயலாளர் திரு. E. S. ரெங்க சாமி எனது நெருங்கிய நண்பர். 1935-ல் ஒரு நாள் யோகாசனங்களின் நன்மையை எடுத்துக்காட்டினார். செய்தும் காட்டினார். நானும் கற்றுக்கொண்டேன். அன்று முதல் நான் புது மனிதன். வெகு தீவிரமாகப் பயின்றேன், ஆசனங்களை. அது சம்பந்தமான பல நூல்களைப் பயின்றேன். பின்னர் நண்பர் திரு. E. S. ரங்கசாமி அவர்களுடன் யோகாசனப் பிரசாரத்திலேயே இறங்கிவிட்டேன். நாளா வட்டத்தில் என் மனைவியே என்னுடன் பிரசாரத்தில் கலந்து கொண்டாள்; நான் செய்யும் ஆசனங்களுக்கு விளக்கம் கூறுவாள்; இந்த கவர்ச்சியான எங்களின் பிரசாரம் பெண்கள் பலரையும் ஆசனம் செய்யத் தூண்டிற்று.

பின்னர் கோடைக்கு பெங்களூர் சென்றபோது ஸ்ரீ. சுந்தரம் அவர்களிடம் அறிமுகமானேன். சரிவரச் சில ஆசன முறைகளைத் தேர்ந்தேன். 10 ஆண்டுகள் வரை அன்னாருடன் ஆசனப் பிரசாரம் செய்தேன். "ஆரோக்கியமும் ஆசனமும்" என்ற நூலை 1941-ல் 2000 பிரதிகளும், 1946-ல் இரண்டாம் பதிப்பாக ஆக்கூர் அனந்தாசாரியாரால் திருத்தப்பெற்று 2000 பிரதிகளும் அச்சிட்டு பெரும்பாலும் செல்லுமிடங்களெல்லாம் இலவசமாகவே வினியோகித்தேன். ஆனந்த விகடனில் திரு. சுந்தரம் தொடர்ந்து எழுதியதை நிறுத்திவிட்டார். எனவே நான் 'கல்கி'யில் எழுதுமுன் பொதுவாக திரு. சுந்தரம் அவர்களின் ஆசனப் பிரசாரம் நல்ல பலனை அளித்தது.

திரு 'கல்கி' அவர்கள் ஆசனம் செய்ய விரும்பினார் எனினும், தொடர்ந்து செய்வதில்லை. கேட்டால் நான்

வயதானவன். என் மகனுக்குப் பயிற்று விடுங்கள். அவன் தான் வளராமல் இருக்கிறான் என்பார். அன்றுமுதல் 'கல்கி' குமாரன் திரு. ராஜேந்திரனுக்கு கற்பிக்கப்பட்டது. பையன் நல்ல ஆரோக்கியத்துடனும், தெம்போடும் வளரத் தொடங்கினான். ஏற்கனவே இருந்த கோளாறுகள் முற்றிலும் நீங்கின. பூரண சுகம் ஏற்பட்டது.

இதை நேரில் கண்ட பின்தான் 'கல்கி'யில் தொடர்ந்து எழுதுமாறு ஸ்ரீ ரா. கிருஷ்ணமூர்த்தி கேட்டார். என் கட்டுரைகள் பிரசுரமாகுமுன் 'உபய குசலோபரி' என்ற தலைப்பின் கீழ் வாசகர்களுக்கு என்னை நன்றாக அறிமுகப் படுத்தினார். பின்னர் கட்டுரைகள் வெளிவந்தன.

திருவாளர்கள் வ. ரா. சுத்தானந்த பாரதியார், ரசிக மணி டி. கே. சி, நாமக்கல் கவிஞர், பேராசிரியர் சீனிவாச ராகவன் ஆகிய அறிஞர்கள் பெரிதும் பாராட்டினார்கள். 6 மாதம் தொடர்ந்து எழுதச் சொன்னார், 'கல்கி'யில். பின்னர் 1, 2, என்று வருடங்கள் எழுதச்சொன்னார். மீண்டும் வேறு மாதிரி எழுதுங்கள் என்றார், 'கல்கி'.

ஆசனங்களைப்பற்றி எழுத விஷயங்கள் ஏராளமாய்ப்ப டிக்கவேண்டும். எண்ணற்ற நேயர்கள் தினம் தினம் எழுதிக் குவிக்கும் நூற்றுக்கணக்கான கடிதங்கள் எங்களை ஊக்குவித்தன. வந்த கடிதங்களுக்குப் போதிய பதில், ஆலோசனை, சிகிச்சை இவைகளை எழுதினோம். நேரில் பல நோயாளிகள் வருவார்கள். காலை 7 முதல் 10 மணி வரை யோகாசன வகுப்புகள் வீட்டிலேயே நடக்கும். நாளாக நாளாக வியாபார வேலைகள் தேங்கிவிட்டன. பின்னர் திரு. 'கல்கி' அவர்களின் யோசனைப்படி ஒரு திட்டமிட்டு யோகாசனப்

பிரசார அபிவிருத்தி வேலைகளைச் செய்து வந்தோம். இதற்காக ஒரு தனிக் காரியாலயம் ஏற்படுத்தினேன்.

வரும் கடிதங்களுக்குப் பதில் எழுதவும், யோக சிகிச்சைகளை அறிவிக்கவும் ஏற்பாடு செய்தேன். ஆசன சிகிட்சை வேண்டுபவர்களின் நோயை அறிய விண்ணப்பம் ஒன்று அச்சிட்டு வழங்கினேன். சிகிச்சை வேண்டும் அன்பர்கள் இந்த பாரத்தை பூர்த்தி செய்து அனுப்பினால் சிகிட்சை முறையும், பத்திய முறைகளும் ஆறு வாரங்களுக்கு அனுப்புவேன். யோக சிகிட்சை பெறும் அன்பர்கள் ஆசன முறையைத் தெரியச் செய்ய சித்திர ரூபமாக விளக்கி 'ஆர்ட்' காகிதத்தில் சார்ட்களை அச்சிட்டேன். இது சம்பந்தமான துண்டு பிரசுரங்களையும் அச்சிட்டு வினியோகித்தேன்.

திரு. 'கல்கி'யின் தொடர்பு ஒரு என்னை எழுத்தாளனாக்கிற்று. சாதாரணப் பிரசாரகனாக இருந்த என்னை யோகாசன ஆசிரியனாக்கிவிட்டது. பொதுவாக யோகாசனப் பயிற்சிக்கு மிகுந்த பொறுப்பு வேண்டும். நோயாளிகளுக்கு சிகிட்சை செய்யும்போது நோயின் தன்மை, உடல் உறுப்புகளின் தாராதரம், இதுவரை உட்கொண்ட மருந்துகளின் தன்மை, தற்போது நோயாளியின் நிலை இவைகளை வைத்துத்தான் சிகிட்சை அளிக்கவேண்டும். இதன் அடிப்படையில் இதுவரை நான் பல பயிற்சிகளைக்கூறி, பலரின் நீடித்த தீராத நோய்களைத் தீர்த்து வைத்திருக்கிறேன், ஆசன உதவியால். இங்ஙனம் குணமாக்கப்பட்ட எண்ணற்ற நேயர்களின் கடிதங்கள் குவிந்தன; அவர்களில் பல்லோர் ஆசனங்களும், குணமாக்கப்படும் நோய்களும்,

சிகிச்சை முறைகளும் கொண்ட இந்தக் கட்டுரைகளைப் புத்தகமாக வெளியிட வலியுறுத்தினர்; அதன் விளைவுதான் "ஆரோக்கிய ரகஸ்யம்". இதை திரு "கல்கி"யும் வெகுவாக ஆதரித்தார்.

"ஆரோக்கிய ரகஸியத்தில்" ஒவ்வொரு ஆசனமும் செய்யவேண்டிய விதங்களைப் படிப்படியாய் ஆரம்பத்திலிருந்து முடிவுவரை தெளிவாக சித்திரங்களின் மூலம் வெளியிடப்பட்டிருக்கிறது. மேற்படி நூலில் ஒரே சித்திரங்கள் இரண்டு மூன்று இடங்களில் வருகின்றன. உதாரணமாக ஹலாசன ஆரம்ப நிலை சித்திரங்களே சர்வாங்காசனத்திலும் வருகின்றன. ஆசனம் பழகுகிறவர்களுக்கு சௌகரியமாய் இருக்கும் பொருட்டு, பக்கங்களிலேயே சித்திரங்கள் மறுமுறையும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. இவ்வாறே மற்றும் சில இடங்களிலும் வருகின்றன. ஒவ்வொரு ஆசனங்களைப்பற்றி விளக்கும்போதும், அதனால் தீரும் நோய்களை விளக்கும்போதும், தீருகின்ற விதத்தை தெளிவாக்கும்போதும் உடலுறுப்புகளின் வேலைகளைப் பற்றியும் சொல்லவேண்டி இருக்கின்றன. இதற்காகவே ஏற்கனவே வந்த ஆசனங்கள் மீண்டும் விளக்கப்படுகின்றன. 'கல்கி'யில் ஆரோக்கிய ரகஸியக் கட்டுரைகள் வந்தபோது, நேயர்களுக்கு எழுந்த சந்தேகங்களுக்கும் பதில் தரப்பட்டிருக்கின்றன. உயர்ந்த காகிதத்தில் சிறந்தமுறையில் இதனை அச்சிட்டதின் நோக்கம் ஒவ்வொரு வீடுகளிலும் வாசக சாலைகளிலும் நீடித்து இருக்கவேண்டும் என்ற உபயோகமான ஏற்பாட்டின் கீழ் இதனைச் செய்தோம். இது எல்லோர் வீட்டிலும் இருக்கவேண்டிய ஆரோக்கிய பொக்கிஷமாகும். உடலை நோய்களின்றும் காப்பாற்றிக்கொள்ள

வும், பிணிகள் பின்பற்ருதிருக்கவும், துன்பம் தொடராதிருக் கவும் எழுந்த "ஆரோக்கிய ரகசியம்" என்னும் அரும் நூலை ஆதரிப்பார்கள் என்று நம்புகிருேம்.

இதனை வெளிக்கொண்டுவர உதவிய திரு. 'கல்கி' அவர்களுக்கும், ஆசி அளித்த சுவாமி சுத்தானந்த பாரதி யவர்களுக்கும், பாராட்டி மதிப்புரை தந்த சகல பத்திராதி பர்களுக்கும், ஆதரிக்கக் கடமைப்பட்டுள்ள அத்தனை நண் பர்களுக்கும் எனது நன்றி கலந்த வணக்கம்.

என் வாழ்க்கைத் துணைவி, உண்மையில் என் வாழ்க் கைக்கு துணைவியாகவே இருப்பது குறிப்பிடத்தக்கது. சகல காரியானுகூலங்களுக்கும் கரங் கொடுத்துதவும் அவள், எனது பல காரியங்களில் எனக்கு உதவுவது போலவே கட்டுரைகள் எழுதுவதிலும், புத்தகங்கள் வெளி யிடுவதிலும் பெரிதும் உதவி வந்தாள் என்பதைச் சொல்லா மல் இருக்க முடியவில்லை. (என் மனைவி இவைகளை இதில் எதற்காகக் குறிப்பிடுகிறீர்கள்? புருஷனுக்கு உதவி செய் வது மனைவியின் கடமை அல்லவா? எழுதவேண்டாம் என்று சொல்லுகிருள்) எனினும் எனக்கு வாய்த்த இல்லாளின் உதவியைப்பற்றி சொல்லாமல் இருக்க முடியவில்லை. அப் போதுதான் எனக்கு மனத்திருப்தி ஏற்படுகிறது," இதுவே அந்த முகவுரையின் சாரம்.

## திரு. சுந்தரத்தின் தாக்குதல்!

யோகாசனம் பற்றி "கல்கி"யில் தொடர்ந்து திரு வி. என். கே. எழுதத் துவங்கியதும் ஸ்ரீ சுந்தரம் அவர்கள் தனது "சுந்தரோதயம்" என்ற பத்திரிகையில் கன்று

பின்னு வென்றும், கத்துக்குட்டி என்றும், தனக்குத் தெரிந்த அத்தனையும் எழுதத் தொடங்கிவிட்டார். இருக்கும் நண்பர்களில் திரு வி. என். கே. யிடம் பெரும் அளவிற்கு நன்மை யடைந்தவர் ஸ்ரீ சுந்தரம் அவர்களே. அவரும் அவருடைய பரிவாரமும் சொந்தங் கொண்டு எங்கள் வீட்டில் சகல சுதந்தரத்துடன் உண்டு, உளமகிழ்ந்து, உதவி பெற்றவர்கள் போல் வேறு எவரும் இரார். ஸ்ரீ சுந்தரம் அவர்கள் இங்கு வந்துவிட்டுப் போகும்போதெல்லாம் எங்கள் வீடு கல்யாண வீடு மாதிரியே இருக்கும். அவ்வளவு உரிமை படைத்திருந்தார்.

"ஏம்மா? குமாரசாமி இந்த ஆசனங்களைக் கட்டி அழ வேண்டும்? அவருக்கு மேற்கொண்டு செல்லச் சொல்லக் கூடாதா? அவருடைய பக்குவ நிலை எனக்குத் தெரியுமே; என்னிடம் உபதேசம் வாங்கமாட்டேன் என்கிறாரே" என்பார். நான் சிரித்துக்கொண்டு சும்மா இருந்து விடுவேன். இதை திரு. குமாரசாமி அவர்களிடம் சொன்னால் "போகட்டும்; அதற்கும் காலம் வரும்; ஆனால் எனக்கென்னமோ இவரிடம் உபதேசம் பெறக்கூடிய அளவிற்கு வித்தை இருப்பதாகத் தெரியவில்லை. அவ்வளவு உயர்ந்த நிலையில் இருந்தால் தன்னைப் பற்றியும் மற்றவர்களைப் பற்றியும் இவ்வளவு சாதாரணமாகப் பேசமாட்டார்; அந்த நிலை வேறு. எண்ணமே வேறு; உனக்குத் தெரியாது சும்மா இரு" என்பார்.

ஸ்ரீ சுந்தரம் அவர்கள் "ஆனந்த விகடனில்" ஆனந்த ரகசியக் கட்டுரைகளை எழுதிவந்தார். அதை புத்தகமாக்க ஸ்ரீ வி. என். கே. யிடம் உதவி கோரினார். நல்ல காரியத்

திற்குச் சிறிதும் மனம் கோணாமல் உதவி எனக்கொடுத்தார். பின் சிறிது சிறிதாகத் திருப்பிக் கொடுத்துவிட்டார் ஸ்ரீ சுந்தரம் அவர்கள்.

இவ்வளவு நெருங்கி இரண்டறப் பழகிய திரு. சுந்தரம் அவர்களுக்கு அனுவசியமாகத் தாக்க எங்ஙனம் மனம் துணிந்ததோ! அது இறைவனுக்கே வெளிச்சம்!

இங்ஙனம் அளவுக்குமீறி ஸ்ரீ சுந்தரம் அவர்கள் தாக்குவதைக் கண்ட திரு. வி. என். கே. சொல்லுவார், எல்லோரையும்விட அதிக உதவி பெற்றவர், அவ்வளவு கூடவா திட்ட சொந்தமில்லை? எவ்வளவு திட்டினாலும் சரி, அத்தனையும் நமக்கு ஆசீர்வாதம்" என்று.

## இன்னா செய்தாரை ஒறுத்தல்..?

ஒரு நாள் திரு. சுந்தரம் அவர்கள் சென்னை வருவதாகவும், புகைவண்டி நிலையத்தில் சந்திக்கவேண்டும் எனவும் பெங்களூரிலிருந்து கடிதம்வந்தது. நானும் என் கணவரும் சென்றோம், புகைவண்டி நிலயத்திற்கு. எனக்கு, உதைக்கும் காலுக்கு முத்தமா? என்ற கேள்வி எழுந்தான் செய்தது. எனினும் அழைக்கும்போது? ஸ்டேஷனில் சிஷ்ய கோடிகள் பாதம் பணிந்து விழுந்தனர். பிறகு எங்கள் வீட்டுக்கு வந்தோம், எங்கள் காரிலேயே. வீட்டுக்கு வந்த பின் என்னால் சும்மா இருக்க முடியவில்லை. கேட்டுவிட வேண்டும் என்று துடித்தேன். அவரிடம் சொன்னால் தடுத்து விடுவார் என்று முன்னறிவிப்பின்றி, ஸ்ரீ வி.என்.கே. யும் ஸ்ரீ சுந்தரமும் பேசிக்கொண்டிருக்கும்போது நடுவில் "எங்கள் மீது என்ன குற்றம் கண்டீர்கள் உங்கள் பத்திரிகையில்

கண்டபடி தாக்குவதற்கு?" இப்படிக் கேட்டுவிட்டேன்.

ஸ்ரீ சுந்தரத்திற்கு முகம் மாறுப்பட்டது. "தவறு கண்டேன் தாக்குகிறேன்" என்றார். மேலும் "நீங்கள் எழுதும் போது என்னிடம் கேட்காதது தவறு. ஹலாசனம், அர்த்த மத்ஸ்யேந்திராஸனம் இவைகளைப்பற்றி எழுதியது, தவறான புகைப்படம் போட்டது இவைகள் தவறு" என்றார். கையெழுத்துப் பிரதியை எடுத்துத்துக்காட்டினேன். "கல்கியில் எழுத்துப் பிழை வார்த்தைப் பிழை ஏற்பட்டிருக்கிறது. இதற்கு நாங்கள் பொறுப்பாளிகளா? 'அர்த்த மத்ஸயேந்திராஸனத்தில் புட்டத்தின் கீழ் காலை வைக்காமல் வெளியில் வைத்துச் சொகுசாகச் செய்திருக்கிறார்' என்று எழுதினீர்களே, இதோ இந்தப் படத்தைப் பாருங்கள். கால் வெளியில் இருப்பதும் உள்ளே இருப்பதும் தெரியுமே. சிறு குழந்தை சொல்லுமே. இம்மாதிரி ஏமாற்று வித்தை நாங்கள் செய்யவேண்டிய அவசியம் இல்லையே. படத்தில், எழுத்தில் குறைகண்டால், நீங்கள் நேரில் எழுதித்திருத்தலாமே! அவ்வளவு உரிமை இல்லையா உங்களுக்கு?" என்றேன்.

அதற்கு ஸ்ரீ சுந்தரம் நேரடியாக பதில் சொல்லாமல் மழுப்பினார். திரு. வி. என். கே. சிரித்தாரே தவிர எதிலுமே பட்டுக்கொள்ளவில்லை.

பின்னர் மெதுவாக சுந்தரம் அவர்கள் அச்சகம்வைக்க ரூ. 5000 தேவை என்று ஸ்ரீ வி. என். கே. யிடம் கேட்டார். சாதாரணமாக இருந்தால் என்னிடமே கேட்டிருப்பார். இந்த நிலையில் என்னிடம் வாயே திறக்கவில்லை. மறுநாள்

என் கணவர் மேற்படி ரூ. 5000. விஷயத்தை என்னிடம் சொன்னார்.

"நீங்கள் ஸ்ரீ சுந்தரத்திற்கு ரூ. 5000 தரப் போகிறீர்களா?"

"ஆம்! கடன் வாங்கியாவது . . .!"

"கடன் வாங்கிக் கடன்தர அத்தனை அவசியம் என்ன வந்தது?"

"ஆசன பிரசாரம் முக்கிய மானதல்லவா?"

"நாக்கூசாது நம்மைத்திட்டியவருக்கு நாம் உதவுவது நலமா? நான் சம்மதிக்கவே மாட்டேன்."

"சாதாரணப் பெண்களுக்கும் உனக்கும் வேறுபாடென்ன? நீ இப்படிப்பேசுவது எனக்கொன்றுமே பிடிக்கவில்லை. நான் தரத்தான் போகிறேன்.

"நாளைக்கடன்காரர்கள் நம்மைத்தானே கேட்பார்கள்! நன்றி உள்ளவர்களுக்குச் செய்தாலும் நன்றாக இருக்குமல்லவா?

செய்தாரை ஒறுத்தல் அவர் நாண

நன்னயம் செய்து விடல்" தானே! தீங்கு செய்தவர்களுக்கு நன்மைசெய்து, அவர்களே தமது தவறை உணரச் செய்வதுதான் வள்ளுவன் கண்ட மனிதப்பண்பு!

"நன்மையும் செய்யவேண்டாம் தீமையும் செய்ய வேண்டாம்; சும்மா இருப்பதே சுகம். நீங்கள் இந்தக் காலத்து ஆளே இல்லை; திரேதாயுகத்தில் இருக்கவேண்டியவர்.

"ஆம்! அப்படித்தான் வைத்துக்கொள்ளேன்; நான் ஒரு பழைய மனிதன்; நாட்டுப் புறத்தான்; பட்டிக்காட்டான்தான்."

நாங்கள் இப்படி காரசாரமாக எந்த விஷயத்திலும் இம்மாதிரி பேசிக்கொண்டதில்லை; பின்னர் ரூ. 5000 வாங்கித் தந்தார். மெஷினையும் வாங்கி அனுப்ப ஏற்பாடு செய்திருந்தார். ஸ்ரீ சுந்தரம் பெங்களூர் சென்றார். பின்னரும் அவர் தாக்குதலை நிறுத்தவில்லை. "சுந்தரோதயத்தில்" சகல அம்சங்களில் எங்களைப் பற்றிய துவேஷம் நிரம்பி இருக்கும். உபகாரம் செய்யும் விஷயத்தில் நான் என் கணவருடன் தர்க்கம் செய்தது ஸ்ரீ சுந்தரம் சம்பந்தப்பட்டவரைதான். பின்னும் ஸ்ரீ சுந்தரம் வழக்கப்படி எங்களைத் தாக்கி எழுதிக் கொண்டே வந்தார். அப்போது நான் கூறுவதுண்டு, "இதோ அவரின் உயர்ந்த குணத்தைக் காட்டுகிறாரே" என்று. வழக்கம்போல் அவ்வளவும் நமக்கு நல்லதுதான் என்பார். இருப்பினும் விஷயம் விபரீதமாக அளவுக்கு மீறி சென்றுகொண்டிருந்தது. பணத்தை திருப்பிக்கேட்கும் அளவுக்கு திரு வி. என். கே. வருத்தமடைந்தார். இதற்கு சில நண்பர்களின் தூண்டுகோலும் தேவைப்பட்டது. 1953-ம் ஆண்டுடன் கடன் சிறிது சிறிதாக திருப்பித் தரப்பட்டது.

## ஸ்ரீ சுந்தரத்தைப் பற்றி "கல்கி"

இதற்கிடையில் எங்களுக்குப் பல கடிதங்கள் வந்தன, ஸ்ரீ சுந்தரம் அவர்களிடமிருந்து. நீங்கள் "கல்கி"யில் எழுதுவதை நிறுத்திவிடவேண்டும். உங்களின் கட்டுரைகளி

ஞல் எனது "ஆனந்த ரகசிய"ப் புத்தகம் பாதிக்கிறது. ஏழை நான்; இதனுல் பிழைக்கிறவன். நீங்கள் லட்சப் பிரபு. மனது வைத்தால் இதனுல் கிடைக்கும் சிறு புகழை யும் வருவாயையும் தியாகம் செய்யலாம் என்ற பொருள் பட பல கடிதங்கள் எழுதினுர். மற்றும் ஆனந்த ரகஸியத் தைக் காப்பி அடிப்பதாகவும் அதனுல் புத்தக உரிமையே பறிபோகிறதென்றும் எழுதினுர்.

இந்த விஷயங்கள் "கல்கி" அவர்களுக்கும் தெரியும். அவருக்கு ஸ்ரீ சுந்தரம் சம்பந்தப்பட்டது என்ருல் அறவே பிடிக்காது. "துவேஷக்காரன்; நன்றி இல்லாதவன்" என் பார். "நான் தான் முதலில் ஆனந்த விகடனில் எழுதச் சொன்னேன். அவர் எழுதும் தமிழ் நடை பார்க்க சகிக் காது. நாங்கள் திருத்தித் திருத்தி போடுவோம். ஸ்ரீ வாச னிடம் நான் அவருக்காக எவ்வளவோ சிபார்ஸ் செய்திருக் கிறேன். அவர் 'விகடனில்' தொடர்ந்து எழுதும்போது காரி யாலயத்திற்கு அவருடைய கட்டுரையைப் பாராட்டி ஒரு கடிதம்கூட வராது. உங்கள் கட்டுரைகளைப் பாராட்டி எத்தனை கடிதங்கள் வருகின்றன. அரியக்குடி பெரிய வித்வான். அவருடைய சிஷ்யர் G. N. B. யும் நன்ருகத் தான் பாடுகிருர். நீ கச்சேரியை நிறுத்திவிடு; என் பெயர் மறைகிறது; என் வருவாய் குறைந்து விடுகிறது என்று யாராவது சொன்னுல் கேட்பார்களா? இது போலத்தான் ஸ்ரீ சுந்தரத்தின் கூற்றும். எனவே நீங்கள் நிறுத்தாது எழுதுங்கள் என்பார்.

ஆசன விஷயமாக ஆலோசனைகள், காரியங்கள் அதிகப்பட்டுவிட்டன. இரவு பகல் என்று பாராமல் எந்த நேரமும் வரத்தொடங்கினர். வீட்டில் எப்போதும் யார்

வரினும் சாப்பாடு தயாராக இருக்கவேண்டும். இல்லை என்ற சொல் இல்லா தொழியவேண்டும். காலையி லிருந்து எல்லா வேலைகளையும் திட்டமிட்டுச் செய்வார். இரவு வேலை முடித்து 12 மணிக்குத்தான் தூங்குவார்.

காலை 3 மணிக்கு அவருடைய படுக்கையில் பார்த்தால் காணமாட்டார். சத்தம் செய்யாமல் ஆபீஸ் அறைக்குச் சென்று எழுதிக்கொண்டிருப்பார். நான் இப்பொழுது நீங்கள் இவ்வளவு வேலை செய்யக்கூடாது என்பேன். அதே சமயம் எவ்வளவு முடியுமோ அவ்வளவு உதவியும் செய்வேன். வியாபாரத்தில், பொது வாழ்வில், ஆசன விஷயங்களில் எல்லாவற்றிலும் எந்தெந்த நேரத்திற்கு எது தேவையோ அதை குறிப்பறிந்து தயாராக வைத்திருப் பேன். எத்தனை கணக்குப் பிள்ளைகளிருப்பினும், நான் செய்தால்தான் அவருக்குத் திருப்தி. சமையலிலும் அங் வாறே. நான் சமையல் செய்தால் பரமதிருப்தியாக சாப் பிடுவார். சாப்பாட்டின் ருசியைப்பற்றி புகழுவார். சற்று சொத்து சுகம் ஏற்பட்டது என்றால் ஒரு வேலையும் செய் யாமல் எல்லாம் மற்றவர்கள் செய்ய இவர்கள் சுகிப்பார் கள். ஆனால் இவர் விஷயத்தில் அது நேர்மாறாயிருந் தது. தொழிலாளர் மறுக்காது வேலை செய்வதற்கு இத் தனை மணி என்று ஒரு குறிப்பிட்ட நேரமுண்டு. நாங்கள் தொழிலாளர்களைவிட பன்மடங்கு வேலை செய்வோம். உழைப்பில் சிறிதும் சளைக்கமாட்டார்.

அவ்வளவு வேலையிருந்தாலும் ஹாஸ்யமாய் பேசிக் கொண்டேயிருப்பார். அந்த ஹாஸ்யத்திலும் பல நுணுக் கங்கள் இருக்கும். கேலியாகவும் இருக்கும். திருந்து வதற்காகவும் இருக்கும். கோபத்தைக் காட்டுவதாகவும்,

னையாண்டி செய்வதாகவும் இருக்கும். அக்குறியை நான் ஒருவள்தான் அறிந்துகொள்வேன். மற்ற யாரும் உண்மை அர்த்தத்தைப் புரிந்துகொள்ளமாட்டார்கள். சிரித்துவிட்டு சும்மா இருப்பார்கள்.

அவருக்குத் தெரிந்த விஷயங்களெல்லாம் எனக்கும் தெரியவேண்டும் என்பது அவருடைய விருப்பம். சில சமயம் எனக்கு விருப்பமில்லாவிடினும் கட்டாயப்படுத்தி கேட்கச் செய்வார். சற்று அசட்டையாய் இருந்தால் அவர் கேள்விகளை இடையில் கேட்பார். நான் விழிப்பேன்; பிறகு கடிந்துகொள்வார். சிறு பிள்ளையைப்போல எல்லா விஷயமும் ஒப்பிப்பார். நானும் அம்மாதிரியே நடந்துகொள்ள வேண்டுமென்று எதிர்பார்ப்பார். அவ்வாறே நடந்துக்கொள்வேன். எங்களுக்குள் எந்த விஷயமும் மர்மமாய் இருந்தது கிடையாது. அவருடைய மனதிலுள்ளதை நான் அறிந்து கொள்வேன். என் மனதிலுள்ளதை அவர் அறிந்துக்கொள்வார். அவர் நினைப்பதை நான் அவ்வாறே சொல்லுவேன். நான் நினைப்பதை அவ்வாறே சொல்லுவார். இதை மனோதத்துவம் உணர்ந்தோரே நன்கு அறிவார். நினைப்பின் அலைகள் மோதலின் உணர்ச்சியால் அவ்வாறு ஏற்படுகிறது என்பதை. அவர் என்னைப் பூரணமாய் நேசிப்பார். நானும் அவ்வாறே. எங்களுக்குள் தனது, சொந்தம் என்னும் பொருள்களே கிடையாது. நானே அவர் சிருஷ்டி. அவர் என்னை எவ்விதமாய் இருக்க வேண்டுமென்று விரும்பினாரோ அதற்கு என்னைத் தயாராக்கிக்கொண்டேன். அதேபோல நான் என் புருஷன் எவ்வாறு இருக்கவேண்டுமென்று விரும்பினேனோ அவ்வாறே அமைந்துவிட்டார். "நீ அதிகம் வேலை செய்தால் உன் உடம்

பிறகு ஆகாது, என்ன இருந்தாலும் பெண் தானே. சற்று இளைப்பாறு போ" என்று சொல்லுவார். ஆனால் நான் அதைச் சொன்னால் ஏற்கமாட்டார். நான் ஆண் சிங்கம் இன்னமும் எவ்வளவு கஷ்டமானாலும் சகிப்பேன் என்பார்.

## எளிய சுபாவம்

ஆசனங்கள் செய்யத் துவங்கியபின் அவருக்கு உற்சாகம், ஊக்கம், ஆரோக்கியம், ஆற்றல், எல்லாம் ஆச்சரியப்படும்படி பெருகின. சிறுபிள்ளைகளைப்போல எப்பொழுதும் சுறுசுறுப்பாக இருப்பார். அவரால் ஒரு நிமிடமும் சும்மா இருக்க முடியாது. அவ்வாறு ஐந்து நிமிடங்கள் ஓரிடத்தில் உட்கார்ந்து விட்டாரானால் தூக்கம் வந்து விடும். சங்கீத கச்சேரிகளில் கூட தூங்கிவிடுவார். சங்கீதம் என்றால் மிகவும் பிரியம் தான். ஆனால் அவரால் வெறுமனே உட்கார்ந்திருக்க முடியாது.

சுத்தத்தில் அவரை மிஞ்ச யாராலும் முடியாது. எடுத்ததற்கெல்லாம் சுத்தத்தைப் பார்ப்பார். இத்தனை வேலைகள் பெருகியும் அவர் தன் துணிகளைத் தானே துவைப்பார். உலர்த்துவதும் எடுத்து மடித்து வைப்பதும் அவரே. நான் செய்தால் கூட பிடிக்காது. வேலைக்காரர்கள் அவர் துணிகளைத் தொடவும் கூடாது. சுத்தமாகத் துவைத்து, அலுங்காமல் மடித்து வைப்பார். எதற்கும் ஒரு கணக்குண்டு. வண்ணானுக்கு போய்வந்த வேஷ்டி துண்டுகளை எடுத்தால் 2நாள் துவைத்து, மூன்றாவது நாள் சலவைக்குப்போடுவார். அங்கவஸ்திரங்களை 3 நாள் உபயோகித்து சலவைக்குப்போடுவார். அதிலும் முன்பு வந்தது, பின்பு வந்தது என்று அடுக்கி

வைப்பார். சற்று கிழிந்த துணிகளை ஊட்டி, கொடைக் கானலில் போயிருக்கும்போது ஸ்வெட்டருக்கு அடியில் போடுவதற்காக எடுத்துவைத்து விடுவார். அவருடைய பூணூலுக்கு வேண்டிய கதர் நூல் மட்டும் நூற்று கொடுத்து விடுவேன். சுத்த வெள்ளை கதர் தவிர வேறு எதுவும் தொட மாட்டார்.

1920ஆம் ஆண்டிலிருந்து எங்கும் சைக்கிளில் போவார். 1932-ம் ஆண்டில் மாட்டு வண்டி வாங்கினர். 1936-ல் இரட்டைமாட்டு வண்டியாயிற்று. 1945-ம் ஆண்டு கார் வாங்கினர். ஏதோ ஒரு சமயம் கார் ரிப்பேர் என்றல் சைக் கிளிலேயே கிளம்பிவிடுவார். இல்லையானல் பஸ்ஸில் போவார். ஒரு மைல் இரண்டு மைலானல் நடந்தேபோய் விடுவார். ஏன் ஒரு வண்டி வைத்துக்கொண்டால் என்ன என்றல், "இப்பொழுதெல்லாம் எனக்கு உடல் உழைப்பு இல்லை. இதுவும் ஒரு பயிற்சிதானே" என்பார். ஆனல் போகும் வழியில் எதிரில் தென்பட்ட பிச்சைக்காரர்கள் ஒருவரைத் தவருமல் பிச்சையிட்டுக்கொண்டே செல்வார்.

பஸ்ஸில், டிராமில் போய் வந்தால் டிக்கட்டுகளை பத்திர மாகக் கொண்டுவருவார். ஏதாவது துண்டுகடிதம் வேண்டு மானல் அதை உபயோகிப்பார். ஒரு பக்கம் எழுதிய கடிதம் அல்லது ஒரு சிறு காகிதத் துண்டையும் வீணக்கமாட்டார். பத்திரமாய் எடுத்துவைத்து அதை சமயம்போல் உபயோகிப் பார். ஒரு சிறு நூல் துண்டுகூட கீழே விழுந்து இருக் கக் கூடாது. அதை பொறுக்கி எடுத்து எங்கு சேர்க்க வேண்டுமோ சேர்ப்பார். ஒரு சிறு பண்டமும் வீணக்கக் கூடாது. ஒரு தடவைசொல்லுவார். மறுமுறையும் அவ்வாறு

செய்தால் கோபப்படுவார். "இந்த விஷயம் ஒன்றில்தான் நான் மகாத்மா காந்தியின் சரியான சிஷ்யன்" என்று தன்னைப்பற்றியே கேலியாகச் சொல்லிக்கொள்வார்.

அரசியல், ஆசுனை, ஆரிய சமாஜ உலகில் அருமையான சிநேகிதர்கள் பலர் இந்தியா பூராவிலும் உண்டு. எங்கு சென்றாலும் அவருக்கு உளங்கனிந்த அன்பு உபசாரம் நடக்கும். இவரும் அவர்களிடம் அவ்வாறே பழகுவார். ஒருதடவை ஒருவர் அறிமுகமானால் அவரை மறக்கவேமுடியாதபடி வசீகரித்து விடுவார். தன் எளிமையான நடையிலேயே ஒரு கவர்ச்சியை உண்டாக்கிவிடுவார். பின் அவர்களின் சொந்த சுக துக்கங்களை இவரிடம் சொல்லாமல் இருக்கமாட்டார்கள். யாருக்கும் தன்னால் இயன்ற உதவி செய்யாமல் இருந்ததும் கிடையாது.

## தாராள சிந்தை

பாரதியாருக்கு மண்டபம் கட்டி பெருமை கொண்டோம் இப்பொழுது. ஆனால் பாரதியார் இறந்தபின் அந்தக்காலத்திலேயே அவருடைய மனைவியை நினைத்து வருந்தினார். 1933ஆம் ஆண்டு என்றே நினைக்கிறேன். பாவம் பாரதியார் அருமையான கவிகளை தேசத்திற்காக பாடினார். அதனால் பலவித கஷ்டங்கள் அடைந்தார். அவர் இறந்த பின் அவர் மனைவி என்செய்வார் என்று உருகினார். பாரதியாரின் மனைவி ஸ்ரீமதி. செல்லம்மாள் அவர்களுக்கு தன் சிறு பண உதவியை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று ஒரு சிறு கடிதமுடன், மாதா மாதம் தவறாமல் ஒரு தொகையை அனுப்பி வந்தார்.

சத்தியாக்கிரகம் செய்துசிறைசென்ற தேசபக்த குடும் பங்களுக்கு இவரே வலிய செலவிற்கு மாதாமாதம் தொகையோ, அல்லது அரிசி மூட்டைகளையோ அனுப்பிவிடு வார். மற்றும் பலர் வயோதிக நிலை அடைந்து விட்டனர் என்று அவர்களுக்கு மாதாமாதம் இயன்றளவு உதவுவார். இவர்களெல்லாம் யார் யார் என்பது சொல்லுவது சரி அல்ல.

தன் சகோதரர் தன்னை சிறுவயதில் உதாசீனம் செய் ததையும் மறந்து, எங்கள் கல்யாணத்தின்போது கூப்பிட் டார். நாங்கள் மதுரைக்குச் சென்றால் அவர்கள் வலியவந்து எங்களை அழைப்பார்கள். இவர் போக இசையமாட்டார். பின் "போனது போகட்டும்" என்று சமாதானப் படுத்து வேன். தமையனார் தம்பியுடன் பேசக் கூச்சப்படுவார். என் னஇருப்பினும் குற்றமுள்ள நெஞ்சுதானே! அண்ணியார் மட்டும் தாராளமாய்ப் பேசுவார். எனினும் "பணம் வந்த பின்தானே இந்த உறவு எல்லாம்" என்பார். நாங்கள் அவ்வப்போது உதவுவோம். பின் அவர் தமையனார் வேலை செய்யமுடியாமல் படுத்த படுக்கையாய் விட்டார். மாதம் அவருக்கும் அனுப்பிவந்தார்.

அவர் எழுத்து உலகுக்கு அறிமுகமாகி முதல் முதலாக கல்கியில் இருந்து வந்த தொகையில் ரூ. 100யும் அப்படியே தமிழ் எழுத்தாளர்கள் சங்கத்திற்கு நன்கொடையாகக் கொடுத்தார், பல உத்தம எழுத்தாளர்கள் வறுமையில் கஷ்டப்படும்போது இவரே உதவிகளை உவந்து அளிப்பார்.

எழுத்தாளர் தந்தை ஸ்ரீ வ. ரா. இவருக்கு மிகவும் பிடித்தமானவர். மணிக்கணக்கில் இருவரும் நாட்டின்,

நடப்பு, சீர்திருத்தங்கள், முதலியவைகளைப்பற்றி பேசுவார்கள். அவர் சொல்லும் கருத்தும் தன் கருத்தும் ஒன்ருய் இருப்பது அவருக்கு மிகவும் சந்தோஷம். தேசியவாதிகளில், அதிலும் எழுத்தாளர்களில் நேர்மையாளர் என்று சொல்லுவார். அவருக்கு மணி விழா நடந்தது. அதைக் கொண்டு ஒரு வீட்டை வாங்கினுர். பின் அவர் தினசரி வாழ்க்கையை எப்படி நடத்துவது? கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தார். கார் விபத்தில் கால் ஒடிந்தது. அச்சமயம் பலர்வந்து அவருக்கு ஆறுதல்சொன்னுர்கள். ஆறுதல்மட்டும் சொன்னுல் ஆறிவிடுமா? செலவிற்கு என்னசெய்வார். திரு. வி. என். கே. மிக பயந்துக்கொண்டு சிறு உதவியை அளித்தார். எங்கு தன்னைத் தப்பாக நினைத்துக் கொள்வாரோ என்பது இவருக்குப் பயம். என்னிடம்தான் அதைக் கொடுத்தனுப்பினுர். ஒருவாராய் எழுந்து நடக்கத் துவங்கினுர்.

ஒரு நாள் நாங்கள் சென்றிருக்கும் போதும் எனக்கு வீட்டின்பேரில் கொஞ்சம் பணம்வேண்டும். எங்காவது வைத்து வாங்கித்தருவீர்களா?" என்ருர். யோசித்துசொல்லுகிரேம் என்று சொல்லி வந்து விட்டோம். அவர் "இந்த வீட்டை வைத்து மார்வாடியிடம் வாங்கித்தருவது அவருடைய மதிப்பிற்கு அவ்வளவு நல்லதல்ல; நாளை வீட்டையே இழக்க வேண்டியதாய்விடும். நாமே வேண்டுமானுல் கடனுக மார்வாடியிடம் வாங்கிக் கொடுப்போம்" என்ருர். நானும் ஆமோதித்தேன். பின் இரண்டு தடவையாக ரூ. 3500 யை பெரிய பிள்ளை ஸ்ரீதரன் வசமே கொடுத்தனுப்பினுர். ஷை தொகையை வாங்கிக்கொண்டதாக திரு வ. ரா. அவர் கைப்பட எழுதித்தந்த கடிதம் தவிர வேறு

பிராமிசேரி நோட்டு எழுதவும் கிடையாது. நாங்கள் குற்று லத்தில் இருக்கும் போது ரேடியோவில் அவர் இறந்த செய்தி கேட்டோம். அன்று நாங்கள் அடைந்த துன்பத் திற்கு அளவே இல்லை.

பின் சென்னைவந்து துக்கம் விசாரித்தோம். அடிக் கடிசென்று திருமதி வ. ரா. விற்கு ஆறுதல் சொல்லுவோம். ஆனால் பணத்தைப்பற்றி கேட்க மனம் வரவில்லை. ஒரு வருடம் கழித்து மெதுவாக நானே பிரஸ்தாபித்தேன். மணிக்கொடி ஸ்ரீனிவாசன்தான் இதற்கெல்லாம் பதில் சொல்லுவார். அவர் வ. ரா. நினைவு கமிட்டியின் தலைவர் என்றனர். அவரும் " தருகிறேன். ஏற்பாடு செய்கிறேன் " என்று சொல்லி வந்தார். இப்பொழுது கொடுத்தவரும் மறைந்து விட்டார். திரு வி. என். கே. பட்டிருக்கும் கட லுக்கு எவ்வாறு நாங்கள் ஜவாப்தாரியோ, அம்மாதிரி அந்த அம்மையாரும் கடமைப்பட்டிருக்கிறார். அவர் தம் வார்த்தைகளை நிறைவேற்றுவார் என நம்புகிறேன்.

## மூக்குத்தூள் வியாபாரம்

பல பள்ளிக்கூடங்கள், ஹரிஜன சங்கங்கள் இவைகளின் முன்னேற்றத்திற்காக பெருந்தொகைகளை தந்திருக்கின் றார். இவ்வாறு கொடுப்பதை அறிந்த பொது நல ஊழியர் களின் படையெடுப்பு, பொறுக்க முடியாத அளவிற்குப் பெருகி விட்டது. ஏதோ சக்தி உள்ள வரை கொடுக்கி றோம் என்பதை உணரமாட்டார்கள். எடுத்ததற்கெல்லாம் வரத்தலைப்பட்டுவிட்டனர். விடிந்தால் எத்தனை வித உதவி! இவர்களுக்கு பதில் சொல்லவே சிரமமாய் இருக்கும்.

சகித்தும் கொள்ளுவார். அப்படியும் முடிந்த அளவு செய்வார்.

நூல் சரிவர கிடைக்காது (ரேஷன்) இருந்த காலத்தில் வருமானம் மிகவும் குறைந்துவிட்டது. வேறு வியாபாரம் ஏதாவது செய்தால் நல்லது என்று விரும்பினார். பக்கத்து பங்களாவிலிருந்த ஸ்ரீ E. S. ரெங்கசாமி அவர்களின் மாப்பிள்ளை திரு. ஜெயராம் அவர்கள் மூக்குப்பொடி வியாபாரம் செய்தால் நல்ல லாபம்வரும் என்றார். அதற்கு எல்லோரும் சம்மதித்து துவங்கிவிட்டார்கள். பின் இவருக்கே பிடிக்கவில்லை. பொடிசெய்யும் இடத்திலும் வரமாட்டார். எல்லா பொறுப்பும் சிநேகிதர் என்று நம்பி விட்டிருந்தார். அவர் கடனாகவே கொடுத்து வியாபாரத்தை ஜோராக நடத்தினார். ஒரு நாள் கணக்குப் பார்த்தார் ரூ. 50000 வெளியில் கடனாக நின்றது. மீண்டும் பணம் வேண்டுமென்றார். இவருக்கு இந்த வியாபாரம் செய்வதே அவமானமாய் இருந்தது. இது நமக்குகந்த வியாபாரமல்ல; எப்படியோ துவக்கிவிட்டோம்; என்ன நஷ்டம் ஏற்படினும் நிறுத்திவிடுவதே மேல் என்று நிறுத்திவிட்டார். வருமானம் என்னமோ வருடம் ரூ. 6000. 10,000 என்று வந்தது. ஆனால் வரவேண்டிய பாக்கி வந்தாலல்லவா லாபம் ஆகும். கணக்கில் லாபம் என்றால் " ஏட்டு சுரைக்காய் கறிக்குதவாதகதையாய் ஆய்விட்டது. நாம் கொடுக்க வேண்டியவர்களுக்கு கடன் வாங்கி கொடுக்கவேண்டியதாயிற்று. நஷ்டம் ஏற்பட்டாலும் இவர் மனத் திருப்தி அடைந்தார்.

சாயத்தொழிற்சாலை சொந்தக்காரர்களின் சங்கம் ஒன்றை நிறுவி, அதன் காரியதரிசியாக ஆரம்பமுதல் பாடுபட்டு, பல சகதொழிலாளர்களுக்குசேவைசெய்திருக்கிறார்.

## மாதர் சேவையும் பொழுதுபோக்கும்

காங்கிரஸில் பட்டம் பதவியில் இல்லா விட்டாலும் எல்லாவிதங்களிலும் உதவிசெய்வார். நான் காங்கிரஸ்கூட்டங்களுக்கு அதிகமாய்ப் போவதில்லை. எனக்கு குழந்தைகள், வேலைகள் பெருகிவிட்டன. ஆறு குழந்தைகள், (ஐந்து ஆண்—ஒரு பெண்). வடசென்னையில் மாதர்களுக்கு ஒரு சௌகரியமும் கிடையாது. தொழிலாளர் பிரதேசம். இங்கு மாதர் சங்கம் ஏற்படுத்த ஸ்ரீமதி S. அம்புஜம்மாள், ஸ்ரீமதி ருக்மணி லக்ஷ்மிபதி முதலியோர் அடிக்கடி சொல்லி வந்தனர். அதன்படி எங்கள் இல்லத்திலேயே மாதர் சங்கம் நிறுவி, அதன்பணிகளை வெகு மும்முரமாக செய்யத் தொடங்கினேன். ஆரம்பத்தில் எல்லாவற்றிற்கும் நானே உபாத்தியாயர். பின் உபாத்தியாயர்களை ஒவ்வொருவராக ஏற்படுத்தினேன். இதுசம்பந்தமாக வருடம்தோறும் ஆயிரக் கணக்கில் பணம் செலவாகும். என்னேரமும் வகுப்புகளைப்பற்றி வந்து கேட்பார்கள். இந்தக் காரியங்களுக்ெல்லாம் அவர் பணம் கொடுத்து உதவியதுடன் கூட பணியாட்களையும், இடத்தையும், கொடுத்து ஊக்கத்தையும் அளிப்பார்.

பெண்கள் முன்னேறினல் அன்றி, நாடு முன்னேற்றமடையாது என்ற கொள்கை உள்ளவர். பெண்களை அடிமையாக நடத்தக் கூடாது என்பதில் மிகக் கண்டிப்பானவர். குழந்தை வளர்ப்பது, குடும்பத்தை நடத்துவது எல்லாம் பெண்கள் கையில் இருப்பதால் அவர்களுக்கு சகல அறிவும் அடைய வசதிசெய்து தரவேண்டுமென்பதில் ஆசை உள்ளவர். எந்த ஒரு செய்கையும் வார்த்தை அளவில் இருக்காது. தான் எதைச் செய்கிறாரோ அதைச் சொல்லு

வார். எதை செய்ய முடியாதோ அதைசொல்லமாட்டார். முடியாததைச் சொல்லி பெருமைப்படவும் மாட்டார். வீண் கௌரவம், வீண் படோடோபம், வீண் வார்த்தைகள் என்பது அவர் அகராதியில் கிடையாது.

தான் சிறுவயதில் படிக்க வசதியற்றிருந்ததுபோல் இல்லாமல் தன் குழந்தைகள், வளர்ந்து முதன்மை யாய் தேறி வருவதைப்பார்த்து உளம்பூரிப்பார். குழந்தைக ளுடன், தான் தகப்பனுர் என்ற அதிகார தோரணையில் பழக மாட்டார். சக தோழராகவே பழகுவார். அவர்களுடன் விளையாடுவார். இவருக்குப் பிரியமானது சீட்டாட்டம். கோடைக்கு வெளியூர்களில் சென்றிருக்கும்போது தின மும் விளையாடுவார். குழந்தைகளுக்கும் இவரே கற்றுக் கொடுப்பார். எனக்கும் இவரே கற்றுக்கொடுப்பார். குழந் தைகள் எல்லோரும் தன்னைவிட கெட்டிக்காரர்களாக ஆய்விட்டதைப்பற்றி பெருமைப்படுவார். ஆனல் சென் னைக்கு வந்ததும் எல்லாம் மூட்டையை கட்டி விடுவார். நேரம்தான் ஏது ?

மற்ெருரு விளையாட்டு டிராட்ஸ் என்பது. இருவர் விளையாட நேரும்போது, அதுதான் ஆடுவார். அவர் இரவில் சாப்பிட்டப் பின்பும் வேலைசெய்தால் கண்டிப்பேன். "அப்படியானல் சாப்பிட்டவுடன் என்ன செய்யச் சொ ல்லுகிறுய். சாப்பிட்டதும் தூங்கக் கூடாதே" என்று டிராஸ்ட் விளையாடுவார் என்னுடன். நானும் அவரும் ஒரு மணிநேரமாவது விளையாடிவிட்டுத்தான் பின் படுப்போம்.

அவருக்கு சுதேசியப்பற்று அதிகம். குழந்தைகளுக் குக் கூட மேல் நாட்டு பிஸ்கட் வாங்கமாட்டார். பால்

பவுடர் மற்ற எதுவும் கொடுத்தறியோம்; அதையே அவர் பிரசாரமாகச் சொல்லுவார். மேல்நாட்டு புத்தகங்கள் குழந்தைகளுக்கு நிறைய வாங்கித்தருவார். அவருக்கு ஆங்கிலம் பேசவராதே அன்றி படித்து நன்கு புரிந்துக்கொள்வார். அல்லது நான் படிப்பேன் அவர் கேட்பார். வியாபார, ஆசன சம்பந்தமான ஆங்கில கடிதப்போக்கு வரத்துகளை நடத்துவார். குழந்தைகளுக்கு விளையாட்டு சாமான்கள் எதையும் அயல்நாட்டு சாமான் வாங்கிதரக்கூடாது. ஆனால் அறிவைவளர்க்க Meccano Set போன்றவைகளையட்டும் என்ன விலையானாலும் வாங்கித் தருவார். குழந்தைகளுக்கு இம்மாதிரி விளையாட்டுச்சாமான் களை வாங்கித் தந்து அறிவு வளர்ப்பதில் அவர் அயல் நாடு உள்நாடு என்றுப் பார்க்கமாட்டார். அவர்கள் அறிவில், பலத்தில், ஒழுக்கத்தில் முன்னேறி வருவதைக்கண்டு பெருமிதம் கொள்வார்.

## நோயற்ற வாழ்வு

குழந்தைகளெல்லோரும் தினசரி காலை ஆசனம் செய்யவேண்டும். தான் ஆசனம் செய்யும்போது அவர்களையும் அழைத்துச் செய்யச் சொல்வார். ஆசனம் கற்க வருபவர்களுக்கும் அவர்களைக்கொண்டே ஆசனம் கற்பிப்பார். அதனால் குழந்தைகளின் உடம்பிற்கு ஒன்றும் வராது. விளையாடி அடிபட்டு மருந்து போடுவது தவிர நோய்வாய்ப்பட்டு மருந்துக்குச் செலவிட்டது என்பது கிடையாது. ஏழுகுழந்தைகள் இருக்கும் வீட்டில் வருடம் ரூ 100 பில் ஆவது கூட கஷ்டம். இதனாலேயே எங்கள் பொதுப்பணிகள் தங்கு தடையின்றி நடைபெற்றன.

எங்கள் வாழ்க்கையில் தோல்வி என்பதே கிடையாது. பின்தங்கியதும் கிடையாது. எடுத்த காரியம் யாவினும் வெற்றி. ஒரு காரியம் செய்யவேண்டுமானல் என்னைக் கலந்தாலோசிக்காமல் செய்யமாட்டார். இருவரும் நன்கு யோசித்தே முடிவிற்கு வருவோம். முடிவிற்கு வந்தபின் இருவரும் சேர்ந்து மும்முரமாக அக்காரியம் நிறைவேற ஒத்துழைப்போம். இதில் யாராவது சிறிது தவறி நடந்தாலும் ஒருவருக்கொருவர் திருத்திக்கொள்வோம். குற்றம் எடுத்துக் காட்டுவதில் யாரும் பின்தாங்க மாட்டோம். அவர் குற்றத்தை கண்டுபிடித்து சொல்லுவதைப்போல, யாருமே சொல்ல முடியாது. யார் இருக்கிருர்கள் இல்லை என்பது இருக்காது. அதே இடத்தில் எடுத்துச் சொல்லி கண்டிப்பார். நானும் நமக்கு நல்லதைத்தானே சொல்லுகிருர்கள் வேறு யார் இவ்வளவு கஷ்டப்பட்டு சொல்லப்போகிருர்கள் என்று நினைத்து திருந்துவேன். எங்களுக்குள் என்ன பேசிக்கொண்டாலும் வித்தியாசமே பாராட்டமாட்டோம். நானும் வெகு லாவகமாக அவர் செய்யும் சில தவறுகளை எடுத்துச்சொல்லுவேன். வெகு சந்தோஷத்துடன் ஏற்றுக் கொண்டு அதன்படி நடப்பார். எங்களுக்குள் ஒருமுடிவு. ஒருவரை ஒருவர் திருத்தவேண்டுமென்பது. இருக்க இருக்க அவருடைய உள்ளம், நினைவு, மிக உயர்வுடையதாக இருப்பதைக்கண்டு நான் பெருமிதம் கொள்வேன். இவ்வளவு பரிசுத்தமான புருஷனை அடைய நான் என்ன புண்ணியம் செய்தேனே என்று பெருமை கொள்வேன்.

பிறர் என்ன நினைப்பார்கள் என்று எப்பொழுதுமே நினைக்கமாட்டார். "நாம் செய்வது நியாயமான காரியமானல் பிறர் நினைப்பதைப்பற்றி நமக்கு அக்கறை ஏன் ?" என்

யார். குழந்தைகளுடன் சரிசமமாக விளையாடுவார். மூத்த மகன் தன்னிலும் வளர்ச்சி அடைந்து வருவதைக்கண்டு பெருமைப்படுவார். ஓட்டம், கையை மடக்கல் முதலிய வைகளைச் செய்து அவர்களுடன் பலத்தைப் பரீட்சிப்பார்.

## அறிஞர்கள் கவிஞர்கள் அறிமுகம்

நான் மாதர்கள் சங்கம் துவக்கியதும், அதில் வாரம் ஒருநாள் பகவத் கீதை வகுப்பு நடத்தினேன், ஆறு மாதம் வரை. பின்னர் பேராசிரியர் ஸ்ரீ A. ஸ்ரீனிவாச ராகவன் (இப்பொழுது தூத்துக்குடி வ. உ. சி. கலாசாலை பிரின்சிபால்) சுமார் இரண்டாண்டுகள் கம்பராமாயண வகுப்பை நடத்தினார். ஆராய்ச்சிமிக்க பெரிய அறிஞர். ஆங்கிலக் கவிதைகளில் வரும் ரசபாவத்தையும், கம்பன் தரும் அதே கட்டங்களையும் விளக்கிக் கூறும் போது, சிந்தனைக்குரிய விஷயமாகவும், ஆராய்ச்சியுடைய தாகவும் இருக்கும். பல அறிவாளிகள் இந்த வகுப்பிற்கு வருவார்கள். இவருடைய சிநேகமும் மதிப்பிற்குரியது. ஸ்ரீ வி. என். கே. "கல்கி"யில் எழுதின கட்டுரைகள் மிக நன்றாய் இருக்கின்றன என்று அடிக்கடி சொல்லுவார், அவர்.

ஆக்கூர் அனந்தாச்சாரி ஓர் சிறந்த நண்பர். அவர் மூலமாக கிடைத்த நண்பர்கள் அநேகர். பழம்பெரும் தேசபக்தர். அவரிடம் கண்டிப்பு உண்டு. நினைத்தது சரியோ தவறோ அதை உடனே கேட்டுவிடுவார். அதனா லேயே சிலருக்கு அவரைக்கண்டால் ஆகாது. தன் உயிர்த் தோழர் ஸ்ரீ கிட்டப்பாவின் ஞாபகார்த்தமாக இலவச சங்கீத, ஹிந்தி பாடசாலை வைத்துப் பல்லாண்டுகளாக

நடத்தி வருகின்றார். இவர் நமது வீட்டில் ஒருவராக பழகி வருவார். இவரும், நாங்களும் வாலாஜாபேட்டை யிலும் சென்னையிலும் பலப் பொதுக்காரியங்கள் செய் திருக்கிறோம்.

நாமக்கல் கவிஞரை 1935-ஆம் ஆண்டில் ஒருநாள் ஸ்ரீ ம. பொ. சி. அழைத்துவந்து அறிமுகப்படுத்தினார், "காந்தி கவிஞர்" என்று. அந்தநாள் முதல் ஸ்ரீ வி. என்.கே. யும் கவிஞர் அவர்களும் ஒருவரை ஒருவர் சந்திக்கும்போது மனதார ஆலிங்கனம் செய்து கொள்வது கண்கொள்ளாக் காட்சியாக இருக்கும். அவ்வளவுநேசம். கவிஞருக்குஉடல் நலம் குறைந்து வருவதைக்கண்டு அடிக்கடி ஸ்ரீ வி.என்.கே. யோகாசனம் செய்யச் சொல்வார். கவிஞரும் தள் ளிப்போட்டுக் கொண்டே வருவார். கடைசியில் கை பேனா பிடித்து எழுத முடியாத நிலைக்கு வந்து விட்டது. கவிஞர், எழுத்தாளர்களுக்கு வேறு என்ன வேண்டும்? பின் இசைந்தார், ஆசனம் செய்ய. எங்கள் வீட்டிலேயே ஒரு மாதம் வந்து இருந்தார். தினமும் ஸ்ரீ வி. என். கே. யுடன் ஆசனம் செய்வார். ஏற்கனவே சிறு வயதில் தேகப் பயிற்சி செய்த உடல் ஆனதினால் வெகு சீக்கிரம் ஆசனங் களைக் கற்றுக்கொண்டார். பத்திய உணவு அளிக்கப்பட் டது. பின்பும் அதையே அனுசரித்தார். சில மாதங்களில் பேனா பிடித்தெழுத கை நன்கு வந்துவிட்டது. ஆனால் கால்கள் இன்னமும் சரியானபடி குணமாகவில்லை. பாதி குணம்தான் ஆயிற்று. இன்னமும் நல்ல உணவும், ஆசன மும் கைக்கொள்ள வேண்டுமென்பார், திரு. வி. என். கே. தனக்கு தெரிந்தவர்களையெல்லாம் எப்படியாவது சொல்லி ஆசனத்தைச் செய்யுமாறு செய்துவிடுவார். சில

ருடைய இல்லத்திற்கு இவரே வலியச் சென்றும் சொல்லிக் கொடுப்பார். அவ்வளவு ஆர்வம் யோகாசனப் பிரசாரத்தில் திரு. வி. என். கே.க்கு

## யோகாசன ஆர்வம்

காங்கிரஸ், யோகாசனம், ஆரிய சமாஜம் இவைகளின் சேவையிலே அவருக்கு இந்தியா பூராவிலும் பல அன்புக்குரிய நண்பர்கள் உண்டு. எங்கும் அவரை உள் அன்போடு வரவேற்பார்கள். பம்பாய், கல்கத்தா முதலிய வடநாட்டு நகரங்களிலும் இவர் வியாபார நிமித்தம் சென்றால் வியாபாரத்தைமட்டும் கவனித்துக்கொண்டு வந்து விடமாட்டார். இவர் வருகையை அவர்களும் பயன்படுத்திக்கொள்வார்கள். ஆசனக் கூட்டங்கள் போடப்படும். வெளியூர்களுக்கு சென்றாலும் அங்கெல்லாம் யோகாசனக் கூட்டங்கள் நடைபெறும். எனவே பிற்காலத்தில் யோகாசன வேலையே பெருகிவிட்டது. மற்றவைகளை அவ்வளவாக கவனிக்க முடியாத நிலைக்கு வந்து விட்டது.

## ஸ்ரீ சிவானந்தரின் ஆசி

கல்கியில் எழுதத் துவங்கின ஒரு வருடத்தில், ஒரு நாள் பெரிய புத்தகப் பார்சல் வந்தது. எங்கிருந்து வந்தது என்று பார்த்தால் ரிஷிகேசம், ஆனந்த குடீரத்தில் என்று தெரிந்தது. அவருடைய பெயருக்கே இருந்ததால் வாங்கிக்கொண்டார். அடுத்து வந்த தபால்களில் ஸ்ரீ ஸ்வாமி சிவானந்தரின் கடிதம் இருந்தது. அதில் "நீங்கள் 'கல்கி'யில் மூலமாக யோகாசனத்தை பற்றி மிக நன்றாய்

மக்கள் மனதில் படும்வண்ணம் எழுதி வருவதைத் நான் கண்டு களிப்படைகிறேன். மேலும் மேலும் எழுதி மக்களுக்கு பணியாற்ற கடவுள் அருள்வாராக" என்று ஆசீர்வாதம் அளித்து எழுதினர். "உங்கள் சேவைக்கு எனது புத்தகங்கள் உதவுமென நம்புகிறேன். பார்சல் தனியாக அனுப்பப்பட்டுள்ளது" என்றும் குறிப்பிட்டிருந்தார்.

அவருக்கே ஆச்சரியம்! பெருமை! "என்ன பெருந்தன்மையான குணம்! எவ்வளவு உயர்ந்த கருத்து! இவரல்லவா உண்மை ஊழியர்! நான் யார், எத்தகையவன் என்பதுகூட அவர் அறியமாட்டார். என் எழுத்தைப்பார்த்து இவ்வளவு ஊக்கம் தருகின்றரே" என்று அடிக்கடி பேருவகைப் படுவார். ஆனல் அதே சமயம் ஸ்ரீ சுந்தரமவர்களைப்பற்றி சொல்லாமல் இருக்கமாட்டார். "நானும் அவரும் எவ்வளவு பழகினோம்; அவர் என்னை ஆதரிக்காவிட்டாலும் போகிறது. திட்டாமல் இருந்தால் போதும். இது அவருக்கல்லவா இழுக்கு, அவரைப்பற்றி உலகம் என்ன நினைக்கும் என்றுதான் நான் நினைக்கிறேன். இவர்கள் இரண்டு பேருக்குள் இவ்வளவு வேற்றுமை!" என்று அடிக்கடி சொல்லுவார்.

உண்மையில் ஸ்ரீ சிவானந்தருடைய நூல்கள் எங்களுக்கு உதவின. மற்றும் ஆசன சம்பந்தமாய் யார் யார் எழுதினலும் அவைகளெல்லாவற்றையும் வாங்கி வாசிப்பார். தமிழில் இருப்பதைவிட ஆங்கிலத்தில்தான் அருமையான நூல்கள் ஆசன சம்பந்தமாய் அதிகம் இருக்கின்றன. அவருக்கு ஆங்கிலம் தெரியாது என்று நினைப்பர் சிலர். பள்ளிக்கூடத்தில் படிக்காவிட்டாலும், வியாபாரத்

தில் மற்றும் தனியாகவே பழகிப் பழகி அவருக்கு தாராள மாகப் பேசும் அளவிற்கு ஆங்கிலம் வராதே அன்றி, படிக்கவும், பிரசங்கங்களை கேட்கவும் தெரியும். நானும் படித்துக்காட்டுவேன்.

ஆரிய சமாஜ தலைவர்கள், சந்நியாசிகள், யார் வரினும் எமது இல்லத்தில் பலநாட்கள் தங்குவர். தனிப்பட்ட சந்நியாசிகளும் அடிக்கடி வந்து தங்குவர். அவர்களிடம் நெருங்கிப் பழகி, தர்க்கித்து சிஷ்யராகி கடைசியில் முடிவிற்கு வந்த விஷயம் இவைதான்.

"ஞானம் அடைய அவனவன் பாடுபடவேண்டுமே அன்றி, ஒருவரை பின்பற்றுவதினாலேயோ, அவர் சிஷ்யன் என்று சொல்லிக்கொள்ளுவதினாலேயோ ஞானம் கிட்டி விடாது. இவர்களில் அநேகர் நம்மை ஏணியாக்கிக் கொண்டு, உலகிற்கு இவர்கள் குருக்கள் என்று காட்டிக் கொள்ள விரும்புகின்றனர். அக்கூட்டமே இன்று உலகில் நிறைந்திருக்கின்றது. மக்கள் இதை உணராது, விட்டில் பூச்சியென அவர்களது வலையில் விழுகின்றனர். பல சாஸ்திரங்களை படித்தவன் என்று சொல்லிக்கொள்வது வெறும் படாடோபம். அதில் ஒன்றிரண்டு கொள்கை யாவது நடைமுறையில் செய்து வந்தால் போதும். எதை யாவது ஒரு கொள்கையைக் கடைப்பிடித்து அதற்காக அவன் வாழவேண்டும். கொள்கையில்லா வாழ்க்கை குப்பைக்காட்டுக்கு சமானம்."

எனவே யோசனப் பிரசாரமே தனது கொள்கையாக்கொண்டதால் 'பொய் பேசாமை, புறங்கூறாமை, பொறாமைப்படாமை, இவைகளைக் கடைப்பிடித்தார். எனவே

வாழ்க்கையில் திருப்தியைக் கண்டார். உத்தம குணங்களை வளர்த்தார். ஞான விஷயத்தில் தன் சொந்த முயற்சி யையே கைக்கொண்டார். காலை, மாலை இரண்டு வேளை பிராணாயாமம் செய்யத் தவறமாட்டார். ஊட்டி, கொடைக் கானல் முதலிய இடங்களில் ஐந்து வேளை பிராணாயாமம் நடக்கும். நெடுநேரம் தன்னை மறந்து தியானத்தில் இருப் பார். இவ்வாறு செய்து வரும்போது தனக்கேற்படும் அனுபவங்களை எனக்கு கடிதமூலமாக எழுதுவார்.நேரிலும், வந்தபோதும் சொல்லுவார். கண்ணைமூடினால் ஜோதிப் பிழம்பொன்று தன் நெற்றியில் சுழல்கிறதாக சொல்லு வார். இதையே உன்னிப்பாக பார்த்துவரத் தலைப் பட்டார். சிரசாசனம் செய்யும்போது ஒரு நாள் மணி யோசைக் கேட்டது, உடனே அவர் இறங்கி எங்கு மணி அடிக்கிறார்கள் என்று கவனித்தார். எங்குமே கேட்க வில்லை; பின் சிரசாசனம் செய்தார். சிறிது நேரத்தில் அதே ஓசை மிக ரம்மியமாகக் கேட்டது. மறுபடி இறங் கினார். ஓசைக் கேட்கவில்லை. இவ்வாறு பலமுறை பரீட் சித்து சிரசாசனத்தில் இவ் ஓசைக்கேட்பதை அறிந்தார். நாளுக்கு நாள் அவ்வோசை கண்டாமணி ஓசையாக மாறின. பின் அலை ஓசைகள், இடி ஓசைகள், வீணையின் இனிய நாதம் இம்மாதிரி பலவாறு கேட்பதாகச் சொல் லுவார். பின் சாதாரண தியானத்திலும் இம்மாதிரி கேட் பதாகச் சொல்லுவார்.

இவைகள் அனைத்தும் குளிர் பிரதேசமாகிய ஊட்டி, கொடைக்கானலில் தமக்கு வெகுசீக்கிரம் ஏற்படுவதாகவும் ஆனால் சென்னைவந்தால், சீதோஷ்ணத்தினாலும், வேலைகளின் தொல்லைகளினாலும் அவ்வளவு ஸ்பஸ்டமாக ஏற்படுவதில்லை,

என்றும் சொல்லுவார். ஆனல் தியானத்தில் வெகுநேரம் ஆழ்ந்துவிடுவார். ஒரு நாள் இரவு 8 மணிக்கு ஆசனம் செய்துவிட்டு 8-30 மணிக்கு பிராணயாமம்செய்தார். எனக்கும் வேலையாக இருந்தது. என் அறையில் எழுத உட்கார்ந்து விட்டேன். 10 மணிக்குத்தான் எனக்கு படுக்க வேண்டும் என்ற நினைப்பு வந்தது. வெளியில் வந்து பார்த்தால் இவர் தியானத்தில் அப்படியே தன்னை மறந்து உட்கார்ந்திருக்கிருர். நான் சில சாமான்களை எடுத்துப் போட்டு சத்தத்தை உண்டாக்கினேன். அவர் அறியவில்லை. பின், தட்டி குலுக்கினேன். கண்ணைத் திறந்தார். "என்ன இவ்வளவு நேரம் உட்கார்ந்து விட்டீர்கள்" என்றேன். மணியைப் பார்த்தார். "இவ்வளவு நேரம் உட்கார்ந்து விட்டேனு? எனக்கு ஒன்றுமே தெரியவில்லையே" என்ருர்.

அவர் என்னிடம் கூருத விஷயமே கிடையாது. இதையும் விளக்கிக் கூறினர்." எனக்கு சில நாட்களாக தியானத்தில் உட்கார்ந்த சிறிது நேரத்தில் எந்த நினைவும் எழுவதில்லை. ஏதோ வெகுசுகம் ஏற்படுகின்றது. நான் என்னை மறந்து விடுகிறேன். அந்த சுகத்தையே அனுபவித்துக் கொண்டு உட்கார்ந்து விடுகிறேன்." என்பார். இவைகளெல்லாம் மிக உன்னதநிலைகள். இதை தேர்ந்த யோகிகளிடம் சொல்லி, மேற்கொண்டு விருத்திசெய்யுங்கள் என்பேன். யார் இருக்கின்ருர்கள் எனக்கு விளக்க. காலம்வரும். அது தன்னலேயே விளங்கும் என்பார். நான் மட்டும் யோகி ஸ்ரீ சுத்தானந்த பாரதி, ஐந்தருவி. ஸ்ரீ சங்கரானந்தா ஆகிய இருவரிடம் எம் இல்லத்திற்கு வந்த போது

மேற்படி விஷயத்தைச் சொன்னேன். அவர்களும் "அதை விருத்தி செய்யுங்கள் நல்லது" என்று கூறினார்கள்,

பின் அவர் என்னை தனித்து "இவைகளை எல்லாம் நீ ஏன் சொன்னாய்" என்றார். "மேற்கொண்டு செய்வதைச் சொல்லமாட்டார்களா" என்றேன். "சரி! அவர்கள் சொன்னதை நீ கேட்டாயல்லவா? என்ன உனக்கு புரிந்து விட்டது. இவைகளெல்லாம் அனுபவத்தில் வர வேண்டும்" என்பார்.

## யோகி சுத்தானந்த பாரதியும், யோகாசன பிரசாரகர்களும்

யோகி ஸ்ரீ சுத்தானந்த பாரதியாரை, பத்து ஆண்டுகளுக்கு முன் ஸ்ரீ அரவிந்தர் ஆசிரமத்தில் பார்த்தோம். மௌன விரதம் பூண்டிருந்தார். அப்போது அவர் புத்தகங்களை எழுதி எழுதி குவித்துக்கொண்டிருந்தார். அவருடைய புத்தகங்களைப்படித்தபின் அவர்மேல் எங்களுக்குத் தனி மதிப்பு எற்பட்டு இருந்தது. ஆரியசமாஜ நூல்கள் பலவற்றை அவர் எழுதி யிருக்கிறார். ஸ்ரீ அரவிந்தரும் ஒரு ஆரிய சமாஜி. இவர் ஆசிரமத்தைவிட்டு வெளியில் வந்ததும், சென்னை பிரமுகர்கள், ஆரிய சமாஜிகள், ஆகியோர் பெரிய வரவேற்பளித்தனர். நானும் எனது மாதர் சங்க சார்பாக வரவேற்றேன். அன்று முதல் எங்களுக்கு மிக்க நட்பேற்பட்டது.

இவர் வெள்ளை உள்ளம் படைத்தவர். மூதறிஞர். நல்ல யோகி. இரவில் தூக்கமின்றி எழுதுவார். ஏராளமான புத்தகங்களை எழுதியுள்ளார். அவரைப்போல இரவு பகல் தூக்கமின்றி எழுத யாருக்குமே முடியாது. நல்ல

நடை. தமிழ்த்தாய் அவர்நடையில் களி நடனம் புரிவாள். எழுத்து இருப்பதைப் போல அவர் பேச்சில் எதிர்பார்த் தால் ஏமாற்றம்தான் ஏற்படும். இரண்டும் ஒருவருக்கு அமைவது கஷ்டம். ஸ்ரீ வி. என். கே. யும், ஆரியசமாஜக் காரியதரிசி ஸ்ரீ T. நாராயணனும் ஸ்ரீ சுத்தானந்த பாரதியா ருடன் தென்னுடெங்கும், 15 நாள் விஜயம் செய்து வந்த னர். அந் நாட்களில் ஒரு நாள் கூட அவர் தூங்கியதைக் கண்டதில்லை என்று ஸ்ரீ வி. என். கே. சொல்லுவார். குழந்தை உள்ளம்படைத்தவர் என்பார். இவரிடம் தன்னை எல்லோரும் வணங்கவேண்டும், தான் பெரியவன் என்ற அகம்பாவம் கிடையாது. ஆரிய சமாஜத்தை ஒப்புக்கொண் டாலும், மற்ற அனைவருடனும் ஒத்துப் போகவேண்டும் என்ற சமரஸ கொள்கை உள்ளவர். ஸ்ரீ வி. என். கே. அவர்களுக்கு அவரிடம் ஈடுபாடு அதிகம்.

ஸ்ரீ சங்கரானந்தர் ஐந்தருவி சமீபம் ஒரு சிறிய ஆசிர மத்தை அமைத்துக்கொண்டு இருக்கிறார். அவர் மலையாளத்து வாசியான ஸ்ரீ சிவானந்தரின் சிஷ்யர். உண்மையான சந்நி யாசி. பிறரை அடிமைகொள்ளும் அகம்பாவம் கிடை யாது. எளிமையையே பெருங் குணமாகக்கொண்டவர். புகழுக்காக வாழ்பவரல்ல; தன்னிடம் வருபவர்களுக்கெல் லாம் சித்த மார்க்கமே சிறந்த மார்க்கமென்பதை ஓய்வு ஒழி வின்றி எடுத்துரைத்துக்கொண்டே இருப்பார். அவரும் எங்கள் மேல் மிக்க அன்பு கொண்டவர். நாங்கள் குற்ரு லம் போகும்போதும், அவர் சென்னைக்கு வரும்போதும் நெடுநேரம் அளவளாவுவோம்.

ஒருவரைப் பார்த்ததும் அவரைப்பற்றி நன்கு நிதா னித்து விடுவார். இவர் எத்தன்மையவர் என்பதை எளி

தில் கண்டுகொள்வார். உத்தமர்கள், எளிய சுபாவமுடையவர்கள், அறிவாளிகள் தவிர மற்ற யாருடனும் நெருங்கிப் பழகமாட்டார்.

யோகாசனப் பிரசாரம், இவர் எழுத்தின் திறத்தால் தமிழ்பேசும் நல்லுலகமெங்கும் பலப்படத் தொடங்கின. ஆங்காங்கு பல ஊர்களில் யோகாசன சங்கங்கள் பல தோன்றின. ஏற்கனவே இருந்த யோகாசன சங்கங்கள் இவருடைய எழுத்தால் எழுச்சி அடைந்து தீவிரமாய் பிரசாரம் செய்தன. அவைகளில் கோயம்புத்தூர் ஆரோக்கிய அபிவிருத்தி சங்கம், கும்பகோணம் ஸ்ரீ பதஞ்சலி யோகாசன அப்பியாச நிலையம் ஆகிய இவைகளைக் குறிப்பிடலாம். இவ்விரண்டு சங்கங்களின் கூட்டங்களுக்கு வருடத்திற்கு ஒரு தடவை சென்று ஊக்கமளிப்பார் ஸ்ரீ வி.என்.கே. எல்லோர் உள்ளத்தையும் கவர்ந்து விடுவார். ஆரோக்கிய அபிவிருத்தி சங்கத்தார் பல கிளைகளை நிறுவி மிக அற்புதமாய்பணியாற்றுகின்றனர். அதன் தலைவர் ஸ்ரீ P. நாகிசெட்டியார் சலியா உழைப்பாளி. ஆசனத்தில் மிக்க ஆர்வமுள்ளவர் ; அவர் குடும்பத்தினரும் எங்கள் குடும்பத்தினரைப் போலவே ஆசனப் பிரசாரம் செய்கின்றனர். ஒரே குடும்பத்தினரைப் போலநாங்கள் பழகுவோம்.

குடந்தை ஸ்ரீ பதஞ்சலி யோகாசன அப்பியாச நிலையத்தாரும் மிக்க ஆர்வமுடன் ஆசனப் பிரசாரம் செய்கிறார்கள். அதன் தலைவர் ஸ்ரீ S. சுப்பிரமணிய அய்யர் கைக்கின் எடுத்துக்கொண்டு வீடுவீடாகச் சென்று ஆசன சிகிட்சையால் குணப்படுத்தியிருக்கிறார், பல நோய்களை. அதன் காரியதரிசி ஸ்ரீ P. ஷண்முகம் ஆசனத்தில் மிக்க ஆர்வமுள்ள இளைஞர்.

இவர் "யோகாசன சக்தி" என்ற நூலை எழுதியுள்ளார். இவரும் மிக்க உள்ளன்போடு பழகுவார்.

நானும் ஆசன சம்பந்தமான கட்டுரைகள், பெண் மணிகளுக்கான கட்டுரைகள் பத்திரிகைகளுக்கு அவ்வப் போது எழுதி வந்தேன். அவருடைய எழுத்திற்கும் நான் உதவி செய்வதுண்டு. இங்கு எப்பொழுதும் வேலை மிகுதி யாய் இருப்பதினால் கட்டுரை எழுத அடிக்கடி நாங்கள் இரு வரும் குற்றாலத்திற்குச் சென்று விடுவோம். குற்றாலத்து அருவியில் குளிக்க அவருக்கு மிக்கவிருப்பம். ஒரு நாளில் மூன்று தடவைக்குக் குறையாமல் குளிப்பார். அதன் சுகத்தை அனுபவிக்க அவருக்குத்தான்தெரியும். அவ்வளவு புகழ்வார் அருவி ஸ்நானத்தைப்பற்றி. நிறைய எழுதுவார். என்னை எழுதச் சொல்லுவார். பின் என்னுடையதை அவ ரும், அவருடையதை நானும் சரிபார்ப்போம். எங்கள் இருவருடைய எழுத்தும் கருத்தும் ஒன்றுகவே இருப்பதால் நடையும் ஒன்றுக அமையும். ஓய்ந்த நேரங்களில் திரு. டி.கே. ஸி. அவர்களின் இல்லம் எங்களை அழைக்கும். அங்கு காவியங் களின் ரசத்தை அவர் மூலம் பருகுவோம். கூட உணவுரசத் தையும் பருகுவோம். திரு.டி.கே.ஸி. அவர்கள் எங்கள்பேரில் அலாதி பிரியம் கொண்டவர். எல்லோரும் வீற்றிருக்கும் போது அவரையும், அவர் எழுத்தையும் பிரமாதமாகப் புகழ் வார். "பள்ளிக்கூடமே போகாதவரின் தமிழ் நடையைப் பாருங்கள். இவைகளெல்லாம் வித்வான்களுக்கு அமை யுமா?" என்று பள்ளிக்கூடத்தை ஒழிக்கும் பிரசாரத்தில் இறங்கிவிடுவார். அவர் சொல்வது மட்டுமல்ல செய்கையி லும் காட்டும் தீரர். தன் பேரப்பிள்ளைகளை பள்ளிக்கூடங் களுக்கு அனுப்புவதில்லை. இயற்கை உலகமே பள்ளிக்

கூடம். அதில் தேறிவருபவர்களே அறிவாளிகள். பள்ளிக் கூடத்தில் வாத்தியார்சொல்லி வருவது என்பது கிடையாது'' என்பார். ஆழ்ந்து நோக்கின் அவர் கருத்தை ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். செயலில் காட்டக்கூடிய திறம் வேண்டுமே! நான் தனியாக குற்றாலத்தில் இருந்தால் என்னை சமைக்க விடமாட்டார். "இங்கேயே இருந்து விடுங்கள் அம்மா! உங்களுக்கேனிந்தக்கவலை?" என்பார். பெற்ற தந்தையினும் பெரிது பிரியங்கொண்டவர். அவரி டம் நாங்கள் கற்ற குணங்கள், பாடங்கள் பல பல.

யோகாசன வேலைகள் பெருகவே வெளியூர்களுக்கும் போகவேண்டியதாயிற்று. அப்பொழுதெல்லாம் நானே வியாபாரத்தையும் கவனித்துக்கொள்ளுவேன். பிள்ளைகளை யும் பள்ளிக்கூடம் இல்லா நாட்களில் சனிக்கிழமை, ஞாயிற் றுக் கிழமைகளில் சாயத் தொழிற்சாலைக்குச்சென்று சாய வேலைகளை கற்கச் செய்வார். கோடை விடுமுறை நாட்க ளில் அவர்களைத் தனியே வைத்து வேலைகளை எல்லாம் செய் யப்பழக்குவார். சாவி, பணம் முதல் எல்லா பொறுப்பு களையும் ஒப்படைத்துப் பார்த்துக் கொள்ளச்சொல்வார் பிள்ளைகளை.

Dr. P. வரதராஜுலு எங்களுக்கு ஆரியசமாஜத்தின் மூலம் அறிமுகமானவர். மகரிஷி தயானந்தர் நினைவு நாள் கொண்டாட்டத்தின் போது நான், நமது நாட்டின் பெண் களின்நிலைமை, மூட பழக்க வழக்கங்கள் முதலியவைகளை எல்லாம் எடுத்து பேசினேன். அவர்தலைமை உரையின்போது என்னைப்பற்றி மிக்க சிலாக்கியமாகவும், ஸ்ரீ வி. என். கே. அவர்களின் உயர்ந்த குணத்தைப் பற்றியும் பேசினார்.

அவர் கடைசி பெண் கலியாணத்தின்போது புதுமையான முறையில் கலியாணம் செய்யவேண்டுமென்று, நினைத்தார். எல்லோரும் ஆண் புரோகிதரை வைத்து கலியாணம் செய்வது வழக்கம். நாம் என் பெண் புரோகிதரை வைத்து செய்யக்கூடாது என்பதுதான் அவருடைய விருப்பம். எங்களுக்கு தெரிவித்தார். நாங்கள் வேதமந்திரங்களை ஆரிய சமாஜ ஹவனத்தின்போது சொல்வதைக்கேட்டு அம் முடிவிற்கு வந்தார். எனக்கு அப்பொழுது வெளியூர் போக சௌகரியமில்லை. வீட்டை விட்டுவர சமையல்காரனும் இல்லை. எனவே வர முடியவில்லை என்று எழுதினேன். பின் ஆரிய சமாஜப் புரோகிதரையாவது அழைத்துவரச் சொன்னார். கலியாணம் ஒரு நாள் இருக்கும்போது தான் சமையலுக்கு ஆள் கிடைத்தது. எனவே நானும் புறப்பட்டேன். மாலையில். சர் C. P. ராமஸ்வாமி அய்யர் தலைமையில், ஒரு முதலியார் (புரோகிதர்) பண்டிட் A. சுந்தரம் அவர்கள் ஆரியசமாஜப் புரோகிதம் செய்ய கல்யாணம் இனிது நடைபெற்றது. ஸ்ரீ நாயுடு அவர்கள் புரட்சிகரமான மனப்போக்கு உடையவர். யாருக்கும் அஞ்சமாட்டார். தவறை எடுத்துக் காட்டுவதில் தீரர். அவர் சொல்வதை செயலில் காட்டும் உத்தமர். வெறும் வாய் சொல் வீரரல்ல. அவர் என்றும் எங்கள் பால் தனிப் பிரியம் உடையவர்.

## உள்கட்சி போராட்டம்

1942 ஆகஸ்டு புரட்சி நடந்து சிறிது காலத்தில் தலைவர்கள் விடுதலை ஆனார்கள். அப்பொழுது கிராமணியாரும், நாங்களும் யோசனைசெய்து ராஜாஜியை வரவழைத்து

வடசென்னை காங்கிரஸ் ஊழியர் மகாநாடு ஒன்றை நடத்தினோம். அதில்தான் ராஜாஜி, காமராஜ் அபிப்பிராய பேதம் உண்டாகும்படி பேசினார். இதற்கு எதிர்ப்பாக திருப்பறங்குன்ற மகாநாடு நடந்தது. பின் நாங்கள் ராஜாஜி கட்சியை ஆதரித்தோம். அதனாலேயே எங்களை காங்கிரஸ் கமிட்டிகளிலிருந்து ஒதுக்கினார்கள். இது எங்களுக்கு நன்மையே ஆயிற்று. இல்லையானால் இவ்வளவு தீவிரமாக யோகாசனப் பிரசாரம் செய்திருக்க முடியாதல்லவா?

அந்த கட்சிப்பூசல் இன்னமும் தீர்ந்தபாடில்லை. வெளியில் இல்லை என்றுதான் சொல்லுகிறார்கள். ஆனால் உள்ளுக்குள் புகைந்தோடிக் கிடக்கின்றது. ராஜாஜி பெரிய அறிவாளி. அவருடைய சேவை, யோசனை நமது நாட்டிற்கு வேண்டும் என்பதற்காக ஆதரித்தோம். அதனால் ஸ்ரீ காமராஜ் வேண்டாம் என்று அர்த்தமல்ல. ராஜாஜியிடம் பல அறிய குணங்கள் இருப்பதைப் போல சில பிடிக்காத குணங்களும் உண்டு. யாரையும் சமத்துவமாக நடத்தமாட்டார். ஒருவரையும் உற்சாகம்தந்து ஊக்க மாட்டார். தான் மற்றவர்களைவிட மேலானவர் என்ற மனப்பான்மையிலேயே பழகுவார். தான் செய்வது சொல்லுவது எல்லாமுமே சரியானது என்று நினைப்பார். காமராஜ் பெரிய அறிவாளியாக இல்லாவிட்டாலும் 1937 வருடம் காமராஜுக்கும் இப்போதுள்ள காமாராஜுக்கும் எவ்வளவோ வித்தியாசம் உண்டு. உழைத்து, உழைத்து நல்ல அனுபவம் ஏற்பட்டு விட்டது. சலியா உழைப்பால் நல்ல திறமைசாலியாகிவிட்டார். நாங்கள் யாரிடமும் நெருங்கிப்பழகினதுகிடையாது. ஆனால் எங்கள்மேல் இருவருக்குமே நல்ல அபிப்பிராயம் உண்டு.

1954 வருடம் செப்டம்பர் மாதம் துரதிஷ்டம் பிடித்த மாதம். தசராலீவ் வந்தது. அவர் என்னிடம் "நீ தனியே குற்றாலம் சென்று. வேண்டிய கட்டுரைகளை சிலவற்றை எழுது. நான் ஒரு வாரத்தில் வந்து எல்லாம் சரி பார்த்து மேலும் எழுதுகிறேன்" என்றார். குழந்தைகள் மைசூர் சென்று தசரா வேடிக்கை பார்க்க வேண்டும் என்றனர். எனவே மைசூர் செல்லுவதென தீர்மானமாயிற்று. அவர் வரவில்லை என்று சொல்லி விட்டார்.

மூத்தமகன் ஸ்ரீதரன் கார் ஓட்ட நான் பிரபாகரன், கருணாகரன் ஆகிய மைந்தர்களுடன் காரிலேயே போவதென்று முடிவாயிற்று. 23ஆம் தேதி டிராவலிங் ஏஜன்ட் ராம்மோஹன் கம்பெனியின் மானேஜிங்டைரக்டர் அவர்களை நானும்அவரும் சந்தித்தோம். 29—9—55ல் இவ்விடமிருந்து புறப்படுவதென்றும் மைசூரில்தங்க ஓட்டல் வசதி, தர்பார் பாஸ் முதலியவைகள் ஏற்பாடுசெய்தோம். 24 ஆம் தேதி மாலை நானும் அவரும எங்கள் நூல் கடைக்குச்சென்றோம். என்னை நன்பர் ஸ்ரீ B. ரங்கசாமி நாய்க்கர் அவர்களின் இல்லத்திற்குச்சென்று மைசூர் அனுபவத்தை விசாரித்துவரச் சொன்னார். அவர்கள் சென்றவருடம் போய் பார்த்தார்களானதினால் அங்குள்ள சௌகரியங்களை தெரிந்துக்கொள்ள அனுப்பினார். "போய்வரும்போது கடைக்குவா ஒருக்கால் நான் சீக்கிரமாக வீட்டிற்குப் போனாலும் போய்விடுவேன். எனக்கு இராயபுர ஹரிஜன சேவாசங்கத்தில் கூட்டமிருக்கிறது. நான் இல்லாவிட்டால் நீ கடையிலுள்ள நூல் பெட்டிகளைக்கொண்டுவா" என்றார்.

# இறுதி மூச்சு!

நான் ஸ்ரீ B. அரங்கசாமி நாய்கர் வீட்டிற்குச் சென்று பேசிவிட்டு சுமார் 8-30-க்கு கடைக்கு வந்தேன். அவர் இல்லை. நூலைக் காரில் ஏற்றிக்கொண்டு வீட்டிற்கு வந்தேன். சாப்பிட்டுக்கொண்டிருந்தார். அன்று இரவு இட்லி சட்டினி. நானும் அவருடன் உட்கார்ந்து சாப்பிட்டேன். அவர், சீக்கிரமாக பஸ்ஸில் வந்து ஸ்ரீதரனை சிறிய கார் எடுக்கச் சொல்லி அதில் கூட்டத்திற்குப் போய் வந்த விவரத்தைச் சொல்லிக்கொண்டே சாப்பிட்டார். இப்பொழுதெல்லாம் சாப்பிட்ட பின் வேலை செய்ய உட்காருவதில்லை. பல நாட்கள் நான் தடுத்துத் தடுத்து, சுமார் ஆறுமாத காலமாகவே இரவில் சாப்பிட்டபின் ஏதாவது விளையாடுவார். குழந்தைகள் விழித்துக்கொண்டிருந்தால் அவர்களையும் சேர்த்துக்கொள்வோம். யாரும் இல்லையானால் இருவர் மட்டும் ஆடக்கூடிய 'டிராட்ஸ்' என்ற விளையாட்டை விளையாடுவோம். அன்று இரவு 10-30 மணி வரை ஆடியிருப்போம். பின் நான் பாத்ரூம் போய்விட்டு வந்து என் படுக்கையில் படுத்துவிட்டேன்.

அவர் கீழே இறங்கி வந்து வாசல் கதவுகள் சரியாகப் பூட்டப்பட்டிருக்கின்றனவா எனச் சரிபார்த்துவிட்டு, பாத்ரூம் சென்றுவிட்டு, அவருடைய படுக்கையின் தலையணைக் கடியில் சாவிகொத்து, கைக் கெடியாரம் முதலியவற்றை வைத்து விட்டு, தன்மேல் துண்டை படுக்கையில்மேல் விரித்து, போர்வையை பக்கத்தில் தயாராக விரித்து வைத்தார். என் கட்டிலில் வந்து உட்கார்ந்தார். ஏதோ சொல்லப்போகிறார் என்று நான் எழுந்து உட்கார்ந்தேன்.

"O. R. ஸ்ரீநிவாசன் முதல் நாள் இரவு வந்து இங்கு தங்கி, மறுநாள் காலை வகுப்பு ஆரம்பிப்பதாகச் சொன்னார். நானோ மாணவர்களையெல்லாம் வரச்சொல்லியிருக்கிறேன். ஆனால் O. R. S. இன்னமும் வரவில்லையே" என்றார்.

10 நாட்களுக்கு முன்தான் தேசிய உடற் பயிற்சி சாலை என்ற ஒரு ஸ்தாபனம் துவக்கப்பட்டது. ஸ்ரீ O. R. ஸ்ரீநிவாசன் என்பவர் இராமகிருஷ்ண இல்லத்தில் உடற் பயிற்சி ஆசிரியர். கும்பகோணம் பதஞ்சலி யோகாசன அப்பியாச நிலையத்தின் ஆண்டு விழாக்களுக்கு ஸ்ரீ வி. என். கே. போவார். அப்பொழுது அவர் செய்யும் பல அற்புத விளையாட்டுகளைப்பற்றி என்னிடம் அடிக்கடி சொல்லுவார். தமது பிள்ளைகளுக்கு வெறும் யோகாசனம் மட்டும் போதாது; மற்ற உடற்பயிற்சிகளிலும் தேறவேண்டும் என்ற கருத்துடனும், இப் பேட்டைவாசிகளுக்கும் உப யோகமாய் இருக்கவேண்டுமென்றும், ஸ்ரீ O. R. ஸ்ரீநிவாசனை ஆதரித்ததாகவும் இருக்குமென்றும் இந்த தேசிய உடற் பயிற்சி சாலை துவங்கப்பட்டது.

24-9-54 உ நல்ல நாளாய் பார்த்து கற்கும் மாணவர் களை வரச்சொல்லி, ஸ்ரீ O. R. ஸ்ரீநிவாசனுக்கும் கடிதம் எழுதியிருந்தார். மறு நாள் காலை 25 உ வகுப்பு ஆரம்ப தினம். எனவே அந்த கவலை அவருக்கு ஏற்பட்டது போலும்.

நான் "பார்ப்போம், ஒருக்கால் அதிகாலைவந்து விடுகி றாரோ என்னமோ" என்றேன்.

நான் இதைச் சொல்லுவதற்குள் பக்கத்தில் உட்கார்ந் திருந்த அவர் என் தோள்மேல் தலையை வைத்தார். நான்

சகஜமாகவே நினைத்திருந்தேன். ஆனால் நான் சொன்ன தற்கு மறுமொழி சொல்லவில்லை. எனக்கு தலை என்னமோ ஸ்வாதீனமில்லாமல் பாரமாக இருப்பதுபோல தென் பட்டது. வயிறு பகீர் என்றது. ஏன் நீங்கள் இப்படியே சாய்ந்துக்கொண்டிருக்கின்றீர்கள் என்று நிமிர்த்தினேன். தலையை தொங்கப்போட்டுவிட்டார்.

சுயநினைவின்றி என்மேல் சாய்ந்தார். எனக்கு ஒன்றுமே ஓடவில்லை. தட்டுகிறேன், குலுக்குகிறேன், என்ன உடம்பிற்கு? ஏன் இப்படி? என்று அரற்றுகிறேன். ஒருதடவை விக்கல் வந்தது. தண்ணீரை வாயில் ஊற்றி னேன். உள்ளுக்குச் செல்லவில்லை. நான் உடனே கீழே படுத்திருக்கும் வேலைக்காரியைக் கூப்பாடு போட்டு கூப்பிட்டேன். பிள்ளைகள் மேல் மொட்டை மாடியில் படுத்திருந்தனர். அவர்களை அழைத்து வரச் சொன்னேன். குழந்தைகள் வந்தனர். ஸ்ரீதரன் நிலைமையை உணர்ந்து தன் தகப்பனாரின் உடலின்மேல் விழுந்து அப்பா அப்பா என்று அலறத்தொடங்கிவிட்டான். குழந் தைகள் ஓவென்று அழுகின்றனர். நான் உடனே டாக்டர் வீட்டிற்கு காரைக்கொண்டுபோய் டாக்டரை அழைத்துவா என்று ஸ்ரீதரனை விரட்டினேன். காரை எடுத்துக்கொண்டு ஓடினான் தம்பியுடன். இதற்குள் பக்கத்தில் இருக்கும் வேலைக்காரர்கள், குடிசைவாசிகள் பலர் எங்கள் கூக்குர லைக் கேட்டு வந்துவிட்டனர். எனக்கு ஒன்றுமே புரிய வில்லை. மூச்சை அடைத்திருக்குமோ என்று வாயில் ஊதி னேன். தொண்டையில் களகள என்று சப்தம் கேட்டது. மறுபடி விக்கல் வந்தது. அத்துடன் நான் வாயில் விட்ட சிறிது ஜலமும் வந்துவிட்டது. “ஸ்டெதாஸ்கோப்” பை

கொண்டுவரச் சொல்லி பார்த்தேன். மார்புத் துடிப்பு சிறிது சிறிதாக தணிந்துக்கொண்டு வருவது நன்கு தெரிந்தது. தெரிந்து என் செய்வது? மார்பைத் துடிக்கவைக்க மூச்சு வாங்கவேண்டும். எப்படி மூச்சை வாங்கச்செய்வது? பலங் கொண்டமட்டும் மூக்கு, வாய் இவைகளில் நான் ஊதி ஊதி இழுத்தேன். ஒன்றுமே முடியவில்லை. கடைசியில் மற்றொரு விக்கல் வந்தது. எல்லாம் முடிந்துவிட்டது.

இதற்குள் டாக்டர் சோமண்ணு தம் பிள்ளையுடன் வந்து சேர்ந்தார். சோதித்தார். ஒன்றும் செய்வதற்கில்லை. இருதயம் நின்றுவிட்டது என்றார். ஆனால் முயன்று பார்க்கி றேன் என்று ஒரு ஊசிப்போட்டார். எந்த மாறுதலும் ஏற்படவில்லை. நான் பலமாக அழுதுவிட்டேன். "உங்க ளால்கூட முடியாதா? கடவுளே இனி என்கதி என்ன? இவ்வளவுதானு மனித வாழ்க்கை:' என்று அரற்றினேன். "பிராணவாயு பிரயோகம் செய்யலாமென்று சொல்லுகி ருர்களே, ஆஸ்பத்திரிக்கு அழைத்துபோகலாமாஎன்றேன்?" "இருதயம்நின்றபின் ஒன்றும் செய்ய முடியாதம்மா" என்று அவரும் கண் கலங்கினர். அதற்குள் டாக்டரின்மைந்தன் ஸ்ரீதரனை அழைத்துக்கொண்டுபோய் சமீபத்திலுள்ள Dr. சுந்தரத்தை அழைத்து வந்தார். அவரும் சோதனை செய்து பார்த்து "எல்லாம் முடிந்துவிட்டது; ஒன்றும் செய்ய முடியாது" என்றார்.

நான் இதற்குள் பிரபாகரனை நாத்தனார் வீட்டுக்கும், மற்றும் சொந்தக்காரர் வீடுகளுக்கும் போகச்சொல்லி அனுப்பினேன். அனைவரும் வந்து சேர்ந்தனர். மற்ற வேலைக்காரர்களும் வந்து சேர்ந்தனர். கீழே கொண்டு

செல்லப்பட்டார். இத்தனைநாள் மழை இல்லாமல் இருந்தது. அப்பொழுது பெருத்த மழை ஆரம்பித்துவிட்டது. பின் நடந்ததைப் பற்றி விவரிப்பானேன்! உலகமே இருண்டுவிட்டது. பின் ஊரே திரண்டு வந்ததுபோல் இருந்தது. துக்கத்திலும் பெருமைக்கொண்டாடுவதா?

ஆரியசமாஜ முறைப்படி எல்லாம் நடந்து முடிந்தது. என் வாழ்க்கை? இனி நான் என் செய்வது? ஆம்; குழந்தைகளுக்காக வாழவேண்டும். பெரியமைந்தன் ஸ்ரீதர் வயது 18. B. Sc. முதல் வருடம் படித்துக்கொண்டிருந்தான். இரண்டாவது பையன் பிரபாகரன் இண்டர் முதல் வருடம். மற்றவர்கள் இரண்டு, மூன்று வகுப்புகள் குறைவு. கடைசி குழந்தை ரவிக்கு வயது ஆறு. இந்த குழந்தைகளை வளர்த்து வளமாக்கி உலகுக்கு சமர்ப்பித்து விட்டால் என் கடன் தீர்ந்து விடுகின்றது. இம் முயற்சியில் நான் சீக்கிரமாக அவர் பாதம் அடைந்தாலும் வரவேற்கிறேன். கடவுள் விட்டவழி விடட்டும் என்று மனதைத் திடப்படுத்தி, குழந்தைகள் படிப்பை முடித்து வரட்டும் என்று நான் வியாபாரத்தைக் கவனித்து வருகிறேன்.

அவருடைய கருத்திலே உருவான நான், குழந்தைகளையும் அந்தலட்சியத்திற்காக உருவாக்க முயற்சிக்கிறேன். 22 வருட இன்ப வாழ்க்கை ஒரு நொடியில் பொடிப் பொடியாகிவிட்டது. 'மனித உயிர் இவ்வளவு அற்பமானதா' என்ற எண்ணமே மேலோங்குகின்றது.

நான் செய்துவரும் காரியங்கள் பலவற்றிற்கு அவருடைய ஆலோசனை இன்னும் கிடைத்து வருகின்றது. இரவில் நாங்கள் சந்திக்காத நாளே கிடையாது. விவாதிப்.

போம்; விளையாடுவோம் பிரயாணம் செல்லுவோம். தொழிற் சாலைகளைப் பார்ப்போம்; நடந்து செல்வோம்; படிப்போம்; எழுதுவோம். இவை எல்லாம் கனவில்தான். ஆனால் எதைக் கனவு என்று சொல்வது?...

முன் பிறவியில் எத்தனை புண்ணியம் செய்து இந்த உத்தமரை அடைந்தேனே! என்னைப்போல பாக்கியம் யார் செய்திருக்க முடியும்! ஆனால் புண்ணியம் செய்த அளவு பாபமும் செய்திருக்கவேண்டும். இல்லையானால் அவ்வுத்தம ரைப் பிரிந்து வாழும் கொடுமையான தண்டனையும் கிடைத் திருக்காதல்லவா?



# ஆரோக்கிய யோகாஸ்ரமம்

216, திருவொற்றியூர் ஹைரோட்,
தண்டையார்பேட்டை, சென்னை-21.

---

## யோக சிகிச்சை

### சகல நோய்களுக்கும் பரிகாரம்!

ஆஸ்துமா-Asthma, நீரிழிவு-Diabetes, குடல் நோய்-Appendicitis, மூலநோய்-Piles, க்ஷயம்-Consumption, T.B., ஹிஸ்டீரியா-Hysteria, மலேரியாக் கட்டி-Spleen Enlargement, நரம்புத்தளர்ச்சி Nervous Disability, முடக்கு வாதம்-Rheumatism. வாதம்-Paralysis, மேக வியாதி-Syphilis, சொறி சிரங்கு-Eczema, தொண்டையில் சதை வளர்தல்-Tonsil, மூக்கில் சதை வளர்தல்-Adinoid, இரத்த அழுத்தம்-Blood Pressure, இதயக் கோளாறு-Heart Disease, ஆல்புமின்-Albumin, மலச்சிக்கல்-Constipation, தலைவலி-Head-ache முதலிய நோய்களுக்கும், மற்றும் பல வியாதிகளுக்கும், யோகாசன, பிராணயாமப் பயிற்சிகளுடன் உணவு ஒழுக்கத் திட்டங்கள் அளிக்கப்படும்.

நோய்கள் அற்ற சுக தேகிகளும் யோகாசன, பிராணயாமம், முதலியவைகளைக் கற்றுக்கொண்டு என்றும் எப்பொழுதும் சுகமாய் நோயின்றி ஆரோக்கியமாய் வாழலாம்.

நேரிலோ, தபால் மூலமாகவோ யோகாசன சிகிச்சையும், ஆலோசனைகளையும் பெறலாம். விபரங்களுக்குப் போதுமான தபால் தலையுடன் எழுதுங்கள்.

இங்ஙனம்,
**ஸ்ரீ நாலக்ஷிரி குமாரஸ்வாமி,**
யோகாசன ஆசிரியர்.